

வாழ்க்கை ஓட்டத்தில் கலந்து, வகை வகையான நிகழ்வு களை எதிர்கொண்டு, சுவையாக விவரிப்பதற்கு ஏற்ற பல்வேறு அனுபவங்களை நான் சுவைத்ததுமில்லை; சுவைக்க ஆசைப்பட்டதும் இல்லை. வாழ்க்கை நதியின் ஓரத்தில் ஒதுங்கி நின்று அனைத்தையும் அனைவரையும் சும்மா வேடிக்கையாகப் பார்த்துத் திருப்தி அடைந்த எளியவன் நான். இப்போதும் அப்படித்தான் இருக்கிறேன்.

'வல்லிக்கண்ணனின் வாழ்க்கைச் சுவடுகள் நூலால் தமிழ் நாட்டின் இலக்கிய, மொழி, சமுதாய, வரலாற்றுச் செய்திகள் தெளிவாகின்றன. அவர் காலத்திய சமுதாய வாழ்வின் சுவடுகளாகவும், மக்களின் பண்பாட்டுச் சுவடு களாகவும் விளங்குவன. அவருடைய எழுத்தின் வரலாறு மட்டுமல்ல, அவர் காலத்திய பிற எழுத்தாளர்களின் எழுத்து வரலாறும் பதிவு செய்யப்பட்டுள்ளன. மானுட நேயத்தின் வரலாறாகவும் விளங்குகின்றது.'

பேராசிரியர் இ. சுந்தரமூர்த்தி அவர்கள் எனது 'வாழ்க்கைச் சுவடுகள்' நூல் பற்றி இவ்வாறு குறிப்பிட்டிருக் கிறார். இக்கூற்று 'நிலைபெற்ற நினைவுகள்' எனும் இந்த நூலுக்கு அதிகமாகப் பொருந்தும்.

# நிலைபெற்ற நினைவுகள்

## (முதல் பாகம்)

வல்லிக்கண்ணன்




சந்தியா பதிப்பகம்
ஃப்ளாட் ஏ, நியூடெக் வைபவ்,
57 - 53ஆவது தெரு, அசோக் நகர்,
சென்னை - 600 083.
தொலைபேசி : 24896979, 55855704

நிலைபெற்ற நினைவுகள் (முதல் பாகம்)
*ஆசிரியர் :* வல்லிக்கண்ணன் ©
*முதற்பதிப்பு :* நவம்பர், 2005
*பதிப்பாளர் :* சந்தியா நடராஜன் – சந்தியா பதிப்பகம்
ஃப்ளாட் ஏ, நியூடெக் வைபவ், 57 – 53ஆவது தெரு, அசோக் நகர்,
சென்னை – 600 083. ✆ : 24896979, 55855704
*அளவு :* டெமி 1 × 8; *பிரதிகள்* : 1000
*பக்கம்* : 240; *தாள்* : 16 கி. கிராஃபிக் ஒயிட்
*அட்டை வடிவமைப்பு :* டிராட்ஸ்கி மருது – ஸ்டுடியோ 5
*அச்சுக்கோப்பு :* அகம், சென்னை – 5
*அச்சாக்கம் :* சென்னை மைக்ரோ பிரிண்ட் பி. லிமிட்., சென்னை
விலை : ரூ. 100

| | | |
|---|---|---|
| Title of the book | : | NILAIPETRA NINAIVUGAL (First Part) |
| Author | : | VALLIKKANNAN |
| Subject | : | Autobiography |
| Edition | : | First edition; November 2005 |
| Size of the book | : | Demi 1 × 8 |
| No. of copies | : | 1000 |
| No. of pages | : | 240 |
| Paper used for text | : | 16 kg. Graphic white |
| Printing point | : | 11 pt. |
| Typeset at | : | Agam, Chennai - 5 |
| Cover design | : | Trotsky Marudu - Studio 5 |
| Printed at | : | Chennai Micro Print Pvt Ltd., Chennai |
| Published by | : | **Sandhya Pathippagam**<br>Flat A, Neutech Vaibhav<br>57 - 53rd street, Ashok Nagar<br>Chennai - 600 083<br>Tamilnadu, South India<br>Ph : 044 - 24896979, 55855704 |
| Publisher | : | Sandhya Natarajan |
| Price | : | **Rs. 100/-** |

# பதிப்பாளர் குறிப்பு

வல்லிக்கண்ணனின் 86ஆவது பிறந்த நாளன்று இக்குறிப்பு எழுதப் படுவதிலும், அவருடைய சுயசரிதையின் முதல் பாகத்தைக் கொண்டு வருவதிலும் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறோம். எளிய மனிதர் அவர். அதேசமயம் தன் நம்பிக்கைகளுக்காக முழு வாழ்க்கையையும் ஒப்புக் கொடுத்த காந்தி யுக லட்சிய மனிதர். அவர் தன்னைப் பற்றி இப்படிக் கூறுகிறார்:

> 'வாழ்க்கை நதியின் ஓரத்தில் ஒதுங்கி நின்று அனைத்தையும் அனைவரையும் சும்மா வேடிக்கையாகப் பார்த்துத் திருப்தி அடைந்த எளியவன் நான். இப்போதும் அப்படித்தான் இருக்கிறேன்.'

வேடிக்கை பார்க்கும் இந்த எளிய மனிதரின் சுயசரிதை இது. எனினும், வேடிக்கை மனதின் பார்வையிலிருந்து உருவான பதிவு என்பதாலேயே அக்கால கலை, இலக்கிய, சமூக, கலாச்சார, வாழ்வியல் வரலாறாகவும் இச்சரிதை விரிந்திருக்கிறது. இச்சுயசரிதை இரண்டு பாகங்களாக அமைகிறது. முதல் பாகத்தில், அவர் சரிதையினூடாக, தென் தமிழகக் கிராமங்கள், ஊர்கள், சிறுநகரங்கள் ஆகியவற்றின் மாற்றங்களும், அவற்றில் வாழ்ந்த மனிதர்கள் வாழ்வில் நிகழ்ந்த மாற்றங்களும் அற்புதமாகப் பதிவாகியிருக்கின்றன. ஒரு காலகட்டத்தின் கதையாக இது உருவாகியிருக்கிறது.

அவருடைய பிறப்பிலிருந்து, 'எழுத்துத் துறையில் வளர்ந்து முன்னேறுவதற்காக' 3 ஆண்டுகள் 7 மாதங்கள் பார்த்த அரசாங்க ஆபிஸ் குமாஸ்தா வேலையைத் 'தன் மனக்குரலுக்கு செவி சாய்த்து' உதறிய காலம் வரையான அவர் வாழ்க்கைக் கட்டம் முதல் பாகமாக அமைந்திருக்கிறது.

சுயசரிதை வரலாற்றில் ஒரு மிகச் சிறந்த புத்தகம் இது. இதை வெளியிடுவதில் சந்தியா பதிப்பகம் பெருமிதம் கொள்கிறது. தமிழ் வாசகர்கள் இதைப் பெரிதும் வரவேற்பார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது.

இரண்டாம் பாகத்தை எழுதும் பணியில் தற்சமயம் வல்லிக்கண்ணன் இருக்கிறார். அதுவும் தமிழ் வாசகர்களை விரைவில் வந்தடையும்.

12. 11. 05
சென்னை

*சந்தியா நடராஜன்*

# முன்னுரை

அனைத்துத் தரப்பினரும் வியந்து பாராட்டக்கூடிய ஒரு சாகச நாயகன் (ஹீரோ) இல்லை நான்.

நான் ஒரு சாதாரணன். எனது வாழ்க்கையும் சாதாரண மானதுதான். பலரையும் வசீகரிக்கக்கூடிய வாழ்க்கை அனுபவங் கள் எனக்கு எதிர்ப்பட்டதும் இல்லை. அத்தகைய சுவாரசியமான அனுபவங்களை நான் தேடிச் சென்றதுமில்லை; ஆக்கிக்கொள்ள வும் இல்லை.

வாழ்க்கை ஓட்டத்தில் கலந்து, வகை வகையான நிகழ்வுகளை எதிர்கொண்டு, சுவையாக விவரிப்பதற்கு ஏற்ற பல்வேறு அனுபவங்களை நான் சுவைத்ததுமில்லை; சுவைக்க ஆசைப் பட்டதும் இல்லை. வாழ்க்கை நதியின் ஓரத்தில் ஒதுங்கி நின்று அனைத்தையும் அனைவரையும் சும்மா வேடிக்கையாகப் பார்த்துத் திருப்தி அடைந்த எளியவன் நான். இப்போதும் அப்படித்தான் இருக்கிறேன்.

இந்நிலையில் என் வாழ்க்கைக் கதையை நான் ஏன் எழுதவேண்டும் என்கிற எண்ணம் எனக்கு என்றும் உண்டு.

ஆனாலும் என் கதையை நான் மீண்டும் மீண்டும் சொல்ல நேரிட்டவாறு இருக்கிறது. வாழ்வின் இந்த விபரீதமுரணும் எனக்கு வேடிக்கையாகப் படுகிறது.

என் நண்பர்களும், என் எழுத்துக்களைப் படித்து ரசித்த அன்பர்களில் அநேகரும், நான் பார்த்த வாழ்க்கையும் அது என்னில் ஏற்படுத்திய மனப் பதிவுகளும் எழுத்தில் பதிவு செய்யப் பட வேண்டியவை. உங்களுடைய வாழ்க்கை சாதாரணமானது என்று நீங்கள் கருதுகிறீர்கள். நீங்கள் ஏற்று வாழ்ந்த வாழ்க்கை முறையை சாதாரணமாகப் பலரும் ஏற்று நடக்க இயலாது

என்பதை நாங்கள் அறிவோம். நீங்கள் நடந்துவந்த வாழ்க்கைப் பாதையைப் பற்றி, வழியில் நீங்கள் கண்டறிந்தவை பற்றி, பார்த்த மனிதர்களைப் பற்றி எல்லாம் எழுதுங்கள். அவை முக்கியமான வரலாற்றுக் குறிப்புகள் ஆகும். அவற்றை நீங்கள் பதிவு செய்ய வேண்டியது அவசியம் என்று பலமுறை வலியுறுத்தினார்கள்.

அதனால், நான் எனக்கு எண்பதாவது வயது நிறைவுற்றதும் 'வாழ்க்கைச் சுவடுகள்' என்ற பெயரில் என் மனப்பதிவுகளை எழுதினேன். அவை 2001இல் நூல்வடிவம் பெற்றன. அந்த நூல் நல்ல வரவேற்பையும் பெற்றது.

எனினும், என் நண்பர்களில் முக்கியமான சிலருக்கு ஒரு மனக்குறை இருந்தது. நான் வாழ்ந்த காலத்தைப் பற்றியும், காலமும் நாட்டின் நிலைமைகளும் என்னுள் ஏற்படுத்திய தாக்கங்கள் அவை பற்றிய என் கருத்துக்கள் குறித்தும் நான் விரிவாக எழுதியிருக்க வேண்டும் என்று அவர்கள் கருத்து தெரிவித்தார்கள். எனவே மேலும் விரிவாக நான் என் வாழ்க்கைச் சரிதையை எழுத வேண்டும் என்று நண்பர்கள் கோரிக்கை விடுத்தவாறு இருந்தார்கள்.

எனது பிள்ளைப் பருவம், பள்ளிப்பருவம், உத்தியோக அனுபவங்கள் பற்றி எல்லாம் இதுவரை போதுமான அளவு சொல்லப்படவில்லை; அவற்றை விரிவாக எழுதவேண்டும் என்று சில நண்பர்கள் குறிப்பிட்டு வந்தார்கள்.

ஆனாலும், என் இயல்புப்படி நான் 'காலத்தை ஏலத்தில் விட்டவாறு' என் கதையை எழுதாமலே இருந்தேன். என் அன்புச் சகோதரர் தி. க. சிவசங்கரன் என்னை அப்படி இருக்க விடவில்லை.

வல்லிக்கண்ணன் அவரது வாழ்க்கை வரலாற்றை விரிவாக எழுதுகிறார்; நீங்கள் அதைக் கண்டிப்பாய் புத்தகமாகப் பிரசுரிக்க வேண்டும் என்று சந்தியா நடராஜன் அவர்களிடம் பேசி உறுதி செய்துவிட்டு எனக்குத் தெரிவித்தார். என்னிடம் மிகுந்த அன்பும் மதிப்பும் கொண்டுள்ள நண்பர் கழனியூரனும் இவ்வகையில் தூண்டுதலாகச் செயலாற்றினார்.

சந்தியா நடராஜனும் நண்பர்களின் வேண்டுகோளை அன்புடன் ஏற்று நான் இந்த நூலை எழுதுவதற்கு எனக்கு உந்துதல் தந்தார்.

இவர்கள் மூவருக்கும், என் வாழ்க்கை வரலாற்றை விரிவாக எழுதும்படியும், விரைவாக எழுதி முடிக்கும்படியும் கடிதங்கள் மூலம் தூண்டிக்கொண்டே இருக்கும் மற்றுமுள்ள நண்பர்களுக்கும் என் நன்றியைத் தெரிவிக்கிறேன்.

இந்த நவம்பர் மாதம் எனக்கு 85 வயது நிறைவுபெறுகிறது. எனது மூன்றாவது வயது முதல் என் உள்ளத்தில் ஆழப் பதிந்துள்ள நினைவுகளை நான் இந்த நூலில் பதிவு செய்திருக் கிறேன்.

'வல்லிக்கண்ணனின் வாழ்க்கைச் சுவடுகள் நூலால் தமிழ் நாட்டின் இலக்கிய, மொழி, சமுதாய, வரலாற்றுச் செய்திகள் தெளிவாகின்றன. அவர் காலத்திய சமுதாய வாழ்வின் சுவடு களாகவும், மக்களின் பண்பாட்டுச் சுவடுகளாகவும் விளங்குவன. அவருடைய எழுத்தின் வரலாறு மட்டுமல்ல, அவர் காலத்திய பிற எழுத்தாளர்களின் எழுத்து வரலாறும் பதிவு செய்யப் பட்டுள்ளன. மானுட நேயத்தின் வரலாறாகவும் விளங்குகின்றது.'

பேராசிரியர் இ. சுந்தரமூர்த்தி அவர்கள் எனது 'வாழ்க்கைச் சுவடுகள்' நூல் பற்றி இவ்வாறு குறிப்பிட்டிருக்கிறார். இக்கூற்று 'நிலைபெற்ற நினைவுகள்' எனும் இந்த நூலுக்கு அதிகமாகப் பொருந்தும். நிலைபெற்ற நினைவுகளை இரண்டு பகுதிகளாகச் சிறப்பான முறையில் வெளியிடுகிற சந்தியா பதிப்பகத்துக்கு என் நன்றி உரியது.

சென்னை
3. 11. 05

**வல்லிக்கண்ணன்**

காலம் ஓடிக்கொண்டிருக்கிறது.

ஆதியும் அந்தமும் வரையறுக்க முடியாத காலவெளியில் நான் எண்பத்தைந்து ஆண்டுகளாக பயணம் செய்துகொண்டிருக்கிறேன்.

ஓடும் காலம் ஒவ்வொருவரிடமும் விதம்விதமான அனுபவங்களை பதித்துச் செல்கிறது. அவை மனித உள்ளத்தில் நினைவுகளாக ஆழ்ந்துவிடுகின்றன.

மனிதக்குழந்தை, பொதுவாக, தனது மூன்று மூன்றரை வயதில் நிகழ்ந்த சம்பவங்களையும் எதிர்ப்பட்ட அல்லது சுற்றியிருந்த மனிதர்களையும், தன்னை பாதித்த மற்றும் தாக்கம் ஏற்படுத்தியவற்றில் பலவற்றையும் பிற்காலத்தில் நினைவுகூர இயலும். இது உளவியல் கூறும் உண்மையாகும்.

சில சந்தர்ப்பங்களில், அபூர்வமான நுண்ணுணர்வு பெற்ற மனிதர்கள் அவர்களது இரண்டு இரண்டரை வயது அனுபவங்களை, அப்போது ஏற்பட்ட மனப்பதிவுகளை, பின்னர் எண்ணிப் பார்க்கையில் நினைவுகூர இயலும் என்றும் சொல்லப்படுகிறது.

எனக்கு அத்தகைய நுண்ணுணர்வு ஆற்றல் இல்லை. எனது மூன்று - மூன்றரை வயதில் நிகழ்ந்தவைகள், வசித்த வீடு, பழகிய இடங்கள் நினைவில் நிற்கின்றன. நான்கு ஐந்து வயது அனுபவங்கள் மிகத் தெளிவாக மனசில் நிழலிடுகின்றன.

நான் பிறந்தது 1920 நவம்பர் மாதம் 12ஆம் நாள் - தமிழ் வருடம் ஒன்றின் ஐப்பசி மாதம் ஒரு வெள்ளிக்கிழமை அன்று - அனுஷம் நட்சத்திரத்தில் - என்று என் பெற்றோர் எனக்கு அறிவித்திருக்கிறார்கள்.

என் அப்பா சுப்பிரமணியபிள்ளை பல்வேறு ஆற்றல்கள் பெற்றிருந்த உற்சாகமான மனிதர். அவர் சந்தோஷ மனநிலையில் இருந்தபோது சுவாரசியமான கதைகள், விடுகதைகள் சொல்வது வழக்கம். அப்படிப்பட்ட சமயங்கள் சிலவற்றில்,

நான் பிறந்தது வெள்ளிக்கிழமை, ராஜா தேசிங்கு
என் குதிரை பிறந்தது வெள்ளிக்கிழமை, ராஜா தேசிங்கு
நான் சண்டைக்குப் போனதும் வெள்ளிக்கிழமை, ராஜா தேசிங்கு
அவன் செத்துப் போனதும் வெள்ளிக் கிழமை ராஜா தேசிங்கு
கிருஷ்ணா, நீ பிறந்ததும் வெள்ளிக்கிழமை ராஜா தேசிங்கு
வெள்ளிக் கிழமை நல்ல நாளென்பார் ராஜா தேசிங்கு

என்று 'ஜாலியாக'ப்பாடுவார்.

அது எனது ஆறு - ஏழு வயதுகளின் நிகழ்ச்சி.

என் அம்மா மகமாயி அம்மாள் எனது குழந்தைப் பருவம் பற்றி அதிகமாக, அடிக்கடி, சொல்லி வந்தாள்.

என் தந்தை அன்றைய அரசாங்கத்தின் 'சால்ட் அண்ட் எக்சைஸ் சப் இன்பெக்டர்' ஆகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். உப்பளங்களை பார்வையிட்டு வரி வசூலிப்பது, பனைமரங்களை கணக்கிடச் செய்வது, கள் இறக்குவோர் மற்றும் கள்ளுக்கடைகள் சாராயக் கடைகளை கண்காணிப்பது, வரி விதிப்பது போன்ற கடமைகளை அவர் ஆற்றவேண்டும். அப்படிப் பணிபுரிகிறவர்களை ஒரே இடத்தில் பல வருடங்கள் நிலைபெற்றிருக்க அனுமதிப்பதில்லை அரசு. அடிக்கடி இடமாற்றம் செய்யும். அதனால் என் அப்பா, அநேகமாக இரண்டு வருடங்களுக்கு ஒரு தடவை, இட மாற்றம் பெறுவது இயல்பாக இருந்தது.

அக்காலத்திய திருநெல்வேலி ஜில்லாவின் நாங்குனேரி தாலுகாவை சேர்ந்த திசையன்விளை கிராமத்தில் வீடுவைத்துக் கொண்டு உவரி கடற்கரையோர உப்பளங்களை கண்காணிக்க வேண்டிய பணி அப்பாவுக்கு இருந்தது. என் பெற்றோர் திசையன்விளையில் வசித்த போது நான் பிறந்தேன். என் அம்மாவுக்கு இரண்டாவது குழந்தையாக.

முதல் பிள்ளை, அவர்கள் சங்கரன்கோயில் என்ற ஊரில் இருந்த போது, இரண்டு வருடங்களுக்கு முன்னர், பிறந்திருந்தது. அவ்வூரில் கோயில்கொண்டுள்ள, பிரசித்தி பெற்ற, தெய்வமான கோமதி அம்மன் பெயர் என் அண்ணனுக்கு இடப்பட்டிருந்தது. கோமதி நாயகம் என்று.

என் அண்ணன் என் அப்பாவுக்கு இரண்டாவது பிள்ளை; நான் மூன்றாவது குழந்தை.

எங்களுக்கு முன்னதாக கல்யாணசுந்தரம் என்ற அண்ணன்

பிறந்திருந்தார். எனது இரண்டாவது அண்ணன் பிறப்பதற்கு ஒன்றரை வருடங்களுக்கு முந்தி.

அந்த அண்ணனின் அம்மா சண்முகவடிவு குழந்தை பிறந்த ஒரு வருடத்துக்குள்ளேயே இறந்து போனாள். கைக்குழந்தையை வளர்த்துப் பெரியவனாக்குவதற்காக என் தந்தை, தெற்குக் கார்சேரி ஊரைச் சேர்ந்த மகமாயி அம்மாளை திருமணம் செய்துகொண்டார்.

எங்கள் அம்மா அப்பாவுக்கு மூன்றாம் தாரம். அவருடைய முதல் தாரமான கல்யாணி அம்மாளுக்கு குழந்தை பிறக்கவில்லை. குழந்தை தான் இல்லையே என்ற எண்ணத்தில் அந்த அம்மாள் 'தாம் தூம்' என்று செலவு செய்து, 'நெய்யில் மிதந்த அப்பம் ஆக' பெரும் வாழ்வு வாழ்ந்து சீக்கிரமே செத்துப் போனாள். அதற்குப் பிறகு அப்பா, கிடாரக்குளம் ஊரைச் சேர்ந்த சண்முகவடிவு அம்மாளை திருமணம் செய்து கொண்டார்.

வெகுகாலம் வரை பெண்களின் பெயருக்குப் பின்னால் 'அம்மாள்' என்ற அடைமொழி கொடுப்பது வழக்கமாக இருந்தது. கால ஓட்டத்தில், 1940களுக்குப் பிறகு என்று சொல்லலாம், பெண்கள் பெயருக்குப் பின்னால் ஒட்டுச் சொல்லாக இருந்த அம்மாள் கைவிடப்பட்டது. வெறுமனே பெயர்களை மட்டும் சொல்வது வழக்கத்துக்கு வந்தது.

சண்முகவடிவு அம்மாளுக்குப் பிறந்த ஆண்குழந்தைக்கு, அந்நாளைய மரபுப்படி, பெரியம்மையின் (அப்பாவின் முதல் மனைவியின்) பெயரான கல்யாணி என்பது சூட்டப்பெற்றது. கல்யாண சுந்தரம் என்று.

அந்தக் குழந்தையை எங்கள் அம்மா, தன் சொந்தப் பிள்ளை போலவே, கருத்தாக வளர்த்தாள். அண்ணன் சிறிது வளர்ந்து பெரியவனானதும், அம்மாச்சி (சண்முகவடிவின் தாய்) வீட்டில் வளரச்சென்றான். சண்முகவடிவு அம்மாளுக்கு மூன்று சகோதரர்கள் இருந்தார்கள். தாய்மாமன்மாரும் அண்ணனை பிரியத்துடன் கவனித்துக் கொண்டார்கள். அவர்கள் எல்லோருமே திருநெல்வேலியில் வசித்தார்கள்.

எனக்கு ஒரு வயது நிறைந்த போது, என் அப்பா இடமாற்றம் பெற்று தூத்துக்குடி சேர்ந்தார். தூத்துக்குடியில் வசித்த போது - எனக்கு ஒன்றரை வயது இருக்கும் - என் விலாவில் பெரிய கட்டி வந்து

சிரமப்படுத்தியது என்றும், அறுவை சிகிச்சை செய்து குணப்படுத்த வேண்டியிருந்தது என்றும் அம்மா சொல்வாள். அந்த அறுவையில் என் உடம்பிலிருந்து பெரும் அளவில் ரத்தம் வெளிப்பட்டது என்றும், ஏற்கனவே மெலிவாக இருந்த நான் மேலும் ஒல்லியானதாகவும், அதன் பிறகு உடம்பு தேறவேயில்லை என்றும் அம்மா சொன்னது உண்டு.

பிறக்கும் பொழுதே எனக்கு இரண்டு பற்கள் இருந்தன. மேல் வரிசைப் பற்கள். அவை உறுதியாக இருந்தன. எனது எட்டாவது வயசில், திருநெல்வேலியில் வசித்தபோது, ஒரு நாள் மாலை சந்திப்பிள்ளையார் கோயிலில் போடப்பெற்ற வெடலைத் தேங்காயின் பெரிய சில்லை கைப்பற்றி, தேங்காயை சிரட்டையிலிருந்து அகற்றுவதற்காகக் கடித்த போது, என் கூடவே பிறந்த பற்கள் இரண்டும் தாக்குப் பிடிக்க முடியாமல் உதிர்ந்து விட்டன. அதற்கு முன் இடைக்கிடையே வேறு பல் விழுந்து முளைத்த போதிலும், இம் முன் பற்கள் இரண்டும் உறுதியாக வளர்ந்தன. வெடலைத் தேங்காய் கடித்தது அவற்றுக்கு விபத்தாக முடிந்தது. பின்னர் உரிய காலத்தில் வேறு பற்கள் முளைத்துவிட்டன.

என் குழந்தைப் பிராயத்தின் சுவாரசியமான சமாச்சாரத்தில் மற்றும் ஒன்று. என் நெற்றி நடுவில் இரண்டு நரம்புகள் நாமம் போல் அமைந்து காணப்பட்டன. அப்படி நாமமாக நரம்புகள் பளிச்சிடுவது பிள்ளைக்கு 'ஆகாது' - நல்லதல்ல - என்று பெரியவர்கள் கருதினார்கள். அந்த நாமம் மறையவேண்டும் என்று சாமிகளுக்கு நேர்ந்து கொண்டாள் என் அம்மா. ஒரு முறை கோயில் யானையிடம் காட்டினார்கள். அது தனது தும்பிக்கையில் நீர் எடுத்து, வேகமாகக் குழந்தையின் முகத்தில் பீச்சியது. பிள்ளை பதறிப் பயந்து அழுதது தான் கண்ட பலன்! நரம்பு நாமம் மறையவில்லை. பலப்பல வருடங்களுக்குப் பிறகு தானாகவே அது மறைந்துவிட்டது.

தூத்துக்குடியிலிருந்து அப்பா ஓட்டப்பிடாரம் ஊருக்கு மாற்றப் பட்டார். ஓட்டப்பிடாரம் ஒரு கிராமம். அந்த ஊர் 'கப்பல் ஓட்டிய தமிழன்' என்று சிறப்புப் பெற்ற தேசபக்தர் தியாகி வ.உ. சிதம்பரனாரால் பெயர்பெற்றது.

அதற்கும் முன்னதாகவே ஓட்டப்பிடாரம் வரலாற்றுப் பெயர் பெற்ற ஊர் தான். பாளையக்காரன் கட்டபொம்ம நாயக்கன் கோட்டை கட்டி வாழ்ந்த பாஞ்சாலக்குறிச்சி அருகில் தான் உள்ளது.

வெள்ளையரை எதிர்த்து வீரமுழக்கம் செய்து, வெள்ளைக்கார ஆட்சியரை திணறவைத்து, முடிவில் கயத்தாறு என்ற இடத்தில் புளியமரத்தில் தூக்கிடப்பட்டு இறந்தான் கட்டபொம்மன். அவனிடம் தானாதிபதியாகப் பணியாற்றியவர் ஓட்டப்பிடாரத்துக்காரர் தான்.

'ஓட்டப் பிடாரமாம் தானாதியாம் - அவர்
ஒம்பது கம்பளம் ஆண்டவராம்'

என்று கட்டபொம்மன் வரலாற்றுப் பாடலில் வருகிற அடிகளைப் பாடிக்கொண்டு திரிந்தார்கள் ஓட்டப்பிடாரம் சிறுவர்கள்.

ஓட்டப் பிடாரத்தில் 'வக்கீல் பிள்ளை வீட்டில்' தான் நாங்கள் குடியிருந்தோம். 'வக்கீல் பிள்ளை' என்பவர் வ.உ.சி. தான்; அவர் சிறையிலிருந்து விடுதலையாகி வந்த பிறகு வாழ்க்கையில் கஷ்டப் பட்டு, மீண்டும் வக்கீலாகி, கோவில்பட்டியில் தங்கி தொழில் நடத்திக் கொண்டிருந்த காலம் அது. அவரது ஓட்டப்பிடாரம் வீடு வாடகைக்கு விடப்பட்டிருந்தது. அதில் தான் நாங்கள் வசித்தோம்.

வக்கீல் பிள்ளையை ஒன்றிரு தடவைகள் பார்த்த நினைவு எனக்கு இருக்கிறது. ஆனால் அவரது பெருமைகளை எல்லாம், வரலாற்றுச் சிறப்புகளை, வெகுகாலத்துக்குப் பிறகே நான் அறிந்து கொள்ள முடிந்தது.

ஓட்டப்பிடாரத்தில் இருந்த போது, எனக்கு தம்பி பிறந்தான். அவனுக்கு முருகேசன் என்று பெயரிடப்பட்டது. அப்போது எனக்கு மூன்றரை வயது.

அந்த ஊரில் உலகம்மன் கோயில் மிகப் பிரபலம். ஒரு சமயம் அண்ணன் கோமதிநாயகம் அந்த அம்மனுக்கு 'பால்குடம் எடுத்தது', அப்போது ஊரைச் சுற்றி வந்து கோயிலுக்குப் போனது, என் நினைவில் நன்கு பதிந்திருக்கிறது. அப்பாவின் சேவகர் ஒருவர் என்னை தூக்கிக் கொண்டு கூட்டத்தோடு நடந்தார்.

என் அம்மாவுக்கு பக்தி உணர்வு அதிகம். அம்மன்கள், சாமிகளுக்கு 'வேண்டிக்கொள்வதும்', பிறகு நேர்த்திக்கடன்களை தீர்ப்பதற்காக செலவுகள் செய்வதும் கடைசி வரை அம்மாவுக்குப் பிடித்தமான காரியங்களாகவே இருந்தன. அப்பா மறுப்பு கூறியதில்லை.

ஓட்டப்பிடாரம் உலகம்மனுக்கும் நிறையவே செய்தார்கள். பெரிய கொப்பரை, சருவச்சட்டி, அகப்பை என்று பாத்திரங்கள் பல வாங்கி அளித்தார்கள்.

எனது நாலாவது வயதில் நாங்கள் கோவில்பட்டி சேர்ந்தோம்.

ஓட்டப்பிடாரத்தில் வசித்த போது ஒருசமயம் ரயிலில் பயணம் செய்ய நேரிட்டது. ஓட்டப்பிடாரத்தில் ரயிலேறி, தாழை யூத்து ஸ்டேஷன் சேர்ந்து, அங்கிருந்து வில்வண்டியில் ராஜவல்லிபுரம் போன பயணம்.

ஓட்டப்பிடாரத்தில் ரயில் நிலையம் கிடையாது. அந்தக் காலத்தில் பஸ் போக்குவரத்தும் இல்லை. ஓட்டப்பிடாரத்திலிருந்து சில மைல் தூரம் தள்ளி உள்ள தட்டப்பாறை ஸ்டேஷன் போய்த்தான் ரயிலேற வேண்டும்.

அவ்விதம் வில்வண்டியில் ஏறி ரயிலடி போனோம். அம்மா, அண்ணன், நான், தம்பி மட்டும் தான் ஊருக்குப் பயணம். எங்களை ரயிலேற்றி வழி அனுப்புவதற்காக அப்பா வந்தார்.

மணியாச்சியில் வண்டி மாற்ற வேண்டும். தூத்துக்குடியிலிருந்து வந்த ரயிலில் ஏறி, மணியாச்சி ஜங்ஷன் அடைந்து, திருநெல்வேலி போகிற ரயில்வண்டியில் அப்பா எங்களை ஏற்றிவிட்டார். இருட்ட ஆரம்பித்திருந்தது. ஸ்டேஷனிலும், தண்டவாளங்களின் அருகிலும் எரிந்து கொண்டிருந்த விளக்குகள் வசீகரக் காட்சிகளாக விளங்கின.

வண்டி புறப்படுகிற வரை நின்று, அம்மாவிடம் 'பிள்ளைகளை பத்திரமாக் கூட்டிட்டுப் போ. ஒரு வாரத்திலே நான் வருவேன்' என்று கூறி அப்பா விடைபெற்றார்.

முன்னரே தகவல் சொல்லியிருந்ததால், ராஜவல்லிபுரத்திலிருந்து பெரியப்பா வில்வண்டி அனுப்பியிருந்தார்.

ராஜவல்லிபுரத்துக்கு தாழையூத்து தான் ரயில்நிலையம் அங்கிருந்து ஊர் இரண்டு மைல் தொலைவில் உள்ளது. வண்ணான் பச்சேரி முக்கு சேர்கிறவரை வெறும் ரஸ்தா தான். ஒரு மைல் தூரம். பிறகு ஒரு மைல் குளக்கரைரோடு. இருபுறமும் ஓங்கி வளர்ந்து நின்று அடர்ந்த இலைப்பந்தல் இட்டிருந்த பெரிய பெரிய ஆலமரங்கள். ஒரு பக்கம் நீர் நிறைந்த பெரியகுளம். இன்னொரு பக்கம் பசுமையான நெல்பயிர் இனிதாய் காட்சி தரும் வயல்கள். அழகும் குளுமையும் சேர்ந்த சூழல்.

இதெல்லாம் 'முன்னொரு காலத்து' உண்மை. காலப்போக்கில் 'கனவாய் பழங்கதையாய்' போய்விட்ட சமாச்சாரம்!

## ⌘ 2 ⌘

ராஜவல்லிபுரம் –

அழகான பெயரை உடைய அழகிய சிற்றூர். அமைதியும் வளமும் நிறைந்த ஊர். ஊரின் மேற்குப் பக்கம் விரிந்து கிடந்தது பெரியகுளம். கிழக்குப் பக்கத்தில் சிறிய நயினாங்குளம். அதன் கரையாக அமைந்திருந்தது ஆலமரங்கள் நின்ற சாலை. அது *பாலா மடை, சீவலப்பேரி முதலிய ஊர்களுக்கு இட்டுச் செல்லும்.

ராஜவல்லிபுரத்தில் கார்காத்த வேளாளர் வீடுகள் அதிகம். பெரிய பெரிய வீடுகள். வசதியான வாழ்க்கை வாழ்ந்தவர்கள். ஒரு காலத்தில் நூற்று எண்பது குடும்பத்தினர் வசித்த ஊர். பிறகு எண்ணிக்கை குறைந்து குறைந்து பத்துப் பன்னிரண்டு 'காரைக்கட்டுப் பிள்ளைமார்' வீடுகளே கொண்ட இடமாகிவிட்டது. தேவர்கள் (மறவர்) அதிகமாயினர். இதர சாதியினரும் கலந்து வசிப்பர். ஆதிதிராவிடர் வசிக்கும் சேரி ஊரை விட்டுத் தள்ளி கிழக்கே உள்ளது.

தெற்கே ஒரு மைலுக்கு அப்பால் தாமிரவர்ணி ஆறு ஓடுகிறது. அதன் கரை மீது பனைமரங்களும் உடைமரங்களும் நிறைந்த காடு. அதனிடையே தான் செப்பறை நடராஜர் கோயில் இருக்கிறது. திருநெல்வேலி மாவட்டத்தில் பெயர் பெற்ற திருத்தலங்களில் அதுவும் ஒன்று.

ரொம்ப காலத்துக்கு முன்பு செப்பறை நடராஜர் கோயில் ஆற்றுக்குள் மணல் பகுதியில் தான் இருந்தது. ஆற்றில் வந்த பெரும் வெள்ளம் கோயிலை இடித்துத் தகர்த்து விட்டது. அதனால் கோயில் மேட்டில், கரையைவிட்டு சிறிது தூரத்துக்கு அப்பால், கட்டப்பட்டது. சிதம்பரம் கோயில் பாணியில் கட்டப்பட்டுள்ளது. தாமிரசபை. நடராஜர் திருஉருவம் இருக்கிற கருவறைக்கு மேலே கூரை தாமிரத்தால் வேயப்பெற்றது. சிதம்பரத்தில் உள்ளது போலவே சிறுசிறு செப்புத் தகடுகளால் அமைக்கப்பட்டது. அதனால் அது செப்பறை எனப் பெயர்பெற்றது.

காட்டுக்கோயில். அருகில் யாரும் வசிக்கவில்லை. மனிதர்கள் வசிக்கும் ஊர் ஒருமைல் தள்ளியுள்ள ராஜவல்லிபுரம் தான். காலையிலும் மாலையிலும், நடராஜருக்கு பூஜை செய்வதற்காக பட்டரும் மடப்பள்ளி ஐயரும், மணி அடிக்கவும் இதரவேலைகள் செய்வதற்குமாக

உவச்சர் இனத்தவர் ஒருவரும் வருவார்கள். வந்து அவசரம் அவசரமாகப் பணிகளை முடித்து விட்டு, ஊருக்குத் திரும்பிவிடுவார்கள்.

சித்திரை மாதம் 'சங்காபிஷேகம்' என்று இரண்டுநாள் திருவிழா நடைபெறும். அப்போது ஊர்க்காரர்கள் கும்பிட வருவார்கள். மார்கழி மாதம் திருவாதிரைத் திருவிழா சிறப்பாக நிகழும். திருவாதிரை நாளன்று பெருங்கூட்டம் திரளும். மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் ஆண்களும் பெண்களும் பிள்ளைகளும் வந்து குழுமுவர். கோயிலைச் சுற்றிலும் பலவிதமான கடைகளும் தோன்றி வியாபாரம் பண்ணும். முன்பெல்லாம் நடந்தும், மாட்டு வண்டிகளிலும் பக்தர்கள் வந்து சேர்வர்.

கிராமப்புறமெல்லாம் பஸ் போக்குவரத்து சர்வசாதாரணமாகியதும், செப்பறைக் கோயில் வரை விசேஷ பஸ் (ஸ்பெஷல் பஸ்) ஓடி பக்தர்களுக்கு வசதி செய்யலாயிற்று.

கோயில் அருகிலேயே ஏன் தொழிலாளிகள் குடியிருக்கவில்லை என்பதற்கு ஊர்க்காரர்கள் 'கர்ணபரம்பரையாக'க் கதை சொல்வது வழக்கம். ஒரு காலத்தில் கோயிலைச் சுற்றிலும் ஐயர்களும் இதர தொழிலாளிகளும் குடியிருந்தார்களாம். இரவு நடுச்சாமத்தில் கோயிலுக்குள் நடராஜர் ஆனந்தத்தாண்டவம் நிகழ்த்துவாராம். அவர் திங்குதிங்கெனக் குதிக்கிற ஓசை பயங்கரமாக ஒலிக்குமாம். அதனால் மனிதர்கள் பயம் கொண்டார்கள். மேலும், தாண்டவமிடும் நடராஜருக்கு சுற்றுப்புறத்தில் மனிதர்கள் இருந்தது பிடிக்கவில்லையாம். அவர்களுக்கு ஏதாவது நோய்வந்து கஷ்டப்படுத்தியதாம். ஐயர்கள் கனவிலும் தோன்றி சேதி சொன்னாராம் நடராஜர். எனவே அவர்கள் இடத்தைக் காலி பண்ணிவிட்டு ஊரோடு போய்விட்டார்கள்.

செப்பறை நடராஜர் (ஆனந்தக்கூத்தர்) உருவம் சிதம்பரம் கோயிலில் எழுந்தருளியுள்ள சிலையின் மாதிரியிலேயே வடிக்கப் பட்டிருக்கிறது. சிதம்பரத்தில் சிலை வார்த்த சிற்பியிடம் பயிற்சி பெற்றவரே இச் சிலையையும செய்தார் என்று சொல்லப்படுகிறது.

இது பற்றியும் நெடுங்காலமாக ஒரு கதை நிலவுகிறது. சிதம்பரத்தில் சிலை நிறுவப்பட்ட பிறகு ஒரு சிற்பி திருநெல்வேலிப் பக்கம் வந்தார். தாமிரவர்ணி ஆறும் அதன் கரையின் சூழ்நிலையும் அவரை வசீகரித்தன. உடனே ஆற்றின் கரையில் நடராஜர் சிலை நிறுவவேண்டும் என்று ஆசைப்பட்டார். அப்படியே செய்து முடித்தார்.

ஒரு இடத்தில் அவ்வாறு செய்து, பக்தர்கள் சிலையை வரவேற்று மகிழவும், இன்னும் சில இடங்களிலும் நடராஜர் சில அமைத்தால், தானாகக் கோயில்கள் ஏற்பட்டுவிடும் என்று அவர் கருதினார். அவ்வாறே கட்டாரிமங்கலம், கரிசூழ்ந்தமங்கலம் கருவேலங்குளம், செப்பறை ஆகிய இடங்களில் அவர் வெற்றிகரமாகச் சிலைகள் செய்து நிறுத்தினார். மேலும் ஒரு இடம் சேர்ந்தார்.

ஒரு ஆசாமி இப்படி ஊர் ஊராகச் சென்று, நடராஜர் உருவம் செய்து நிறுத்தி விட்டுப் போவதை சிலர் சந்தேகக் கண்ணோடு பார்த்தனர். இது ஊருக்கு நல்லதல்ல; இதனால் தீமைகள் விளையலாம் என்று அவர்கள் நினைத்தார்கள். ஏன்இப்படிச் செய்கிறாய் என்ற கேள்விக்கு, என் மனசுக்குத் தோன்றியது, செய்கிறேன்; இது எனக்கு ஆத்மதிருப்தி அளிக்கிறது என்று சிற்பி பதில் சொன்னார்.

சந்தேகவாதிகளுக்கு அது பிடிக்கவில்லை. இந்த ஊரில் நடராஜர் சிலை செய்து நிறுத்தக்கூடாது; ஆடிக்கொண்டே இருக்கிற சாமியினால் ஊருக்குக் கேடு தான் ஏற்படும். குடிபடைகளே ஆடி அலைக்கழிந்து போவார்கள்; அதனாலே நீ உருவம் செய்யக்கூடாது என்று மிரட்டினார்கள்.

சிற்பி அஞ்சவில்லை. நடராஜர் சிலை வார்ப்பதற்கான ஏற்பாடுகளை செய்து கொண்டிருந்தார். அதனால் ஆத்திரம் அடைந்த சந்தேகவாதி களில் ஒருவன் அவரது வலது கையை அரிவாளால் வெட்டி வீழ்த்தினான். எல்லோரும் ஓடிவிட்டார்கள்.

சிற்பி தயங்கவில்லை. முழங்கை தான் வெட்டுப்பட்டிருந்தது. சில பச்சிலைகளைத் தேடிக்கண்டு, அவற்றை வெட்டுப்பட்ட இடத்தில் வைத்து சிகிச்சை செய்தார். எஞ்சியிருந்த கையின் மேல்பகுதியில் வலி மறைந்ததும், அங்கு ஒரு அகப்பையைக் கட்டிக் கொண்டார். சிலை செய்வதற்கான ஏற்பாடுகளை மெது மெதுவாக முடித்து, முழங்கைக்குப் பதிலாகக் கட்டியிருந்த அகப்பையின் உதவியினாலேயே சிலையை வார்த்து முடித்தார். அவருடைய ஆற்றலினாலும் ஆன்மத்தவிப்பு காரணமாகவும் இந்தச் சிலை, அவர் செய்திருந்த இதர உருவங்களை விட வெகு சிறப்பாக அமைந்துவிட்டது. 'மூக்கும் முழியும் சிரித்த முகமுமாக'க் காட்சி தந்த அந்த நடராஜர் திருஉருவம் சிற்பிக்கு மனநிறைவும் மகிழ்ச்சியும் தந்தது. அவர், குழந்தைகளின் கன்னத்தை அன்பாகக் கிள்ளி விரல்களை முத்தமிட்டுக்கொள்வது போல, தனது

இடது கைவிரல்களால் நடராஜர் கன்னத்தைக் கிள்ளி, விரல்களை முத்தமிட்டுக் கொண்டார். அப்படி விரல்கள் கிள்ளிய அடையாளம் சிலையில் நன்கு பதிந்துவிட்டது. அது இப்பவும் காணப்படுகிறது.

இது பக்தர்கள் சொல்கிற விவரம்.

செப்பறைக் கோயில் ஆற்றினுள் மணல்படுகையில் அமைந்திருந்த போது, ஒருசமயம் பெரும்வெள்ளம் வந்து அதைச் சிதைத்துச் சின்ன பின்னப்படுத்தி விட்டது அல்லவா? அதை ஒட்டியும் ஊர்வாசிகளால் நெடுநாள் வரை ஒரு கதை சொல்லப்பட்டு வந்தது.

ஆற்றின் தென்கரை மீது, நீரோட்டத்தின் வளைவினை ஒட்டி, சிறு குன்று ஒன்று நிற்கிறது. செம்மண்ணும் வெண்நிறப் பாறாங்கற்களும் அடுக்கடுக்காக அமைந்து காணப்படுவது. அதை வெள்ளிமலை என்று குறிப்பிடுவர்.

வெள்ளிமலையின் அடிவாரத்தில் ஆற்றில் ஆழம் அதிகம் கொண்ட கசம் ஒன்று இருந்தது. அதனுள் நீர்ச்சுழி உண்டு என்பர். கசத்தில் இறங்கியவர்கள், அல்லது விழுந்து விடுகிறவர்கள், சுழியினால் இழுக்கப் பட்டு கசத்தினுள் மறைந்து மாண்டு போவார்கள். அப்படி வருடத்துக்கு இரண்டு மூன்று பேர் இறப்பது விபத்தாக நிகழ்ந்தது. அதனால் அந்த 'நீலகண்டன் கசம்' என்றாலே ஜனங்களுக்குப் பெரும் பயம்.

ஆற்று வெள்ளம் செப்பறைக் கோயிலைத் தகர்த்து, அங்கிருந்த பொருள்கள் பலவற்றையும் அடித்துச் சென்றுவிட்டது. அப்படிப் போனவற்றுள் வெள்ளித்தேரும் ஒன்று.

அந்தத் தேர் கசத்தின் ஆழத்தில் சிக்கிப் புதைந்து கிடக்கிறது; அதை பூதங்கள் பாதுகாக்கின்றன என்று ராஜவல்லிபுரம் வாசிகள் நம்பினார்கள். தினசரி பகல் பன்னிரண்டு மணிக்கு, 'நட்ட நடு மத்தியானத்திலே', பூதங்கள் வெள்ளித்தேரை அசைத்துக் குலுக்கி விளையாடுகின்றன; ஆற்றில் குளித்துக் கொண்டிருப்பவர்களுக்கு தேர் மணிகளின் கலகல ஓசை தெளிவாகக் கேட்கும் என்று அவர்கள் கதைகட்டிப் பரப்பினார்கள்.

அப்படி மணிஓசையை நன்கு கேட்டதாகச் சிலர் உறுதியாகச் சொன்னார்கள். அதனால் மத்தியான நேரத்தில், 'உச்சிப்படை வெயில் பொழுதில்', ஆற்றில் குளிப்பதற்கு சாதாரண ஜனங்கள் பயந்தார்கள். மணிஓசையை கேட்கவேண்டும் என்றே தைரியசாலிகள் ஒன்றிரண்டு

பேர் அந்நேரத்தில் ஆற்றில் குளித்ததும் உண்டு. ஆமா, மணிஓசை கணகண என்று தெளிவாகக் கேட்கிறது என்று அவர்கள் உறுதியாய் சொன்னார்கள். இதனாலும் பூதபயம் மக்களிடையே அதிகரித்தது.

எல்லாம் 1940களின் ஆரம்பவருடங்கள் வரைதான். தொடர்ந்து வருடாவருடம் ஆற்றில் பெருகி வந்த வெள்ளம் வெள்ளிமலைக் கசத்தில் மணலைச் சேர்த்துச் சேர்த்து பயங்கரப் பள்ளத்தைத் தூர்த்துவிட்டது. நதியின் அந்த இடமும் சமதளமாகியது. ஆடுமேய்ப்பவர்கள் தாராளமாக அந்தப் பகுதியில் நடந்து போனார்கள். வெள்ளிமலை மீது ஏறிப்பார்க்க விரும்பியவர்களும் அந்த வழியாக நடக்கலானார்கள். கசத்தின் மறைவுடன், அதனுள் அமுங்கி பூதங்களால் பாதுகாக்கப் படுவதாகச் சொல்லப்பட்ட வெள்ளித்தேரின் கதையும் தானாகவே மடிந்துவிட்டது.

கதைகள் கட்டிப் பரப்புவதிலும், அவற்றை நம்புவதிலும் மக்களுக்கு எப்பவுமே தனி விருப்பமும் ஆசையும் திறமையும் இருக்கத்தான் செய்கின்றன.

ராஜவல்லிபுரம் ஊருக்கு அந்தப் பெயர் ஏன் வந்தது என்பதற்கும் ஊர்ப்பெரியவர்கள் ஒரு கதை சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

ஆற்றின் அக்கரையில் (தென்கரையில்) கிழக்கே மணப் படைவீடு என்றொரு கிராமம் இருக்கிறது. வெள்ளிமலையிலிருந்து சிறிது தொலைவில் உள்ள ஊர் அது. நாட்டின் தென்பகுதியில் ஆட்சி புரிந்து கொண்டிருந்த குறுநிலமன்னன் படைவீடு அமைத்து அங்கே தங்கியிருந்தானாம். அவன் தனது ஆசை நாயகிக்கு ஆற்றின் வடகரையிலுள்ள ஊரை அன்புடன் வழங்கியிருந்தான். அந்தக் காமவல்லி தங்கியிருந்த ஊர் ராஜவல்லிபுரம் என்று பெயர் பெற்றது.

இது ஊரார் சொல்வது. ராஜவல்லிபுரத்தில் பிறந்து வளர்ந்த தமிழ் அறிஞர் ரா.பி. சேதுப்பிள்ளை பல்வேறு ஊர்களின் பெயர்க் காரணங்களை ஆய்வுசெய்து, 'ஊரும் பேரும்' என்று விளக்கங்கள் எழுதினார். ராஜவல்லிபுரம் என்ற பெயர் எப்படி வந்திருக்கும் என்று அவர் ஒரு கதை உருவாக்கினார். அது சரித்திரம் சார்ந்தகதையாகும்.

மதுரையில் அமர்ந்து அரசாண்ட பாண்டியமன்னர்களில் மாறன் ஸ்ரீவல்லபன் என்பவனும் ஒருவன். அவன் தென்பகுதியில் மக்களுக்கு நலம் பயக்கும், வளம் சேர்க்கும், பணிகள் பல செய்தவன். ராஜவல்லி

புரத்துக்குக் கிழக்கே பல மைல் தூரத்தில் சீவலப்பேரி என்ற ஊர் இருக்கிறது. உண்மையில் அந்த ஊரின் பெயர் ஸ்ரீவல்லபப்பேரி என்பதேயாகும். பாண்டியமன்னன் அங்கு ஒரு ஏரி வெட்டி வைத்தான். அவன் பெயராலேயே அது குறிக்கப்பட்டது. அந்தப் பெயரே ஊரின் பெயரும் ஆயிற்று. இது அறிஞர் சேதுப்பிள்ளை அவர்களின் முடிவு.

ஸ்ரீவல்லபப்பேரி என்ற ஊர்ப்பெயர் சீவலப்பேரி என்று சிதைவுற்றது போலவே, ராஜவல்லபபுரம் என்ற பெயர் தான் ராஜவல்லி புரம் ஆயிற்று என்பது அவருடைய விளக்கமாக அமைந்துள்ளது.

ஆனாலும், ராஜவல்லிபுரம் என்ற அழகான பெயரும், அதை ஒட்டி எழுந்த மக்களின் கதையும் தான் ஊர்ஜனங்களுக்கு வெகுவாகப் பிடித்துள்ளது. ராஜவல்லபபுரம் என்பது எடுபடவில்லை.

இந்த ராஜவல்லிபுரம் தான் எங்கள் அப்பாவின் ஊர். அப்பாவின் அப்பாவான முத்தையபிள்ளை வளத்தோடு வாழ்ந்த ஊர். தாத்தா, தாத்தாவுக்குத் தாத்தா என்று பல தலைமுறையினர் வசித்த ஊர். ஆகவே, அதுவே எனது ஊரும் ஆயிற்று. என் பெயரின் தலையெழுத்தாக ஒட்டிக்கொண்டது. ரா.சு. கிருஷ்ண சுவாமி என்று.

அதாவது, ராஜவல்லிபுரம் சுப்பிரமணியபிள்ளை கிருஷ்ண சுவாமி என்பதாம்.

அந்த ஊரை நான் கண்டறிய நேரிட்டதே என்னுடைய நாலாவது வயசில் தான். அதன் பிறகும் தொடர்ந்து அங்குநான் நீண்டகாலம் தங்கியதில்லை. இருப்பினும், ராஜவல்லிபுரம் என் 'சொந்த ஊர்' என்று நான் சொல்லிவந்திருக்கிறேன். வாழ்க்கையின் விசித்திரங்களில் இதுவும் ஒன்று!

ராஜவல்லிபுரத்தில் கார்காத்த வேளாளர்கள் அதிகம். சைவ வேளாளர்களில் ஒரு பிரிவினர் கார்காத்தார். விவசாயம் இவர்கள் தொழில்.

சிறு அளவில் வயல் வைத்திருந்த சிலபேர் வயலில் இறங்கி அவர்களே உழுது, பயிரிட்டு, விவசாயம் பண்ணினார்கள். மற்றப்படி, கணிசமான அளவில் வயல்கள் வைத்திருந்தவர்களும், பெரும் அளவில் நிலம் கொண்டிருந்தவர்களும், உழவுத் தொழிலில் ஈடுபட்டிருந்த பள்ளரை வேலைக்கு வைத்துக்கொண்டு, பண்ணையாராக வாழ்க்கை நடத்தினார்கள். பண்ணையார் - நிலக்கிழார் என்பது அதிகம்

வழங்கப்பட்டதில்லை - தங்களை 'லேண்ட் லார்ட்' என்று ஆங்கிலத்தில் சொல்வதை பெருமையாகக் கருதினார்கள்.

தங்களைப் பற்றி விவரம் எழுதவேண்டிய அவசியம் ஏற்படுகிறபோது அரசு சம்பந்தப்பட்ட மனுக்கள் மற்றும் பத்திரங்களில் - 'தொழில்' என்று குறிக்கும் இடத்தில் 'சுகஜீவனம்' என்று பலரும் குறிப்பிட்டு வந்தார்கள்.

'சுகஜீவனம்' ஒரு தொழில் எனக் குறிக்கப்படுவதும் ஒரு விசித்திரமாகத் தோன்றியது எனக்கு.

## ⌘ 3 ⌘

கார்காத்தார் பற்றி சில விவரங்கள் சொல்லவேண்டும்.

முன்னொரு காலத்தில், விவசாயத்தை நம்பி வாழ்ந்த வேளாண் மக்கள் (வேளாளர்கள்) ஒரு சமயம் மழையின்றி, பயிர்கள் காய்ந்ததனால் மிகவும் கஷ்டப்பட்டார்கள். அவர்களில் சிலர் உண்ணா நோன்பிருந்து, இந்திரனை எண்ணி தபம் செய்து, மழை வேண்டும் என்று பிரார்த்தித் தார்கள். அவர்களது பிரார்த்தனைக்கு இணங்கி இந்திரன் கார்மேகங் களை அனுப்பி, மழைபெய்யச் செய்தான். இவ்விதம் அவர்கள் பயிர்களைக் காப்பாற்றிய காரணத்தால் கார்காத்த வேளாளர்கள் என்ற சிறப்புப் பெயர் பெற்றவர்கள். அவர்கள் வேளாளர்களில் உயர்ந்தவர்கள் ஆனார்கள்.

இவ்விதம் மூத்தோர் அநேகர் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். முன்னோர்களில் பலர் தங்களை 'பத்தரைமாத்து' என்று கூறிக் கொள்வதும் உண்டு. தங்கத்தில் 'பத்தரைமாத்து' சுத்தமானதாக, மதிப்பு உயர்ந்ததாகக் கருதப்படுவது வழக்கம்.

மிகவும் தொன்மை வாய்ந்த கார்காத்தார் பற்றிய 'குல வரலாறு' ஒன்று இப்படி விளக்கம் தருகிறது: வேளாளர் அல்லது வெள்ளாளர் என்பது வெள்ளம் + ஆள்பவர் என்பதன் கூட்டுப் பெயர். வெள்ளம் என்பது நீராகும். நீரை விணாக்காமல் ஆள்பவர்கள், அதாவது நிர்வகிப்பவர்கள், என்று பொருள். அதே போல, கார்காத்தார் என்பதும்

கார் + காத்தார், மழைநீரை வீணாக்காமல் காத்து விவசாயத்துக்குப் பயன்படுத்தியவர்கள் என்று கொள்ள வேண்டும்.

இது பொருத்தமான விளக்கமாகவே தோன்றுகிறது.

கார்காத்த வேளாளர்கள் தென்னாட்டில் குடியேறியது பற்றியும் வரலாற்றை ஒட்டிய கதைகள் வழங்கப்படுகின்றன. மதுரையை ஆண்ட குலசேகர பாண்டியன் காசியாத்திரை சென்றான். அங்கு வசித்து வந்த வெள்ளாளர்களைக் கண்டு, அவர்களது செயல்திறனை வியந்தான். அவர்களை தமிழ்நாட்டுக்கு வரும்படி அழைத்தான். காசியில் வசித்த வேளாளர்களில் பலர் பாண்டிய மன்னனுடன் தமிழ்நாட்டுக்கு வந்து குடியேறினார்கள். அவர்கள் அப்படிக் குடியேறியது மதுரைக்குக் கிழக்கே உள்ள வீரசோழம் என்கிற களவேள்வி நாடு.

அவர்களது உழைப்பாற்றலையும் வாழும் முறையையும் பற்றிக் கேள்விப்பட்ட சோழமன்னர்கள் அவர்களில் சிலரை சோழநாட்டுக்கு அழைத்துச் சென்றார்கள். குடும்பத்துக்கு ஒரு கிராமமாக வழங்கி அவர்கள் சீரும் சிறப்புமாய் வாழ வகை செய்தார்கள். அவர்கள் குடியேறிய பகுதி மங்கலநாடு என்று அக்காலத்தில் அழைக்கப்பட்டது. இப்படியும் ஒரு வரலாற்றுக் குறிப்பு.

பதினேழாம் நூற்றாண்டில், தென்பாண்டி நாட்டில், திருநெல்வேலிச் சீமையையும் சுற்றுவட்டாரங்களையும் பாளையக்காரர்கள் ஆண்டு வந்தார்கள். அவர்கள், மதுரையிலிருந்து ஆட்சிபுரிந்த திருமலை நாயக்கருக்குக் கப்பம் செலுத்தி வந்தார்கள். பாளையக்காரர்களுக்குள் அடிக்கடி சண்டைகள் மூண்டன. மன்னருக்குக் கட்ட வேண்டிய கப்பத்தை அவர்கள் ஒழுங்காகக் கட்டவுமில்லை. மக்கள் அமைதியாக வாழ முடியாத நிலை ஏற்பட்டது.

அதை அறிந்த திருமலைநாயக்க மன்னர், தமது தம்பி சொக்கநாத நாயக்கரை தெற்கே சென்று நிலைமைகளை சீர் செய்யும்படி கேட்டுக் கொண்டார். அச்சமயம் சொக்கநாதர் திருச்சியில் இருந்து அரசாண்டு வந்தார். அவர் தாமே தென் திசைக்குப் போகாமல், தமது நம்பிக்கைக்குப் பாத்திரமான வடமலையப்ப பிள்ளை என்பவரை, ஒரு குதிரைப்படையுடன் அங்கே சென்று அமைதியை நிலைநாட்டும்படி அனுப்பி வைத்தார்.

தெற்கு நோக்கிப் படையோடு பயணம் செய்த பிள்ளையன், வழிநெடுக உள்ள பாளையக்காரர்களை அடக்கி ஒடுக்கிப் பணிய

வைத்தார். இறுதியில் வெற்றிகரமாகத் திருநெல்வேலி சேர்ந்தார். அவரது ஆற்றலை நன்கு அறிந்து கொண்ட நாயக்க மன்னர்கள், அவரை திருநெல்வேலியில் தங்களது அரசுப் பிரதிநிதியாக அமர்த்தினர். அங்கேயே தங்கி தங்கள் சார்பில் ஆட்சிபுரியும்படி செய்தனர்.

வடமலையப்ப பிள்ளை கார்காத்த வேளாளராவார். அவர் வடக்குப் பிரதேசங்களில் வசித்த தமது இனத்தவரின் பல குடும்பங்களை தெற்குப் பகுதிக்கு வருமாறு செய்தார். திருநெல்வேலியிலும் சுற்றுவட்டார கிராமங்களிலும் அவர்கள் வசதியாகத் தங்கிப் பணி புரிவதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். பிள்ளை மார்களில் சிறந்தவர் என்று குறிப்பிடும் விதத்தில், பிள்ளையன் என்ற சிறப்புப் பெயரையும் அவர் பெற்றார். அவர் காலத்தில் நெடுகிலும் வேளாண்மை செழிப்புற்று விளங்கியது. தெய்வ வழிபாடும், ஓங்கி வளர்ந்தது. ஆலயங்களில் பூசைகள் சீரும் சிறப்புமாக நடைபெறுவதற்காக பலஊர் திருக்கோயில்களிலும் 'கட்டளைகள்' ஏற்பாடு செய்தார்.

அவர் வழிவந்த மக்கள் தெய்வபக்தியுடன் சீராக வாழ்ந்து, விவசாயத்தை கவனித்து வளம் பெற்றார்கள். இதுவும் வரலாற்றுக் குறிப்பேயாகும்.

கார்காத்த வேளாளர்கள் சைவப்பிள்ளைமார் (வெள்ளாளர்கள்) இனத்திலிருந்து மாறுபட்ட வாழ்க்கை முறைகளைக் கொண்டிருந் தார்கள். இவர்களுக்குக் 'கோத்திரம்' உண்டு. வெள்ளாளர்களுக்குக் கோத்திரம் இல்லை.

கார்காத்தாருடைய கோத்திரங்கள் 'உடை - உடை' என்ற முடிவுகளைக் கொண்டவை. அங்கத்துடை, அங்கனுடை, அஞ்சலுடை, அரியனுடைய, அன்னலுடை, இறையுடை, எருமனுடை, கடம்புடை, காருடை, குணமுடை, குமாரக் குடை, சாத்தனுடை என்றவாறு 119 கோத்திரங்கள் பட்டியலிடப்பட்டிருக்கின்றன.

கார்காத்தாரில் பெண்களுக்கு சிறுவயதிலேயே, 5, 7 அல்லது 9 வயதில், 'விளக்கீடு கல்யாணம்' என்றொரு சடங்கு நடத்துகிற வழக்கம் உண்டு. முறையான திருமணம் போலவே இது சிறப்பாக நடத்தப்படுவது வழக்கம்.

'விளக்கிடு கல்யாண'த்தின் போது பெண் கழுத்தில் நவதாலி (இது பேச்சு வழக்கில் நவனாலி என்று சொல்லப்படுகிறது) கட்டப்படும்.

தாய்வழிப் பாட்டனார் அல்லது தாய் மாமனார் இத் தாலியை பெண்ணின் கழுத்தில் கட்டுவார்.

நவனாலி என்று சொல்லப்படுகிற நவதாலி ஒன்பது தங்க உருண்டைகளும் பத்து பவளமணிகளும் (மொத்தம் பத்தொன்பது) சேர்த்துக் கோர்க்கப்பட்ட சரடு ஆகும். சிறுமியாக இருக்கிற போது கட்டப்படுகிற இத்தாலி, முறைப்படி திருமணம் நடைபெறுகிறவரை கழற்றப்படாமலே பெண்ணின் கழுத்தை அணிசெய்யும். பிறகு, திருமணம் நிகழ்ந்து கணவன் கட்டுகிற திருமாங்கல்யம் கழுத்து அணியாகச் சேர்ந்த பின்னர் தான் 'நவனாலி' கழட்டப்படும். அப்போது நவதாலியில் கோர்க்கப்பட்டிருந்த மணிகளில் பவள உருண்டை மூன்றும் தங்க உருண்டை இரண்டும் தனியாக எடுத்துத் திருமாங்கல்யத்தில் சேர்த்துக் கோர்த்து விடுவர். பின்னர் இவற்றை சிறியவடிவில் செய்து தாலியில் நிரந்தரமாக இணைத்துக் கொள்வர்.

விளக்கிடு கல்யாணத்துக்கும் தனியான சடங்குசம்பிரதாயங்கள் எல்லாம் உண்டு. வசதிபடைத்த குடும்பத்தினர் பெரும் அளவில் ஆடம்பரமாக இவ்விசேஷத்தைச் செய்வர். இது தை மாதம் முதல் நாளன்று - பொங்கல் தினத்தில் - நடத்தப்படுகிற விசேஷம் ஆகும்.

பெண்களுக்கு சிறு வயதில் 'விளக்கிடு கல்யாணம்' நடத்தி, தாலி கட்டி, கழற்றாமலே அணிந்திருக்க வேண்டும் என்பதை ஒரு சாதிச் சடங்கு ஆக ஆக்கியதற்கும் வரலாற்றுச் சார்புடைய கதை ஒன்று வழங்கப்பட்டது உண்டு. முன்னொரு காலத்தில் முஸ்லிம் மன்னர்கள் படையெடுத்து வந்து ஆட்சியைப் பிடித்திருந்த போது, அவர்கள் நாட்டில் உள்ள பெண்களைக் கவர்ந்து சென்று தங்கள் அந்தப்புரத்தில் சேர்த்து விடுவது நடைபெற்றது. ஆயினும், அவர்கள் தாலிகட்டிய பெண்களை (கல்யாணமாகிக் கணவனோடு வாழ்ந்த மகளிரை) தொடத் துணியவில்லை. ஆகவே, அவர்களுக்குப் பயந்து வசிக்க நேர்ந்த மக்கள் தங்கள் வீட்டுப் பெண்களுக்கு சிறுவயதிலேயே கல்யாணம் என்று பெயர் பண்ணி ஒரு தாலியைக் கழுத்தில் கட்டிவைக்கிற வழக்கத்தை கைக் கொண்டார்கள். காலப் போக்கில், அவசியம் இல்லாத போதிலும், நவதாலி கட்டி எப்போதும் அதை ஒரு அணிகலனாய் கழுத்தில் கட்டியிருக்க வேண்டும் என்பது சாஸ்திர சம்பிரதாயம்' ஆகிவிட்டது.

கல்வியும் நாகரிகமும் காலமாறுபாடுகளும் ஏற்பட ஏற்பட, கார்காத்தாரிடையே 'விளக்கிடு கல்யாணம்' நடத்தி நவதாலிகட்டுகிற

சடங்கும் குறைந்து, அருகி விட்டது. அநேக குடும்பங்களில் இவ் வழக்கம் முற்றிலும் கைவிடப்பட்டுள்ளது. ஆயினும், ஆசாரப்படி விசேஷம் நடத்தி நவதாலி கட்டுகிறவர்கள் கட்டிக் கொண்டுதான் இருக்கிறார்கள். அவர்களில் கூட பலர் எப்போதும் நவனாலியை கழுத்தில் அணிந்து கொள்வதில்லை. கழற்றி வீட்டில் பத்திரமாக வைத்துவிடுகிறார்கள். முக்கியமான விசேஷ நாள்களில் அதை எடுத்துக் கட்டிக் கொள் கிறார்கள்.

உறவுமுறைகளைக் குறிப்பிடுவதிலும் கார்காத்தாரிடையே சில மாறுபாடுகள் காணப்படும். வேளாளர்களும் பிறரும் சிறியதாயாரை 'சித்தி' என்று அழைப்பர். பெரியதாயார் 'பெரிய அம்மா' ஆவார். கார்காத்தார் சமூகத்தில் சிறிய தாயாரை 'சின்னம்மை' என்றும், பெரிய தாயாரை 'பெரியம்மை' என்றும் குறிப்பிடுவர்.

பொதுவாக பிற சமூகங்களில் மதனி (மதினி) என்றும், அண்ணி எனவும் அழைக்கப்படுகிற அண்ணன் மனைவி 'வரிசையார்' என்று குறிக்கப்படுவார். காலப்போக்கில், 'வரிசையார்' என்பது அருகிவிட்டது. அண்ணி என்பது சகஜ வார்த்தையாக வழக்கில் வந்துள்ளது.

வரிசையார், கணவனின் தம்பியை (கொழுந்தன் என்ற உறவை) 'சின்னப்பிள்ளை' என்று கூப்பிடும் வழக்கம் இருந்தது. இதுவும் மறைந்து போயிற்று.

கணவனின் தங்கையை (சின்ன நாத்தனார்) மூத்த வரிசையார் 'தோழியாரே' என்று இயல்பாக அழைக்கும் பழக்கம் 1930கள் 40களில் கூட நடைமுறையில் இருந்தது. இதுவும் மங்கிமறைந்தது.

இப்படியாகக் காலங்கள் தோறும் மாறுதல்கள் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன.

கார்காத்த வேளாளர்கள் தங்கள் இனத்துக்குள்ளேயே தான் 'கொள்வினை கொடுப்பினை' செய்து கொள்வதை வழக்கமாகக் கொண்டவர்கள். இதர சைவ வேளாளர்கள், சைவச் செட்டியார்கள், ஓதுவார்கள் குடும்பங்களிடையே சகஜமாக சம்பந்தம் செய்து கொள்கிற வழக்கம் இருக்கிறது.

பொதுவாக வேளாளர் எனப்படுவோர் (கார்காத்தார்களும் பிறரும்) வேளாண்மையில் ஈடுபட்டு, பயிர்த்தொழில் புரிவோர் என்று சொல்லப் படுகிறது. நடைமுறையில் அவர்கள் வயில்களில் இறங்கி உழைத்துப்

பயிர்பண்ணுவதில்லை. பள்ளர்கள் எனப்படுகிற விவசாயத் தொழிலாளர் களை வேலைக்கு வைத்துக் கொண்டு வேளாண்மை செய்கிறார்கள். உழைப்பவர்களுக்கு ஓரளவு கூலிகொடுக்கப்படும். நெல்லாக.

சிறிதளவு நிலம் வைத்திருப்பவர் கூட தன்னை 'லேண்ட் லார்ட்' (நிலப்பிரபு) என்று சொல்லிக் கொள்வதில் பெருமைப் படுகிறார்கள். எப்போதாவது பத்திரப் பதிவில், அல்லது கோரிக்கை மனுவில், 'தொழில்' என்று குறிக்க வேண்டிய இடத்தில் 'சுகஜீவனம்' என்று அவர்கள் குறிப்பிடும் வழக்கம் இருந்தது. தாங்கள் உழைக்காமலே பிறர் உழைப்பில் வாழ்கிற முறையை 'சுகஜீவனம்' என்று குறிப்பிடுவதும், அதை ஒரு தொழிலாகக் கருதுவதும் சமூக வாழ்வின் விபரீத முரண்களில் ஒன்றுதான் என்றே எனக்குத் தோன்றும்.

ராஜவல்லிபுரத்தில் இவ்விதம் 'சுகஜீவனம்' செய்து வாழ்ந்த வசதிபடைத்த பெரிய வீட்டுக்காரர்களில் முத்தைய பிள்ளையும் ஒருவர். அவருக்கு ஏழு ஆண்களும் மூன்று பெண்களும் 'பிள்ளைச் செல்வங்கள்.' அவர்களில் மூன்றாவது மகன்தான் சுப்பிரமணிய பிள்ளை - என் தந்தை.

மகன்களில் பலரும் ஓரளவு கல்வி பயின்றிருந்தார்கள். என் அப்பா தான் சர்க்கார் உத்தியோகத்தில் சேரும் அளவுக்குக் கல்விப் பயிற்சி பெற்றிருந்தார். அரசின் 'ஆப்காரி டிப்பார்ட்மென்ட்'டில், 'சால்ட் அன்ட் எக்சைஸ் சப் இன்ஸ்பெக்டர்' ஆகச் சேர்ந்து பணியாற்றினார். அதனால் வெளியூர்களிலேயே வசிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

முத்தைய பிள்ளை தன் மகன்களுக்கு 'அரைக்கோட்டை விரைப்பாடும்' ஒரு வீடு கட்டுவதற்கு உரிய மனையும் பிரித்துக் கொடுக்கக் கூடிய வசதி பெற்றிருந்தார். அப்படியே பங்கிட்டுக் கொடுத்தார். ஆகவே, என் பெரியப்பாகள் இருவரும் ஏனைய சிற்றப்பாக் களும் ஊரோடு தங்கி விவசாயம் செய்து கொண்டிருந்தார்கள்.

இரண்டு போகம் நெல் பயிரிடுவதுடன், கோடைகாலத்தில் வயல்களில் நிலவாகை பயிரிடும் வழக்கம் அந்தக் காலத்தில் திருநெல்வேலி ஜில்லாவில் பெரும் அளவில் நிலவியது. (ஜில்லா என்பதே அந்நாள்களில் வழக்கில் இருந்தது. வெகுகாலத்துக்குப் பின்னரே 'மாவட்டம்' என்ற சொல் நடைமுறைக்கு வந்தது.)

நிலவாகை என்பது அந்நாள்களில் சாயம் காய்ச்சுவதற்கும், சாயப் பவுடர் தயாரிப்பதற்கும் வெகுவாகப் பயன்பட்டது. சாயம் தயாரிப்ப

தற்கு அவுரி என்ற பயிரும் உபயோகப்பட்டது. அது வடநாட்டில் தான் அதிகம் பயிரிடப்பெற்றது.

நிலவாகைப் பயிர் கறிவேப்பிலை போன்ற வடிவில் அமைந்த இலைகளையும், கொத்து கொத்தாகப் பூக்கும் அழகிய மஞ்சள் நிறப் பூக்களையும் கொண்டது. அதன் இலைகளை, தக்க பருவத்தில் சேகரித்து, நிழலில் உலர்த்தி பதப்படுத்தி, பெரிய சாக்குகளில் அடைத்து மூட்டைகளாக்கி ஏற்றுமதி செய்தார்கள். இரண்டு கோணிப்பைகளை ஒன்றாகச் சேர்த்துத்தைத்த பெரிய சாக்குப் பை தான் உலர்ந்த இலைகளைத் திணித்து மூட்டையாகத் தைப்பதற்கு உபயோகப்படுத்தப்பட்டது.

நிலவாகை உற்பத்தியும், நிலவாகை வியாபாரமும் திருநெல்வேலியிலும் அதைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் முற்காலத்தில் மும்முரமாக நடைபெற்றன. நிலவாகை இலைகள் ஆங்கிலத்தில் 'ஸென்னா லீவ்ஸ்' என்று குறிக்கப்பட்டன. இப்பயிர் திருநெல்வேலி வட்டாரத்திலேயே மிகுதியாகப் பயிரிடப்பெற்று, வியாபாரப் பொருளாக இருந்ததனால், அது 'டின்னவெல்லி ஸென்னா' என்றே வெள்ளைக்காரர்களால் சிறப்புப் பெயர்பெற்று விளங்கியது.

கிராமங்களில் பயிராகி, உலரப்போட்டு, மூடைகளாக்கப்பட்ட நிலவாகை இலைகளை விவசாயிகளிடமிருந்து விலைக்கு வாங்கி, உரிய முறையில் கப்பலுக்கு அனுப்பி ஏற்றுமதி செய்வதற்கென்றே, தாளையூத்து ரயில்நிலையத்துக்கு அருகில் ஸென்னக் அண்ட் கோ என்ற வெள்ளைக்காரக் கம்பெனி செயல்பட்டது. அதன் கட்டிடம் அந்தக் காலத்திலேயே, மிக எடுப்பாக, தனித்தன்மையோடு, நவீன தோற்றத்துடன், கண்ணாடிகளும் மரப்பலகைகளும் அதிகம் கொண்டு, அமைக்கப்பட்டிருந்தது. நிலவாகை இலைகளை நிழல் உலர்த்தலாகக் காயப்போடவும், பதப்படுத்தி கோணிப்பைகளில் அடைக்கவும் வசதியாக நீண்ட, விசாலமான அறைகள் பல கட்டப் பட்டிருந்தன, அக் கட்டிடத்தில்.

தாளையூத்து ரயில் நிலையத்தில் எப்போதும் நிலவாகை இலை மூட்டைகள் மிகுதியாக அடுக்கிவைக்கப்பட்டிருக்கும். அவற்றில் இருந்து எழும் ஒருவித மணம் ரயில்நிலையச் சூழலில் பரவிநிற்கும். அந்த மணம், ஸென்னக் அண்ட் கோ கட்டிடச் சூழ்நிலையிலும், ராஜவல்லிபுரத்தில் அந்தப் பயிர்த்தொழிலில் ஈடுபட்டு, இலைகளைக் கொண்டு வந்து வீடுகளின் பெரிய ஹால்களில் நிழல் உலர்த்தலாகக் காயப்போட்டிருந்த சுற்றுப்புறங்களிலும் கவிந்து நின்றது.

அப்படி இலைகளை உலர்த்துவதற்கென்றே சில வீடுகளில் விசாலமான முன்னறைகள், கண்ணாடிச் சட்டங்களிட்ட சன்னல் களோடு அமைக்கப்பட்டிருந்தன. நிலவாகை இலை 'பிசினசை' வெற்றிகரமாக நடத்தி வந்த ஒரு பெரியப்பா வீடும், ஒரு சிற்றப்பா வீடும் அவ்விதமே கட்டப்பட்டிருந்தன.

எனது பெரியப்பாக்களும் சிற்றப்பாக்களும் ஊரில் இருந்தபடியே விவசாயம் செய்து சம்பாத்தியம் பண்ணி நிலத்தோடு நிலம் வாங்கி வளர்ச்சி பெறமுடிந்தது. வெளியூர்கள் சென்று, ஊர் விட்டு ஊர் மாறி, அரசாங்க உத்தியோகம் பார்த்த என் அப்பா, தனது தந்தை பங்கிட்டுக் கொடுத்த அரைக்கோட்டை விரைப்பாடுடனும், வீடு கட்டப்படாத காலி மனையோடும் காலம் கழித்தது, அவரது உறவினருக்கு - முக்கியமாக உறவுமுறைப் பெண்களுக்கு - குறைகூறுவதற்கும் பழித்துப் பேசுவதற்கும் ஏற்ற விஷயமாகவே அமைந்திருந்தது.

அப்பாவின் முதல் மனைவியாக வாழ்ந்த மாறாந்தை கல்யாணி அம்மாள் ஊரார் பேச்சுக்களை பெரிதுபடுத்தவில்லை. குழந்தை இல்லாததனால், அவள் தன் இஷ்டத்துக்குச் செலவுகள் செய்து கவலையில்லாமல் காலங்கழித்து, நிம்மதியாக 'ஐயா இடம்' போய்ச் சேர்ந்தாள்.

இரண்டாவது மனைவியாக வாய்த்த கிடாரக்குளம் சண்முகவடிவு அம்மாள் ஊரார் உறவினர் பேச்சால் பெரிதும் பாதிக்கப்பட்டாள். ஆகவே ஊரில் நமக்கு ஒரு வீடு வேண்டும் என்று எண்ணம் வளர்த்து, செயல்புரியத் தூண்டி, காரியத்தை சாதித்தாள். சிற்றப்பா ஒருவரின் உதவியோடு வீடு கட்டப்பட்டது. பெரியப்பா ஒருவரின் சகாயத்தோடு மேலும் சிறிதளவு நிலம் வாங்கப்பட்டது.

அந்த அம்மாளும், ஒரு ஆண்குழந்தையைப் பெற்றெடுத்த சிறிது காலத்திலேயே, 'கைலாச பதவி அடைந்தாள்.'

அப்பா உத்தியோக நிமித்தம் வெளிஊர்களிலேயே வசித்ததால், ராஜவல்லிபுரம் வீடு பெரும்பாலும் அடைத்துக் கிடக்கவே நேரிட்டது. வயல்களை 'மேல்பார்வை பார்க்கும்' பொறுப்பை ஏற்றிருந்த பெரியப்பாவே அந்த வீட்டையும் கவனித்துக் கொண்டார். அந்த வீட்டை ஒட்டிய முன்வீடாக - தெரு ஓரத்து வீடாக அவர் வீடு இருந்தது.

தம்பி வீட்டையும் அவர் தனது சொந்த உபயோகங்களுக்கு, நிலவாகை இலை காயப்போட, வேகவைத்த நெல்லை உலர்த்துவதற்கு,

இப்படிப் பல வேலைகளுக்குப் பயன்படுத்திக் கொண்டார். நிலத்தை மேற்பார்வை பார்த்ததிலும், அவர் சொன்ன கணக்குகளை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலைமை தான் அப்பாவுக்கு இருந்தது.

ஊரில் நிலம் வீடு என்று வைத்து விட்டு, வெளியூர்களில் வேலை பார்ப்பதற்காகத் தங்கிவிடுகிற சிலரின் சொத்தை, அன்புகாரணமாகவும் உறவுரீதியிலும் 'மேல்பார்வை பார்த்து' கணக்கு வைத்து உதவுவதை நெருங்கிய சொந்தக்காரர்கள் உபரித் தொழில் ஆக ஏற்றுக்கொள்வது உண்டு. கிராமத்தோடு இருந்து விவசாயம் பண்ணி வாழ்க்கை நடத்துகிற அவர்களுக்கு இப்படி 'மேல் பார்வை பார்ப்பது' என்பது லாபகரமான 'சைடு பிசினஸ்' ஆகிவிடுகிறது. அவர்கள் சொல்வதையும் கொடுக்கிற கணக்குகளையும் தாம் நம்பியாக வேண்டும் வெளியூரில் வசிப்பவர்கள்.

'சூடு அடிக்கிற மாட்டை வாயைக் கட்ட முடியுமா?' 'தேன் எடுத்தவன் புறங்கையை நக்காமல் இருப்பானா?' போன்ற பழமொழி களைச் சொல்லி தங்களைத் தாங்களே திருப்திப் படுத்திக் கொள்வது தவிர அவர்களுக்கு வேறு வழி கிடையாது. 'சரி, போகுது' வேறு யாரை யாவது மேனேஜ் பண்ணச் சொன்னாலும், அவர்களும் இப்படித் தான் நடந்து கொள்வார்கள். அயலான் சாப்பிடுவதை விட, நம்ம அண்ணன் தம்பி (அல்லது நெருங்கிய சொந்தக்காரர்) தான் சாப்பிட்டு விட்டுப் போகட்டுமே!' என்று தாராளத்தனம் காட்டக் கற்றுக் கொள்கிறார்கள் அவர்கள்.

## ⌘ 4 ⌘

தன் மூன்று பிள்ளைகளோடு ரயிலில் பயணம் செய்து வந்த களைப்போடு வீடு சேர்ந்த அம்மாவுக்கு, ராஜவல்லிபுரம் வீடு இருந்தநிலை எரிச்சலே தந்தது.

தெருவடி வீட்டிலிருந்த பெரியப்பாவிடம் வீட்டின் திறவுகோலும் அரிக்கன்லாந்தரும் பெற்று வந்த அம்மா கதவுப் பூட்டைத் திறந்தும் கூடக் கதவை நன்கு திறக்க முடியவில்லை. உள்ளே எதுவோ தடங்கலாகக் கிடந்தது.

பின்னாலேயே வந்த பெரியப்பா கதவை அழுத்தித் திறக்க

முயன்றார். பழங்காலத்து வீட்டின் கனமான கதவு. அது உள்வாக்கில் தாராளமாக இயங்குவதற்குத் தடையாக எது கிடக்கிறது என்று கவனித்த பெரியப்பா, 'வேறொண்ணுமில்லே. சுவரு மூலையிலே நெல்லை குவிச்சு வச்சிருக்கு. அது சரிந்து வந்து கதவைத் தடுக்குது' என்று தெரிவித்தார்.

அவர் வீட்டு வண்டிக்காரனை அழைத்து, அதை சரிபண்ணும்படி சொன்னார். அவன் சிரமப்பட்டு, கதவை ஒருக்களித்து, தனது காலினால் நெல்லை சிறிதுசிறிதாக விலக்கினான். ஒரு ஆள் புகும் அளவுக்குக் கதவைத் திறக்க வசதிப்பட்டதும், அவன் உள்ளே நுழைந்து, நெல்லை ஒதுக்கினான். போதுமான அளவு சரிப்படுத்தியதும் கதவைத் திறந்தான்.

தன் வீட்டுக்குப் போய் சாக்குகள் எடுத்து வரும்படி பெரியப்பா வண்டிக்காரனை ஏவினார். அவன் சாக்குகள் கொண்டு வந்ததும், சுவர் மூலையில் அம்பாரமாகக் கொட்டிக் கிடந்த நெல்லை சாக்குகளில் அள்ளி மூட்டைகளாக்கும்படி சொன்னார்.

சிறிது நேரத்தில் அந்த வேலை முடிந்தது.

'வயல் அறுவடையானதும் நெல்லை வியாபாரியிடம் விலைக்குக் கொடுக்கலே. விலைவாசியை பார்த்துக் கொண்டு மெதுவாப் போடலாமேன்னு மூலையிலே குவிச்சு வச்சிருக்கோம்' என்று பெரியப்பா விளக்கினார். 'இப்ப ராத்திரிக்கு நம்ம வீட்டிலேயே சாப்பிடலாம்' என்றும் கூறினார்.

அம்மாவும் இசைவு தெரிவித்தாள்.

சாப்பாடு முடித்து வீடு திரும்பியதும் அம்மா வீட்டை சுத்தம் செய்வதிலும் ஒழுங்குபடுத்துவதிலும் முனைந்தாள். பெரியப்பா பற்றியும் மற்றுமுள்ள சொந்தக்காரர்கள் பற்றியும் குறைகூறிக்கொண்டே வேலைகளை செய்தாள்.

அம்மாவின் சுபாவம் அப்படி. பார்க்கப் போனால், பொதுவாகப் பெண்களின் இயல்பே அவ்வாறு தான் இருக்கிறது. தான் புகுந்த வீட்டைச் சேர்ந்தவர்களை, கணவனின் உற்றார் உறவினரை சதா குறைகூறுவதும், அவர்கள் பேரில் குற்றம் சுமத்துவதும், தாங்கள் பிறந்த வீடு, பிறந்த ஊர், அங்கே உள்ள சொந்தக்காரர்கள் பற்றிப் பெருமை பெருமையாகப் பேசுவதும் பெண்களின் சுபாவமாக இருக்கிறது.

கணவனின் உறவினரும் ஊர்க்காரர்களும், மணமாகி வீட்டுக்கு

வந்தவளைக் குறை கூறுவதில் மிகுந்த ஆர்வம் உடையவர்களாகக் காணப்படுகிறார்கள். மாமியார், நாத்தனார் முதலியவர்கள், வந்து சேர்ந்தவளை முழுமனசோடு ஏற்று, சொந்தம் கொண்டாடுவதில்லை. ஊர்க்காரர்களும் வெளியூரிலிருந்து மணமாகி வந்தவளை அந்நிய மாகவே கருதுகிறார்கள். அவள் எந்த ஊரிலிருந்து வந்தாளோ அந்த ஊர்க்காரியாகவே மதிக்கிறார்கள்; குறிப்பிடுகிறார்கள்.

மாறாந்தையிலிருந்து வந்தவள் மாறாந்தைக்காரி, கிடாரக்குளத்தில் இருந்து வந்தவள் கிடாரக்குளத்தா, கார்சேரியைச் சேர்ந்தவள் கார்சேரியா(ள்) - இப்படி அவள் எந்த ஊரிலிருந்து வந்தாளோ அந்த ஊர்க்காரியாகவே கடைசிவரை குறிப்பிடப்படுகிறாள். கலியாணமாகி இங்கு வந்து எத்தனை வருடங்கள் வாழ்ந்திருந்தபோதிலும், அவள் ராஜவல்லிபுரத்தாளாக மதிக்கப்படுவதேயில்லை. இந்த ஊரிலிருந்து வேற்றூருக்கு வாழ்க்கைப்பட்டுப் போகிற பெண்தான் ராஜவல்லி புரத்தாள் என்ற பெயரைப் பெறுகிறாள், அவள் போய்ச் சேர்ந்த ஊரில்.

ராஜவல்லிபுரத்தில் வசித்த உறவுக்காரர்கள், முகத்துக்கு நேரே சிரித்துப் பேசிச் சொந்தம் கொண்டாடிய போதிலும், அம்மா இல்லாத போது அவளைப் பற்றிக் குறைவாகவே பேசினார்கள். அதே போல அம்மாவும் அவர்களிடம் நடந்து கொண்டாள். அப்பாவின் சொந்தக்காரர்களை எப்போதும் அம்மா கரித்துக்கொட்டியவாறே இருந்தாள். அதே சமயம் அவள் வீட்டுப் புரவோலங்களைப் பெரிது படுத்தினாள். அவர்கள் வீட்டின் பெருமைகள், கீர்த்திகள், அவளுடைய அண்ணாச்சிகள் தம்பிகளின் பிரதாபங்கள், ஊரின் மேன்மைகள் குறித்து எப்போதும் உயர்வாகவே பேசி மகிழ்வது அம்மாவின் வேலையும் பொழுது போக்குமாகவே இருந்தது. அவள் சாகிறவரை.

அதற்கு எதிர்வினையாகத் தானோ என்னவோ அப்பா, அம்மாவின் சொந்தக்காரர்கள், ஊர்க்காரர்கள், அந்த ஊர் பற்றியெல்லாம் நல்ல அபிப்பிராயம் கொண்டிருக்கவில்லை. அவர்களை வெறுத்தார் என்றே சொல்லலாம். சமயம் கிடைக்கிறபோதெல்லாம் அவர்களைப் பழித்தும் பரிகசித்தும் பேசிமகிழ்ந்தார். எங்கள் அம்மாவை சேர்ந்தவர்களை மட்டும் தான் அப்படிப் பழித்து வந்தார் என்றில்லை. முந்திய மனைவிமாரின் சொந்தக்காரர்களையும் பரிகசிக்கவும் பழிக்கவும் அவர் தயங்கியதில்லை.

என் அண்ணன் கல்யாணசுந்தரத்தின் மாமாக்களில் செந்திநாயகம்

என்று ஒரு மாமா இருந்தார். அவரைப் பற்றி அப்பா எங்களிடம் தமாஷாகக் குறிப்பிட்டுப் பாடுவது உண்டு.

*திங்கட்கிழமை சந்தைக்குப்*
*போனான் செந்திமாமன்*
*திருதிரு வென்று முழித்து*
*நின்றான் செந்திமாமன்!*
*செவ்வாக்கிழமை சந்தைக்குப்*
*போனான் செந்திமாமன்*
*செத்தபாம்பை அடிச்சுப்*
*போட்டான் செந்திமாமன்!*
*புதன்கிழமை சந்தைக்குப்*
*போனான் செந்திமாமன்*
*புடலங்காயைப் பார்த்துப்*
*பயந்தான் செந்திமாமன்!*

இந்த விதமாக இசைத்துப் பாடி மகிழ்ந்து, எங்களையும் மகிழ்விப்பது அப்பாவின் பழக்கமாக இருந்தது.

அப்பாவின் அப்பாவான முத்தைய பிள்ளையின் வம்சம் 'ஆல் போல் தழைத்து, அருகு போல் படர்ந்திருந்தத'ால், ராஜவல்லிபுரம் ஊரில் பெரும்பாலும் நெருங்கிய சொந்தக்காரர்களே மிகுந்திருந்தார்கள். பெரியப்பா சித்தப்பாக்களும் அத்தைமார்களும் அவர்களின் பையன்களும் பெண்களுமாக ஊர் நிறைந்திருந்தது.

நான் பிறப்பதற்கு முன்னரே எனது 'பெரிய பெரியப்பா' இறந்துபோய் விட்டார். அடுத்த பெரியப்பா குடும்பத்தோடு, பக்கத்து வீட்டுக்காரராக இருந்தார். சித்தப்பாக்களில் ஒருவர் கல்யாணம் ஆகாமலே, சின்ன வயசிலேயே, இறந்திருந்தார். இன்னொரு சித்தப்பா, மனைவியையும் மூன்று மகன்கள் ஒரு பெண் என நால்வரை விட்டு விட்டு இறந்துவிட்டார். மற்றும் இரு சித்தப்பாக்களில் ஒருவர் மிகவசதியாக வாழ்க்கை நடத்திக்கொண்டிருந்தார். மற்றவர் முரடர் எனப் பெயர் பெற்றிருந்தார். அத்தைமார் மூவரின் கணவர்கள் இல்லை. மக்கள் இருந்தார்கள். பெரிய பெரியப்பாவின் மகள்களுக்குக் கல்யாண மாகிப் பையன்கள் பெண்களோடு வாழ்ந்தார்கள். இப்படியாக நெருங்கிய உறவினர்கள் வளமாக வாழ்ந்து கொண்டிருந்தார்கள்.

ஊருக்கு வந்ததும், அம்மா கூறியபடி, சில உறவினர் வீடுகளுக்கு அவ்வப்போது அண்ணன் கோமதிநாயகமும் நானும் போய் வந்தோம்.

அத்தைமாரும் அக்காள்களும் பிரியத்தோடு வரவேற்றார்கள். காலை வேளையென்றால் தோசையும், தேங்காய்த் துண்டுகளும் கருப்பட்டியும் (கருப்புக்கட்டி - பனைவெல்லம்) கொடுத்து உபசரித்தார்கள். மாலை நேரமெனில் முறுக்கு, சீடை என்று அன்புடன் அளித்தார்கள். எந்நேரமும் கொடுத்து மகிழ்வதற்கு அவர்களிடம் ஏதாவது தின்பண்டங்கள் இருந்தன. கொடுக்கும் மனமும் அவர்களுக்கு இருந்தது.

நாங்கள் ஊருக்கு வந்த சில நாள்களில் அப்பாவும் விடு முறையில் ஊர்வந்து சேர்ந்தார். சில வாரங்கள் தங்கியிருந்தார். உத்தியோக ரீதியில் இடம் மாறுதல் உத்திரவு கிடைத்தது. கோயில் பட்டிக்கு மாறுதல்.

அப்பா முதலில் போய், கோயில் பட்டியில் வசதியாக வீடு வாடகைக்கு அமர்த்தியதும் எங்களை அங்கு அழைத்துக் கொண்டார்.

## ⌘ 5 ⌘

எனது நாலு, ஐந்தாவது வயதுக்காலம் கோவில்பட்டியில் கழிந்தது.

பிள்ளைப் பிராயத்தில் எல்லாமே புதுமைகளாய், விந்தைகளாய், வேடிக்கையுறக் கண்டு மகிழ்வதற்குரிய விஷயங்களாகவே காட்சி தருகின்றன. மனம் அவற்றை பசுமையாய் பதிவு செய்து கொள்கிறது.

கோவில்பட்டியில் நாங்கள் வசித்த பகுதி, தெருப்பெயர் போன்றவை நினைவில் பதியவில்லை. நாங்கள் குடியிருந்தது ஆனந்தம்பிள்ளை வீட்டு வளைவு. கொல்லம் ஓடு வேய்ந்த வீடுகள் வரிசையாக இருந்தன. விசாலமான அறைகள், தார்சா என வசதியான பகுதிகள் கொண்ட 'மட்டப்பாவு வீட்டில்' நாங்கள் இருந்தோம். வீட்டுக்காரர் பக்கத்து வீட்டில் குடியிருந்தார்.

வீட்டில் முன்புறம் சுவரைஒட்டி அவரைக்கொடி, அதே இனத்தைச் சேர்ந்த மூக்குத்திக்காய் கொடி எனப் பசுமையாக செடிகொடிகள் படர்ந்திருந்தன. பூக்களும் காய்களும் செழிப்பாகக் காணப்பட்டன.

சாயங்கால வேளைகளில், முன்வாசல் படிக்கட்டில் நானும் தம்பியும் பக்கத்துவீட்டுச் சிறு பெண்ணும் அமர்ந்து, தெருவோடு போகிற ஆள்களை, வண்டிகளை, நாய்களை எல்லாம் வேடிக்கை

பார்த்து மகிழ்ந்தோம். அந்த வழியே தினசரி மாலைநேரத்தில் ஒரு வெள்ளைக்காரத் துரை மிடுக்காக நடந்து போவது அதிசயமாகப் படும். அரைக்கால் சட்டை, வெள்ளை நிறச்சட்டை, காலில் பூட்ஸ், தலையில் தொப்பி அணிந்து, தோளில் ஒரு துப்பாக்கியைச் சுமந்தபடி அவர் போவார். அவர் வேட்டைக்குப் போய் வருவதாகப் பெரியவர்கள் சொல்வது உண்டு. ஒருநாள் கூட அந்தத் துரை வேட்டையாடிய பிராணி எதையும் கொண்டு சென்றதில்லை.

மழை பெய்த நாள்களில், அருகே சற்று தள்ளியிருந்த பள்ளங்களில் தண்ணீர் அதிகம் தேங்கிக்கிடக்கும். அதிகம் மழை பெய்தால் அந்தப் பக்கம் ஓடை மாதிரி செம்மண் தண்ணீர் ஓடும். அதில் ஆறு கால் பூச்சிகள் சில தென்படும். அவை நீர்ப்பரப்பின் மீது வேகமாகச் சுற்றி அலைந்து திரிந்தவாறு காணப்படும்.

அவை எழுத்தாணிப் பூச்சிகள்; அனா ஆவன்னா எழுதுகின்றன என்று பெரிய பையன்கள் சொல்வார்கள். தண்ணீர் ஓரத்தில் நின்றபடி ‘அனா எழுது - ஆவன்னா எழுது - ஈ எழுது’ என்று உரக்கக் கத்துவார்கள். பூச்சிகள் அப்படியும் இப்படியுமாக, எழுதுவது போல், சுற்றும். ‘பார்த்தியா, அனா எழுத்து! இதோ ஈ எழுதிட்டுது’ என்று உற்சாகமாகக் கூவிக் கைதட்டுவார்கள் பையன்கள்.

பெரிய பையன் ஒருவன் இருந்தான். பன்னிரண்டு பதின்மூன்று வயது இருக்கலாம். குறும்புத்தனங்கள் மிகுதியாகச் செய்வான். என் அப்பா அவனை ‘கோப்பன்! மலைக்கோப்பன்’ என்று குறிப்பிடுவது வழக்கம். ஒரு சமயம் அவன் ஒரு பறவையை பிடித்து வந்து காட்டினான். அழுத்தமான நீலமும் கபிலநிறமும் வெண்மையும் கலந்து பளிச்செனத் தோன்றிய தடிப்பறவை. அது ‘காடை’ என்று அவன் சொன்னான். பறவையை இரு கைகளிலும் அமுக்கிப் பிடித்தவாறு எல்லோரிடமும் காட்டி மகிழ்ந்தான். பறவை பயத்துடன் மிரள மிரள விழித்தது பரிதாபகரமாக இருந்தது.

மழைநாள்களில் ஒருநாள் கருடபட்சி (கிருஷ்ணப் பருந்து) ஒன்று, அடிபட்டு நோவுற்றது போல, கிருஷ்ணன்கோயிலில் அடைக்கலம் புகுந்தது. கோயிலின் முகப்பில், கொடிமரத்தின் அருகிலேயே, அது அசையாமல் இருந்தது. பலரும் அதை வேடிக்கை பார்க்கக் குழுமினார்கள். நாங்களும் தினசரி அந்தப் பட்சியை பார்த்து வந்தோம்.

அதற்கு பக்தர்கள் பால், பழம், கோயில் பிரசாதம் எல்லாம்

கொடுத்து உபசரித்தார்கள். பல நாள்கள் அந்தக் கருடன் கிருஷ்ணன் கோயிலிலேயே உட்கார்ந்திருந்தது. தெம்பு ஏற்பட்டதும் கோயில் வட்டாரத்தில் பறந்து திரிந்துவிட்டு, மீண்டும் கொடிமரத்தின் அருகில் வந்து உட்கார்ந்துகொள்ளும். திடீரென்று ஒருநாள் அது பறந்து வெளியேறி வான்வெளியில் சஞ்சரித்தது. அப்புறம் அந்தக் கோயிலுக்கு அது வரவேயில்லை.

ஒருசமயம் அப்பா கழுகுமலை ஊருக்குப் போன போது அண்ணனும் நானும் உடன்சென்றோம். அங்கே செயல்பட்ட பஞ்சு அறுவை ஆலையை - 'ஜின்னிங் ஃபேக்டரி'யை - பார்க்கும் வாய்ப்பு கிட்டியது. இயந்திரங்கள் தடதட ஓசையுடன் இயங்கிக் கொண்டிருந்தன; பஞ்சை பதப்படுத்தி வெளியே தள்ளியவாறு இருந்தன. அவை வெகுநேரம் பார்ப்பதற்கேற்ற வேடிக்கைக் காட்சியாகத் தோன்றியது.

இன்னொரு சமயம் அப்பா அம்மா, அண்ணன் தம்பியோடு கழுகு மலை கோயில் திருவிழா பார்க்கப் போயிருந்தோம். வில் வண்டியில். ஒரு இடத்தில் அப்பா வண்டியிலிருந்து இறங்கி மெதுவாக நடந்து வந்தார். அவ்வழியே கொட்டும் முழக்குமாகக் காவடி எடுத்து பக்தர் களும் அவர்களை சேர்ந்த கூட்டமும் வந்து கொண்டிருந்தது. கொட்டுச்சத்தமும் காவடி ஆட்டமும் என் கவனத்தை ஈர்த்தன.

வேடிக்கை பார்ப்பதற்காக நான் நகர்ந்து வண்டியின் பின்புறம் சென்றேன். ஆர்வத்தில் எட்டிப் பார்த்த போது, நிலை தவறி வண்டியிலி ருந்து விழுந்தேன். வண்டியின் பின் பக்கம், ஆள் ஏறுவதற்கு வசதியாக அமைக்கப்பட்டிருந்த வட்டவடிவ இரும்பு மிதிபடியில் என்முகம் தாக்குண்டது. மேல்உதட்டில் வெட்டுக் காயம் ஏற்பட்டு ரத்தம் கொட்ட லாயிற்று. பலத்த அழுகையோடு நான் ரோடில் விழுந்தேன்.

'ஐயோ, பிள்ளை...' என்று வண்டிக்குள்ளிருந்த அம்மா கத்தவும், வண்டிக்காரன் வண்டியை நிறுத்தினான். பின்னால் சற்று தள்ளி நடந்து வந்த அப்பா, 'தொலை... சாகு...? என்று கோபத்தோடு கூச்சலிட்டபடி நெருங்கினார். அதற்குள் யாரோ என்னை தூக்கி எடுத்தார்கள். ரத்தம் வடிந்து கொண்டிருந்தது. பலத்த காயம் தான்.

மருத்துவமனைக்கு எடுத்துப் போய் எனக்கு உரிய சிகிச்சை செய்யப் பட்டது. மேல் உதட்டில் சிறு தையல் போட வேண்டியதாயிற்று. அந்தக் காயம் ஆறுவதற்கு அநேக நாள்கள் பிடித்தன. காயத்தின் தழும்பு

ரொம்பகாலம் இருந்தது. வளர்ந்து பெரியவனான பிறகும், கூர்ந்து நோக்குகிறவர்களுக்கு புலப்படக் கூடியதாக அது படிந்திருந்தது.

கோவில்பட்டியில் இருந்த போது என் வாழ்க்கையில், நிகழ்ந்த முக்கியமான நிகழ்ச்சி எனது 'அட்சராப்பியாசம்' - அதாவது 'வித்யாரம்பம்' - அதாவது கல்விப்பயிற்சி துவக்கம் - படிப்பதற்காக பள்ளிக்கூடத்தில் சேர்த்தது ஆகும்.

அது பெரிய விழா மாதிரி நடத்தப்பெற்றது. சரஸ்வதி பூஜைக்கு மறுநாள், எனக்கு 'எழுத்தறிவித்தல்' ஆரம்பித்து வைக்கப்பட்டது. முறைப்படி மேளதாளத்துடன். வீட்டின் பெரிய பட்டாசாலையில் ('பட்டாசல்') கூட்டம் குழுமியிருந்தது. அவல் பொரிகடலை பழங்கள் முதலியன அதிக அளவில் வைக்கப்பட்டிருந்தன. குத்து விளக்கேற்றி, பூஜைகள் செய்து, அண்ணாவி வந்து எழுத்து கற்றுக் கொடுப்பதைத் துவக்கி வைத்தார்.

மறுநாள், அருகிலிருந்த அண்ணாவியின் திண்ணைப் பள்ளிக் கூடத்தில் கொண்டுவிடப்பட்டேன். ஓலைக் குடிசை. உயர்ந்த ஒரு திண்ணை மீது வாத்தியார் அமர்ந்திருப்பார். அவருக்கு அண்ணாவி என்று பெயர். அவர் கையில் எழுத்தாணி பிடித்து ஏட்டில் எழுதிக் கொண்டிருப்பார்.

பிள்ளைகள் கீழே உட்கார்ந்திருப்பார்கள். சிறுவர் சிறுமியர் சேர்ந்தே இருப்பர். மணல் பரப்பப்பட்டிருக்கும். அந்த மணலில் விரலால் எழுதி எழுதிப் பழக வேண்டும். கற்பலகை, குச்சி எதுவும் கிடையாது.

எழுத்தறிவித்த விழாநாள் அன்று, மஞ்சள் பூசிய - எழுத்துக்கள் எழுதப் பெற்றிருந்த - புது ஏடு ஒன்றும் என்னிடம் அளிக்கப் பட்டிருந்தது. அதை எடுத்துக் கொண்டுதான் பள்ளிக்கூடம் போனேன்.

ஒன்றிரு மாதப் பயிற்சிக்குப் பிறகு, அந்தத் திண்ணைப் பள்ளியிலி ருந்து நான் வேறொரு பெரிய பள்ளியில் சேர்க்கப் பட்டேன். பாலர் வகுப்பில். இங்கு கற்பலகை, குச்சி, புத்தகம் எல்லாம் உண்டு. என் அண்ணன் படித்துக் கொண்டிருந்தது இந்தப் பள்ளியில்தான்.

அது கடைவீதியில் இருந்தது. கடைகளும், அங்கே அடுக்கி வைத்து விற்பனை செய்யப்பட்ட பலவகைப் பொருள்களும் அவற்றின் வர்ண வேறுபாடுகளும் கவனத்தைக் கவரும் காட்சிகளாக விளங்கின.

பள்ளிக்கூடம் போய் வருவது சந்தோஷமான அனுபவமாகத் தான் இருந்தது.

அந்த ஆண்டின் இறுதியில் நாங்கள் மீண்டும் ராஜ வல்லிபுரம் சேர்ந்தோம். சென்ற முறை போய் தங்கிவிட்டு வந்தபோது, அந்த வீட்டை அடைத்துப் பூட்டிவிட்டு வரவில்லை. அம்மாவின் உறவுமுறைப் பெண்கள் இருவர் அங்கு வாடகைக்குக் குடியிருக்க வந்து சேர்ந்தனர்.

இம்முறை ஊரில் சில மாதங்கள் தங்கியிருப்பது; வீட்டை விஸ்தரித்து புதிய பகுதிகள் கட்டுவது என்ற திட்டம் இருந்தது. அதனால் வீட்டில் குடியிருந்த அம்மாள்கள் வேறு வீடு பார்த்துக் கொண்டு போக நேரிட்டது.

## ⌘ 6 ⌘

ராஜவல்லிபுரம் சைவர்களின் உறைவிடம். அவர்கள் சிவனை வழிபட்டார்கள். ஊரில் பெரிய அளவிலான சிவன் கோயில் ஒன்று உள்ளது. இறைவன் பெயர் அக்னீஸ்வரர், அம்மன் பெயர் அகிலாண்டம்.

ஊர் மக்களிடம் ஈஸ்வரனைவிட அகிலாண்டநாயகிதான் அதிகம் செல்வாக்கு பெற்றிருந்தாள். அதனால் அவர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு அகிலாண்டம் என்று பெயர் சூட்டுவதில் மிகுந்த ஆர்வம் கொண்டனர். ஆண்களுக்கும் பெண்களுக்கும் பொதுவான பெயராகவே அது விளங்கு கிறது. எனவே, ஊரில் அகிலாண்டம்கள் அதிகம்.

ஊருக்கு உடபுறத்தில் தனித்து ஒரு காளி கோயில் உண்டு. சிறு கோயில் தான். ஆயினும் சக்தியுள்ள தெய்வம் என்று பெயர் பெற்றுள்ளது. தேவியின் பெயர் வலதி அம்மன். வலபூதி அம்மன் என்று எழுத்தில் குறிப்பிடுவர். தேவமார் (மறவர்), கோனார் மற்றுமுள்ள இதர இனத்தவர் தங்கள் பிள்ளைகளுக்கு வலதி என்று பெயரிடும் மரபு உள்ளது. இதுவும் ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவான பெயர்தான். எனவே அவ்வூரில் வலதி எனப் பெயர் பெற்றவர்களும் அதிகம் உள்ளனர்.

இவை போக, கோபாலகிருஷ்ணன் என்ற பெயருடையவர்கள் அதிகம் இருந்தார்கள் அங்கு. இதற்கு விசேஷமான காரணம் உண்டு.

என் தாத்தா முத்தைய பிள்ளையின் அப்பா பெயர் கோபால கிருஷ்ணபிள்ளை. முத்தையபிள்ளைக்கு மகன்களும் மகள்களும் பலர். அவர் மரபுப்படி, தன் மூத்த மகனுக்கு தன் தந்தையின் பெயரான கோபாலகிருஷ்ணன் என்பதை வைத்தார். அந்த மகன்வழிப் பேரன்களும், இதர மகன்கள் மகள்கள் பிள்ளைகளும் மரபுரீதியாக, குடும்பத்திற்கு ஒருவர் கோபாலகிருஷ்ணன் என்ற பெயரை ஏற்றார்கள். எனக்குக் கூட முதலில் கோபாலகிருஷ்ணன் எனும் பெயர் தான் இடப்பட்டிருந்தது. பின்னர் என்னை பள்ளிக்கூடத்தில் சேர்த்த போது என் அப்பா என் பெயரை கிருஷ்ணசுவாமி என்று மாற்றிவிட்டார். அவ்வூரில் கிருஷ்ணசுவாமி என்ற புதுப்பெயரை முதன்முதலாகப் பெற்றவன் என்ற பெருமை எனக்கு வந்து சேர்ந்தது.

சிவப்பற்று மிகுதியாக உடைய சைவவேளாளர் குடும்பத்தில் இப்படி வைஷ்ணவப் பெயர் ஏன் புகுந்தது; எப்படி இந்தப் பெயரை இட்டார்கள் என்று பிற்காலத்தில் என்னிடம் சிலர் கேள்வி கேட்பது சகஜமாயிற்று.

அதற்கு சுவாரசியமான ஒரு வரலாற்று நிகழ்வுதான் அடிப்படைக் காரணமாகும்.

சுமார் இருநூறு அல்லது இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னர், கார்காத்த வேளாளர் குடும்பத்தினர் சிலர் வடக்கேயிருந்து புறப்பட்டு தென்தமிழ் நாடு நோக்கி வந்தார்கள். அவர்கள் பந்தல் குடி என்ற ஊரிலிருந்து வந்ததாகச் சொல்லப்படுகிறது. வழியில் ஆற்றங்கரைத் தோப்பு ஒன்றில் தங்கினார்கள். அதிகாலை நேரத்தில், உதயமாகி எழுந்து மேலேறிய சூரியனின் பொற்கிரணங்கள் பட்டு ஒளிர்ந்த மாமரங்களில் ஒன்றின் ஒரு கிளையிலிருந்து பளபளப்பான ஒளி பட்டுத் தெறித்தது. அதை கூர்ந்து நோக்கிய ஒருவர் பார்வையில் ஒரு குரங்கு தென்பட்டது. அக் குரங்கு ஒரு செம்பைப் பற்றியிருந்தது. அச் செம்பின் மீது வெயில் பட்டதனால் தான் தகத்தக ஒளி எழுந்தது என்பதை அவர் கண்டு கொண்டார்.

அது தங்கச் செம்பாக இருக்க வேண்டும் என்று அவர் எண்ணினார். கீழே குனிந்து கற்களை எடுத்தார். ஒன்றின் பின் ஒன்றாகக் கற்களை குரங்கை நோக்கி வீசினார். மிரட்சியடைந்த குரங்கு அவரை நோக்கி செம்பை விட்டெறிந்துவிட்டு, வேறு கிளைக்குத் தாவியது.

அவர் அந்தச் செம்பைக் கைப்பற்றினார். பார்த்தார். சுமாரான

அளவில் அமைந்திருந்த உருண்டைச் செம்பு அது. பொன்முலாம் பூசப்பட்டிருந்த அச் செம்பில் தெய்வ உருவம் பதிக்கப்பட்டிருந்தது. நன்கு கவனித்ததில், அது கோபால கிருஷ்ணன் திருஉருவம் என்பது புரிந்தத. பூஜைக்குப் பயன்படுத்தப்பட்ட புனிதமான செம்பாக அது இருக்க வேண்டும்; அதை எப்படியோ குரங்கு எடுத்து வந்திருக்கிறது என்று அவர் கருதினார். மற்றவர்களும் அதை ஆமோதித்தனர்.

அந்தச் செம்பை நாமும் பூசிக்க வேண்டும் என்ற எண்ணம் அவருள் எழுந்தது. வீடு சேர்ந்ததும் அதைத் தனி இடத்தில் வைத்து உரிய முறையில் தொழுது வணங்க வேண்டும் என்று அவர் தீர்மானித்தார்.

செம்பைக் கண்டெடுத்தவரும் அவரை சேர்ந்த்வர்களும் ராஜவல்லி புரம் கிராமத்தில் தங்கினார்கள். பந்தல்குடி என்ற ஊரிலிருந்து வந்தவர் களாதலால் அவர்கள் பந்தல்குடி வம்சத்தார் என்று குறிப்பிடப் படலாயினர்.

இயல்பாகவே தெய்வநம்பிக்கையும் பூஜைகளில் பற்றுதலும் கொண்டிருந்த அவர், தானும் தன் குடும்பமும் தங்கிய வீட்டில், தனியாக பூஜை அறை அமைத்தார். அங்கு கோபாலகிருஷ்ணன் உருவம் தீட்டிய செம்பை வைத்து வழிபடத்தொடங்கினார்.

முதல்நாள் இரவு அவரை உளம் சிலிர்க்கச் செய்த கனவு ஒன்று தூக்கத்தில் அவருக்குத் தோன்றியது. தவக்கோலம் பூண்ட முனிவர் ஒருவர் காட்சிதந்தார். உனக்குக் கிடைத்திருப்பது சாதாரணச் செம்பு இல்லை. சும்மா பால்கறக்க உபயோகப்படும் பாத்திரம் இல்லை அது. புனித விக்ரகம் போன்றது. தியானம் செய்து தினந்தோறும் பயபக்தி யோடு நான் பூஜித்து வந்த தெய்வ உருவம் அது. நான் நீராடச் சென்றிருந்த போது, குரங்கு மடத்தினுள் புகுந்து அதை எடுத்து வந்துவிட்டது. உன் முன்னோரின் பூஜாபலத்தினாலும், உனது நற்பேறு காரணமாகவும் அது உனது பார்வையில் பட்டிருக்கிறது. உன் நல்ல காலம் நீ அதை அடைந்திருக்கிறாய். தினசரி அதை வழிபட்டு வணங்கிவா. உனக்கு நல்லதே நடக்கும். உனது வருங்காலம் வளமான தாகும் என்று அந்த முனிவர் அருள்புரிந்தார். செம்பு பெற்றவர் அவர் காலில் விழுந்து வணங்கி, அப்படியே செய்கிறேன் சுவாமி என உறுதியளித்ததும், முனிவர் மறைந்து போனார்.

திடுக்கிட்டுக் கண்விழித்த பெரியவருக்கு அது வெறும் சொப்பன மாகப் படவில்லை. உண்மையிலேயே முனிவர் காட்சி அளித்து

அவருக்கு ஆசிகூறி வாழ்த்தி அருள்புரிந்ததாகவே அவர் நம்பினார். அதனால் அவருடைய பக்தி அதிகரித்தது. பூஜைகள் சிறப்பாக நடந்துவந்தன.

அவருடைய பக்தியையும் அவர் மனைவியின் பயத்தையும் அதிகப் படுத்தும் தன்மையில் சில காரியங்கள் நடந்தன.

ஒருநாள் அதிகாலையில் அவர் ஆற்றில் நீராடிவிட்டு வந்து உரிய முறைப்படி பூஜை அறையில் புகுந்தபோது, கிருஷ்ணச் செம்பைச் சுற்றி வளையமிட்டபடி ஒரு நல்ல பாம்பு படுத்திருப்பதை அவர் கண்டார். மனித இயல்புப்படி அவர் உடம்பு நடுங்கத்தான் செய்தது. உள்ளத்தில் பயம் எழாமலில்லை. இருப்பினும் அவர் பயபக்தியோடு கைகூப்பி கோபாலசுவாமியை வணங்கினார். 'ஐயனே, இது என்ன சோதனை? நான் என்ன பாபம் செய்தேன்?' என்று புலம்பினார்.

பாம்பு தலைதூக்கி ஆட்டிவிட்டு, நகர்ந்து வெளியேறியது. அவர் வழக்கமான பூஜைகளை செய்துமுடித்தார். அன்று இரவும் அவர் ஒரு கனவு கண்டார். அதே முனிவர் தோன்றி அவரை ஆசிர்வதித்தார். 'அன்பனே, நீ பயப்படத் தேவையில்லை. அந்த கிருஷ்ணசர்ப்பத்தினால் எவ்விதமான தொந்தரவும் ஏற்படாது. அது கோபாலகிருஷ்ண விக்ரகத்தை வழிபட்டுப் பாதுகாக்கும் சக்தி, அதுக்கும் பால்வைத்து வணங்கு. யாருக்கும் தீங்கு செய்யாத நல்ல பாம்பு அது' என்று முனிவர் தெரிவித்தார்.

அன்றிலிருந்து பக்தர் அந்தப் பாம்பையும் தெய்வீக அம்சமாகவே மதித்தார். பால் பழம் படைத்துக் கும்பிட்டார். அந்தப் பாம்பு மற்றவர்கள் கண்களில் படாமல் மறைந்தே வசித்தது.

காலம் இயல்பின்படி ஓடியது. பாம்பு 'மனைகாவல் நாகம்' என மதிக்கப்பெற்று, பக்தியுடன் போற்றப்பட்டது. அப்படியிருக்கையில் ஒருநாள் அதிர்ச்சி தரும் ஒரு நிகழ்ச்சி நடந்தது.

வீட்டு ஐயா காலையில் ஆற்றுக்குக் குளிக்கப் போயிருந்தார். அம்மா காலைப் பணிகளை முடித்துவிட்டு வாய்க்காலுக்கு நீராடச் சென்றாள். அவர்களது கைக்குழந்தை தொட்டிலில் கிடந்தது. ஆழ்ந்த உறக்கம். அது இப்போதைக்கு விழித்தெழாது என்ற நம்பிக்கையோடு அம்மா புறப்பட்டாள். 'சாமி, கடவுளே! பிள்ளையை பத்திரமாப் பாத்துக்கோ' என்று முணமுணத்துவிட்டு, கதவைச் சாத்திப் பூட்டிவிட்டு வெளி யேறினாள்.

அவள் திரும்புவதற்குச் சிறிது நேரமாகிவிட்டது. ஐயோ, புள்ளெ எப்படி இருக்குதோ – தூங்குதோ, முழிச்சிட்டுதோ என்று முனகியபடி, பரபரப்போடு வீடு திரும்பினாள். குழந்தை வீரிட்டு அழும் சத்தம் கேட்டது. என்னவோ ஏதோ என்று பதறியடித்து வேகமாக நடந்து வந்து வீட்டுக் கதவைத் திறந்து, தொட்டில் பக்கம் பார்த்தவள் திடுக்கிட்டாள்.

அந்தப் பாம்பு படமெடுத்தபடி தொட்டில் அருகில் நின்று, தொட்டிலை படத்தினால் தொட்டு மெதுவாக ஆட்டிக்கொண் டிருந்தது. அழும் குழந்தையை தேற்றுவதற்காக அது தொட்டிலை ஆட்டுகிறது என்ற எண்ணம் குழந்தையைப் பெற்றவளுக்குத் தோன்ற வில்லை. பாவிப் பாம்பு பிள்ளையை கொத்துவதற்குத்தான் இப்படிச் செய்கிறது, அதனால் தான் பிள்ளை பதறி அழுகிறது என்று அந்தத் தாய் கருதினாள்.

கோபாலா, என் பிள்ளையை காப்பாத்து என்று கூவியபடி, அவசரமாக வந்து, இடுப்பிலிருந்த தண்ணீர்க்குடத்தை வேகமாக இறக்கிவைத்து விட்டு, தொட்டிலுக்குப் பாய்ந்தோடி பிள்ளையை பதற்றத்தோடு வெளியே எடுத்தாள். குழந்தைக்கு எதுவும் நேரவில்லை என்று உறுதி செய்து கொண்டதும், அதை மறுபடியும் தொட்டிலில் இட்டுவிட்டு, தனது ஈரச் சேலையை மாற்றப்போனாள். பிறகு குழந்தைக்குப் புகட்டுவதற்காக ஒரு தம்ளரில் பாலும், பாலாடையும் எடுத்து வந்து தொட்டில் அருகே உட்கார்ந்தாள். பிள்ளையை மடியில் அமர்த்தியபடி அதற்குப் பால் கொடுக்கலானாள். அவள் வந்ததும் பாம்பு தனது இடத்துக்குப் போய்விட்டது.

அத்தனை நேரமும் அவள் வாய் ஆங்காரச் சொற்களை துப்பிக் கொண்டே இருந்தது. நாசமாப் போற பாம்பு நடுவீட்டிலே வந்து இருந்து கொண்டு எல்லாரையும் பயப்படுத்துதே. இந்தப் பாம்பு எப்ப தான் ஒழியுமோ? ஒருவேளையைப் போல ஒரு வேளை இருக்குமா? அது பாம்புப்புத்தியை என்றைக்காவது காட்டாது என்று எப்படிச் சொல்லமுடியும்? அறியாப் பிள்ளை இருக்கிற வீட்டிலே இப்படி நல்ல பாம்பு சுத்திச் சுத்தி வந்தா, பிள்ளை பயப்படாமல் இருக்குமா? பாம்பு தான் பிள்ளையை கொத்தாமல் இருக்குமா? இந்தப் பாம்பு வீட்டை விட்டுத் தொலைஞ்சால் தான் நிம்மதியா வாழமுடியும்...

இந்த விதமாக அவள் புலம்பிக் கொண்டிருந்தாள். அப்போது

அவள் எதிர்பாராத காரியம் நடந்தது. கோபாலகிருஷ்ணன் திருஉருவத்தின் அருகில் அமைதியாய் சுருண்டு கிடந்த நாகம் வேகமாக முன்னே வந்தது. அந்தத் தாயை ஒருமுறை சுற்றியது. சத்தியம் செய்வது போல, டம்ளர் பாலில் தனது வால் நுனியால் அடித்தது. அவள் முன் தலை தாழ்த்தி வணங்குவது போல் செய்துவிட்டு, சர்ரென நகர்ந்து வாசல்படி வழியாக வெளியேறி விர்ரென ஓடி மறைந்தது. அது எப்படிப் போயிற்று, எங்கு போயிற்று என்று அவள் கவனிக்கவில்லை. அவள் விதிர்விதிர்த்து, சாமி, கோபாலா என்று முனகியபடி, பிள்ளையை 'ஆவிச்சேர்த்து அணைத்துக்கொண்டு' உட்கார்ந்திருந்தாள்.

வீட்டு ஐயா குளித்து விட்டு வந்தவர், மனைவி இருக்கிற நிலையைக் கண்டு பதறினார். என்னவோ நடந்திருக்கிறது என்று ஊகித்துக் கொண்ட அவர், என்ன விஷயம், ஏன் இப்படி குறுகுறுன்னு உட்கார்ந்திருக்கிறே என்று கேட்டார். அவள் நடந்ததைச் சொன்னாள். பாம்பு பாலில் வாலால் அடித்துவிட்டுப் போனதையும் தெரிவித்தாள்.

அவருக்கு ஆத்திரம் பொங்கியது. அடி பாவி, கெடுத்தியே கேட்டை! தெய்வமாக வந்து மனைப் பாம்பாகக் காவல்காத்துக் கொண்டிருந்த ஒரு ஜீவனை இப்படி பழிசொல்லி விரட்டியடிச்சிட்டியே! அது தொட்டிலை ஆட்டியிருக்குமே தவிர, பிள்ளையை கொத்த வந்திருக்காது. இப்ப சாமி கோபம் ஏற்பட்டுவிட்டதே என்று புலம்பினார். ஒரு மாதிரியாக பூஜையை முடித்துவிட்டு, தோட்டம் பக்கமெல்லாம் சுற்றி, கோபாலா கோபாலா என்று கூவியபடி அலைந்தார். பாம்பு அவர் கண்ணில் படவேயில்லை. அவர் சாப்பிடாமல், வருத்தத்தோடு கோபால்சாமி முன்னேயே வெறும் தரையில் படுத்து விட்டார். மனைவி சாப்பிட அழைத்தும் அவர் மனம் மாறவில்லை.

தன்னை அறியாமலே அவர் தூங்கிவிட்டார். அப்போது கனவில் பழைய முனிவர் தோன்றினார். அன்பனே, கவலைப்படாதே. வருத்தப்பட வேண்டாம். தாய் தனது பிள்ளைக்காகப் பயந்து குறைகூறியது இயல்பு தான். வீட்டுக்குள் பாம்பு இருந்தால் யாரும் பயப்படத்தான் செய்வார்கள். பாம்பினால் உனக்கோ, குழந்தைக்கோ, உன் குடும்பத்துக்கோ எந்த விதமான தீங்கும் நேராது. அந்தப் பாம்பு யார் கண்ணிலும் படாமல் மனைக்காவலாக இருக்கும். நீ வழக்கம் போல் பூஜை செய்து வா என்று அருள்புரிந்து விட்டு மறைந்தார்.

திடுக்கிட்டு விழித்தெழுந்த பிள்ளை கோபால் சாமி உருவத்தின் முன் விழுந்து கும்பிட்டார். மனைவியிடம், முனிவர் வந்து விளக்கியதைச் சொன்னார். தனது வழக்கமான அலுவல்களில் ஈடுபட்டார்.

அவர் குழந்தைக்கு கோபாலகிருஷ்ணன் என்ற பெயரே சூட்டப் பெற்றது. அதன் பின்னர் அவர்கள் வம்சத்தில், முதல் பிள்ளைக்கோ அல்லது ஏதாவது ஒரு குழந்தைக்கோ, கோபால கிருஷ்ணன் என்று பெயரிடுவது ஒரு மரபு ஆகி நிலைத்துவிட்டது.

அந்தப் பெரியவர் வழிவந்த குடும்பத்தார் ஒவ்வொருவர் வீட்டிலும் குலதெய்வமான கோபாலகிருஷ்ணனை முறைவைத்து பூஜைகள் செய்யும் வழக்கமும் ஏற்பட்டது. அவர்கள் வீடுகளில் ஒரு அறையில் முக்கியமான இடத்தில் சுவரில் 'சாமி சேர்மாடம்' என்று ஒரு அமைப்பும், அதனருகில் பூஜைச் சாமான்களை வைப்பதற்கான 'மாடக்குழி'யும் கட்டி வைத்திருக்கும். அந்தக் குடும்பத்தில் ஏதாவது முக்கியமான விசேஷம் வந்தால், கோபால கிருஷ்ணன் உருவம் பதித்த செம்பை, அது இருக்கும் வீட்டிலிருந்து எடுத்து வந்து, அதற்கான மாடத்தில் வைத்து, உரிய முறையில் பூஜை செய்வார்கள்.

வேறொரு வீட்டில் விசேஷ நிகழ்வு வருகிற வரை கோபால சாமி அந்த வீட்டிலேயே தங்கியிருக்கும். வீட்டுக்காரரே பூஜை செய்வதற்குப் பதிலாக, பூஜை செய்வதற்கென்றே ஒரு தனி ஆள் நியமிக்கப்பட்டார். தினந்தோறும் அவர் குளித்து சுத்தமாக வந்து பக்தியோடு பூஜை பண்ணுவார். வீட்டுக்காரர் வெண்ணெய், சர்க்கரை, பால்பழம் வெற்றிலை, ஊதுவத்தி, சூடன் முதலிய பூசைப் பொருள்களை குறைவின்றி அளித்துவர வேண்டும். தினசரி அந்த அறையில் தரையை நன்கு மெழுகிக் கோலமிட்டு சுத்தமாக வைத்திருக்க வேண்டும்.

காலப்போக்கில் குடும்பங்களில் பொருளாதார சிரமங்கள் ஏற்பட்ட போது, இப்படி பூஜைக்கு ஏற்பாடு செய்வதும் சில சமயங்களில் சுமையாகத் தோன்றத் தொடங்கியது. அதனால் கோபாலசாமியை ஒரு வீட்டிலிருந்து மற்றொரு குடும்பத்துக்குக் கொண்டு சென்று பூஜை பண்ணுவதில் ஒருவித மெத்தனம் ஏற்படலாயிற்று. ஒருவர் ஒரு விசேஷத்துக்காக சாமியை எடுத்து வந்தால், அவர் வீட்டிலேயே சாமி தொடர்ந்து பல மாதங்கள் தங்கிவிடக் கூடிய நிலைமை உருவாயிற்று.

'கிருஷ்ண ஜயந்தி' வருகிற போது, அந்த உருவம் எந்த விட்டில் தங்கியிருக்கிறதோ அந்த வீட்டினர் அதிகம் செலவு செய்து கிருஷ்ணன்

பிறப்பைக் கொண்டாட வேண்டும் என்று பலரும் எதிர்பார்ப்பதும், அப்படியே செய்யப்படுவதும் தவிர்க்கமுடியாததாயிற்று.

இருப்பினும், கோபாலசாமியை குலதெய்வமாக வரித்துக் கொண்ட குடும்பங்களை சேர்ந்தவர்கள், எப்பவாவது ஒரு முறையேனும், சாமியை அவரவர் வீட்டுக்குக் கொண்டு வந்து வைத்து முறைப்படி பூஜை செய்வது காலம் காலமாக நடந்து வருகிறது.

எங்கள் வீட்டிலும் ஒரு அறையில் 'சாமி சேர் மாட'மும் அதை ஒட்டிய பெரிய மாடக்குழியும் எடுப்பாக அமைக்கப்பட்டிருந்தன.

அந்த வீடு வசதியாக, அநேக அறைகளுடன் கட்டப்பட்டிருந்தது. திறந்த முற்றம், அதை ஒட்டி தார்சா (திண்ணை), கதவைத் திறந்ததும் பெரிய பட்டாசல் (பட்டாசாலை) அதன் மூன்று புறமும் தனி அறைகள். அடுப்பங்கரையாகப் பயன்படுத்தப்பட்ட அறையை ஒட்டி 'அரவீடு' (அரங்கு வீடு) என்கிற சிறு அறை - சமையலுக்குத் தேவைப்படும் சாமான்களை பாதுகாப்பாக வைத்திருக்கிற இடம். அந்த சமையல் அறைக்கு வடபக்கம் காலி மனை கிடந்தது. அந்த இடத்தில், புதிதாகத் தனி சமையலறையும், விஸ்தாரமான 'தொட்டிக்கட்டும்' கட்டுவது என்று திட்டமிடப்பட்டது. தோட்டத்து மூலையில் கிணறு இருந்தது.

அப்பா பணியிலிருந்து விடுமுறை பெற்று ஊருக்கு வந்து சில மாதங்கள் தங்கி, வீட்டுப் பகுதியை விஸ்தரிக்கும் பணியில் ஈடுபட்டார். அதற்காக ஊரில் தங்கியிருந்த காலம் இனிமையானதாக இருந்தது.

வீட்டில் வில்வண்டி இருந்தது. அதற்காக மாடுகள் வளர்க்கப் பட்டன. வீட்டு உபயோகத்துக்குப் பால்மோர் தேவை என்று பசு மாடும் வளர்க்கப்பட்டது. கிராமங்களில் வில்வண்டி வைத்திருப்பது அவசியத் துக்குப் பயன்படக்கூடியது என்பதோடு அந்தஸ்தின் சின்னமாகவும் கருதப்பட்ட காலம் அது.

அப்பா வெளியூர்களில் உத்தியோகம் பார்க்கையில், சுற்றுப்புற ஊர்கள் பலவற்றுக்கும் பணிநிமித்தம் போய்வர வேண்டிய தேவை இருந்தது. போக்குவரத்து வசதிகள் ஓரளவு கூடத் தலை காட்டியிராத காலம். அதனால் சொந்தமாக வில்வண்டியும் மாடுகளும், அவற்றைப் பேண வேலைக்காரனும் கட்டாயம் இருந்தாக வேண்டிய நிலைமை.

அந்த வண்டியும் மாடுகளும் வேலைக்காரனும் கிராமத்துக்கும்

வந்து சேர்ந்தனர். எனவே, தினசரி காலையில் குளிப்பதற்கு வண்டியில் ஆற்றுக்குப் போய்வர முடிந்தது.

ஊருக்குத் தெற்கே ஒரு மைலுக்கு அப்பால் ஓடிய தாமிர வர்ணி ஆறு அந்நாள்களில் அழகாய், தூயதாய், இனிதாய் விளங்கியது. ஆற்றுக்குப் போகிற ரோடின் ஒரு புறம் வாய்க்கால் ஓடியது. இரு பக்கங்களிலும் கண்ணெட்டும் தூரமெலாம் பச்சைப்பசிய வயல்கள். ரோடின் ஓரங்களில் வரிசையாய் தென்னைமரங்கள் ஓங்கிவளர்ந்து நின்றன. மேற்கே வெகு தூரத்தில் மிடுக்காக எழுந்து நின்று நெடிய வரிசையாய் காட்சி தந்த மேற்குத் தொடர்ச்சி மலையின் பகுதி. வனப்பு மிகுந்த இயற்கைக் காட்சி.

ஆற்றில் தண்ணீர் குறைவாக ஓடினாலும், மணல்படுகையில் பாய்ந்ததால் மிக சுத்தமாகத் தெளிந்து காணப்பட்டது. மணல் வெகு அதிகமாகவே எங்கும் பரந்து விரிந்து கிடந்தது. தண்ணீர் ஓடும் இடத்தில் மணல் வர்ணமயமாக – தாமிரத் துகள்கள் படிந்து தனியொரு நிறத்தில் – அழகாக விளங்கியது. நெடுகிலும் இந்தத் தோற்றம் கொண்டிருந்ததாலேயே, பொருனை நதி தாமிரவர்ணி எனும் பெயர் பெற்றிருந்தது.

கால ஓட்டம் பெரும் மாறுதல்களை விளைவித்தது. ஆற்றின் ஆரம்ப இடத்தில், பாபநாசத்தில், அணைகட்டப்பெற்று நீர்தேக்கி வைக்கப்பட்டது. ஆற்றில் நீரோட்டம் ஒழுங்காக இல்லாமலும் குறைவாகவும் இருக்கும்; மழைக்காலத்தில் நீர்ப்பெருக்கு அதிகமாகவும், சிற்சில சமயங்களில் மிக வெள்ளமாகவும் ஓடும். மேல்மணல் வரத்து இல்லாது போய், கிடந்த மணல் பரப்பு மாறுதலுக்கு உட்பட்டு, அங்கங்கே சேறும் சகதியும் படிந்து ஆற்றுப் படுகையே மோசமாகிவிட்டது. கண்டகண்ட செடிகொடிகள் ஆற்றினுள்ளும் கரைகளிலும் மண்டி வளரலாயின. நீர்க்கருவை அல்லது வேலிக்கருவை என்று சொல்லப்படுகிற விஷமுள்ளுச் செடிகள் களையாய், பேயாய், எங்கெங்கும் வளர்ந்து பரவிவிட்டன. ஆற்றின் கரை மீது ஒரு ஊரில் காகித உற்பத்தி ஆலை தலையெடுத்து, அதன் கழிவு நீரை ஆற்றில் கலக்க விட்டது. திருநெல்வேலி நகரப்பகுதிகளின் சாக்கடை நீரும் பெரும் அளவில் ஆற்றில் வந்து கலக்கலாயிற்று. இதனால் எல்லாம் ஆற்றுப் படுகை அசிங்கப் பரப்பாக மாறிப்போயிற்று. தாமிரவர்ணி என்ற காரணப் பெயர் கூட எப்படியோ 'தாம்பரபரணி' என்று மாற்றம் பெற்றுவிட்டது.

இவை எல்லாம் பிற்காலத்தில் நிகழ்ந்தவை. எனது பிள்ளைப் பிராயத்தில் ஆறு அருமையான நீரோட்டமாகத் திகழ்ந்தது.

ராஜவல்லிபுரம் ஊருக்கு வருகிற சாலை, ஆலமரங்கள் ஓங்கி வளர்ந்து நிழல்பந்தலிட்ட அழகான சூழலாக இருந்தது. ஊரைவிட்டு கிழக்கே வெளியேறுகிற ரோடிலும் வரிசையாக ஆலமரங்கள் நின்றன. வருகிற வழிநெடுக பெரியகுளம் என்கிற குளத்தில் நீர் அலையிட்டுப் பரந்து காட்சிதரும். வெளியேறுகிற கிழக்குப் பக்கத்தில் நயினார்குளம் என்ற சிறியகுளம் உண்டு. அதிலும் ஓரளவு தண்ணீர் கிடக்கும்.

குளங்களில் தண்ணீர் பெருகி, வயல்களில் நெல்பயிர் வளர்ந்து பச்சைப்பசேல் எனக் குளுமைக் காட்சியாய் விளங்குகிற காலத்தில், ராஜவல்லிபுரம் வசீகரவனப்புடன் திகழும். ஆலமரங்களில் பழங்கள் நிறைந்து விளங்கும் மாதங்களில், அவற்றைத் தின்பதற்காகக் கூடுகிற காகங்கள், மைனாக்கள் எழுப்புகிற உவகைக் கூச்சல் சாலையை எந்நேரமும் கலகலப்பானதாக ஆக்கும். வண்டிகள், பயணிகள் நடமாட்டம் அதிகமிராது.

பெரிய பெரிய ஆலமரங்களில் விழுதுகள் மிகுந்து தொங்கும். பையன்கள் அவற்றைப் பிடித்துக் கொண்டு ஊசலிட்டுக் களிப்பர். விழுதுகளின் மிருதுவான பகுதிகளில் சிறுசிறு குச்சிகள் நறுக்கி, காலையில் பல்துலக்க உபயோகிக்கும் பழக்கம் அந்நாள்களில் இருந்தது. ‘ஆலும் வேலும் பல்லுக்குறுதி’ என்பது மூதுரை. அது கிராமங்களில் நடைமுறைப் படுத்தப்பட்டு வந்தது.

வீட்டில் புதியபகுதியின் கட்டுமானப் பணிகள் விறுவிறுப்பாக நடந்து வந்தன. சுண்ணாம்பை அரைத்துக் ‘காரை’ தயாரிப்பதற்காக, முற்றத்தில் பெரிய அம்மியும் குழவியும் கிடந்தன. பகலில் அதில் ஆள் சுண்ணாம்பு அரைத்துக் கொண்டேயிருக்கும். சுவர் கட்டுவதற்காக ‘வானம்’ தோண்டி, சில ஆள்கள் மண்ணை அள்ளி வெளியே கொட்டிய வாறு இருப்பார்கள். இவையெல்லாம் வேடிக்கை பார்ப்பதற்குரியனவாக இருந்தன.

அப்பா விசேஷமான ஒரு வேடிக்கை பண்ணி மகிழ்வது உண்டு. முன்வீட்டு (தெருஓர வீட்டின்) பெரியப்பாவின் மனைவி - ‘பெரியம்மை’ - பேராசைக்காரி. இங்கே எங்கள் வீட்டில் ஆழமாகப் பள்ளம் பறிப்பதைப் பார்த்த அவளுக்கு ஏனோ புதையல் நினைப்பு மனசில்

அரித்தது. இந்த இடத்திலே புதையல் இருக்குது; அது நமக்குக் கிடைக்கும் என்று குறிகாரன் சொல்லியிருக்கான்; பள்ளம் தோண்டையிலே பானை எதுவும் தெரிந்தால், விட்டுவிடாதீங்க. அப்படி புதையல் பானை கிடைத்தால், எங்களுக்கு பங்கு கொடுக்கணும் என்று அவள் சொன்னாள்.

கிடைத்தால் தருகிறேன் என்று அப்பா கூறினார். அண்ணன் மனைவி வரிசையாரை (மதனியை) கேலி செய்யும் சமூக உரிமை கொழுந்தனுக்கு உண்டு. அப்பாவும் அவளை பரிகசிப்பதில் ஆர்வம் கொண்டார்.

சுவரமைக்க வானம் பறிக்கும் போது, இப்ப ஒரு வேடிக்கை பண்ணலாம்; பெரிய பானை தென்பட்டது என்று சொல்லி பெரியம்மையை ஏமாற்றலாம் என்று கூறி, அவளை அழைத்து வரும்படி அண்ணனை அனுப்பினார் அப்பா.

அண்ணன் போய் சொன்ன உடனேயே அந்த அம்மாள், செய்து கொண்டிருந்த வேலையை அப்படியே போட்டுவிட்டு, 'அரக்கப் பறக்க' அவசரம் அவசரமாக வந்தாள். அவள் 'பரும்பட்ட மனுஷி.' ஒரு கால் வாதநோய் வந்து, சீராக நடக்கமுடியாத நிலை ஏற்பட்டிருந்தது. அவள் காலை இழுத்து இழுத்துப் போட்டு வேகநடை நடந்து வந்தது தமாஷாக இருந்தது.

'திருக்குறுங்குடி நொண்டி ஆனை வாறவரத்தைப் பாரேன்!' என்று அப்பா மெதுவாகக் குறிப்பிட்டார்.

அந்த அம்மாளுக்கு சொந்த ஊர் திருக்குறுங்குடி. அக்காலத்தில் அவ்வூர் கோயிலில் வளர்ந்த யானை நொண்டி நொண்டி நடக்கும் தன்மை பெற்றிருந்தது. எனவே, பெரியம்மையையும் திருக்குறுங்குடி நொண்டியானை என்று அப்பா பரிகாசமாகக் குறிப்பிடுவது வழக்கம்.

அவள் வரும்போதே 'புதையல் எங்கே? புதையலை வெளியே எடுத்தாச்சா?' என்று பதற்றமாகக் கேட்டபடி வந்தாள்.

'அந்த மூலையிலே மண்வெட்டி விழுந்த போது டங்கென்று சத்தம் கேட்டது. ஜாக்கிரதையாக மண்ணைத் தோண்டவும் ஒரு வெண்கலப்பானை தென்பட்டுது. அந்த ஆளு அதன் விளிம்பைப் புடிச்சு இழுக்கான். இழுக்க முடியலே. இன்னொருத்தனும் சேர்ந்து வேகமாக

இழுத்தாங்க. ஆனா, பாரு, உள்ளேயிருந்து யாரோ ரொம்ப பலமாக இழுக்குற மாதிரி இருந்துதாம். படக்குனு அவங்க புடியிலேயிருந்து பறிச்சுக்கிட்டு பானை உள்ளே போயிட்டுது. மறைந்தே போச்சு' என்று அப்பா சிரிக்காமல் பேசினார்.

'புதையலை காத்துக்கிட்டிருக்கிற பூதம் தான் பானையை உள்ளே இழுத்திருக்கும். அது லேசிலே விட்டுக் கொடுத்திருமா? பலி கொடுக்க வேண்டிவரும்' என்று பெரியம்மை கூறினாள். 'பானை எவ்வளவு பெரிசிருக்கும்? ரொம்பப் பெரிசா?' என்றும் கேட்டாள்.

'ஆமா. பெரிசாத்தான் தோணிச்சு. உங்க வீட்டிலே முறுக்கும் தேன்குழலும் செய்து வைக்கிற வெண்கலப் பானை இருக்குதே, அந்த அளவு இருக்கும்' என்று அப்பா சொன்னார்.

'பானை கண்ணிலே பட்டு விட்டது. நிச்சயம் ஒரு நாள் அது கிடைக்கும். என்னைக்கு அகப்பட்டாலும் சரி, என்னை கூப்பிடாம பானையை ஒழிச்சுவச்சிராதிங்க' என்று கூறிவிட்டு அவள் போனாள்.

ஆசையைப் பாரேன் என்று கூறி அப்பா சிரிக்க, வேலை செய்து கொண்டிருந்த ஆள்களும் சிரித்தார்கள்.

அடுத்து அடுத்து இப்படி மூன்று நான்கு தடவைகள் அந்த அம்மாளை வரவழைத்து ஏமாறச் செய்து மகிழ்ந்தார் அப்பா. அவளும் ஓடிஓடி வந்தாள். பிறகு அவளுக்கே புரிந்துவிட்டது, கொழுந்தப்புள்ளெ பொய் சொல்லி நம்மை ஏமாற்றிக் கேலிபண்ணுதாக என்று. அடுத்தமுறை கூப்பிட்ட போது, அவள் வரவில்லை. புதையல் இருந்தா நீங்களே எடுத்துக்கிடுங்க என்று பெரியம்மை சொல்லுதான்னு அப்பாகிட்டே சொல்லிப்போடு என்று அண்ணனை அனுப்பி விட்டாள்.

விரைவிலேயே சுவர்கள் எழுப்பி, புதிய பகுதிகள் கட்டி முடிக்கப் பட்டன. அப்பாவின் விடுமுறையும் தீர்ந்தது.

கோவில்பட்டியிலிருந்து பெருங்குளம் ஊருக்கு மாற்றப் பட்டிருந்தார் அப்பா. ஆகவே, நான் மீண்டும் கோவில்பட்டி போக வேண்டிய அவசியம் இல்லாது போயிற்று.

எனது பிள்ளைப் பருவத்தில், நான் பெருங்குளம் ஊரில் வசிக்க நேர்ந்த வருடங்களே மிக இனிய காலகட்டம் என்று எனக்கு எண்ணம் எழுவது வழக்கம்.

என்னுடைய ஆறு, ஏழாவது வயது காலத்தில் நான் அவ்வூரில் வாழ்ந்தேன். சூழ்நிலைகளும், தெரிய நேர்ந்த மனிதர்களும், கால ஓட்டத்தில் நிகழ்ந்த பலவித அனுபவங்களும், பார்வையில் பட்ட காட்சிகளும் மனசில் ஆழப்பதிந்து அழிக்க முடியாத தடங்களைப் பதித்துள்ளன. விழிப்புற்ற அறிவு அனைத்து ரக விஷயங்களையும் உள்வாங்கிக் கொண்டிருந்தது. எல்லாமே புதுமையாய், விந்தையாய், வேடிக்கைகளாய் தோன்றி, உள்ளத்து உணர்வுகளை சிலிர்க்கச் செய்த பருவம் அது.

பெருங்குளம் 'நவதிருப்பதி', என்ற சிறப்பைப் பெற்ற ஊர்களில் ஒன்று. ஸ்ரீவைகுண்டத்தில் தொடங்கி, ஆழ்வார்திருநகரியில் முடியும் நவதிருப்பதித் தலங்கள். இவ் ஒன்பது ஊர்களிலும் கோயில் கொண்டிருக்கும் பெருமாள் (விஷ்ணு) வைஷ்ணவர்களுக்கு விசேஷமான தெய்வம். ஸ்ரீவைகுண்டம் கோயிலில் எழுந்தருளியிருப்பவர் 'கள்ளர் பிரான்'. (கள்ளப்பிரான்). பெருங்குளம் கோயிலில் 'மாயக்கூத்தர்' இருக்கிறார்.

வைகுண்ட ஏகாதசிநாளில், பக்தர்கள் ஒன்பது திருக்கோயில்களுக்கும் அன்றே சென்று ஒன்பது பெருமாள்களையும் சேவித்தால், பெரும்புண்ணியம் என்று நம்பி, அவ்வாறே செயல் புரிவது வழக்கம்.

ஸ்ரீவைகுண்டத்தை அடுத்து, இரண்டு ஊர்களில் 'நவதிருப்பதி'க் கோயில்கள் இருக்கின்றன. பெருங்குளம் நான்காவது கோயிலைக் கொண்டிருக்கிறது. எல்லா ஊர்க் கோயில்களும் பெரியன தான்.

ஸ்ரீவைகுண்டத்திலிருந்து புறப்பட்டுப் பெருங்குளம் போகிற சாலையில், வழி நெடுக அநேக குளங்கள் உண்டு. பெருங்குளம் ஊரின் குளம் மிகப் பெரியது. அதனாலேயே அந்த ஊருக்கு அப் பெயர் வாய்த்திருந்தது.

பலமைல் தொலைவான அந்த ரோடில், ஒரு திருப்பத்தில் 'செவளை' (சிவகளை) என்ற ஊர் இடம் பெற்றுள்ளது. அங்கு

பிள்ளைமாரில் ஒரு பிரிவினர் வசித்தனர். அவர்கள் 'செவளைப் பிள்ளைமார்' எனப் பெயர்பெற்றிருந்தனர். அவர்கள் முடித்தானேந்தல் (முடிவைத்தானேந்தல்) என்ற ஊரில் வசித்த பிள்ளைமார் இனத்தின் கிளையினர்.நன்கு வளர்ந்து, உயரமாக, திடமாக, ஆரோக்கியமான உடல்கட்டுடன் இருப்பார்கள்.

அந்நாள்களில் ராணுவத்துக்கும், போலீஸ் இலாக்காவும் முடித்தானேந்தல் அதிக எண்ணிக்கையில் ஆள்களை உதவிக் கொண்டிருந்தது. அந்த ஊர்க்காரர்கள் நன்கு சாப்பிடக் கூடியவர்கள். 'செவளையான் சாப்பிடுகிற மாதிரிச் சாப்பிடுகிறாயே!' என்று மிகுதீனி உண்பவர்களை, பெரிய பெரிய உருண்டையாக எடுத்துச் சோறு சாப்பிடுபவர்களை, பரிகசிப்பது அந்தப் பக்கத்தின் வழக்கமாக இருந்தது.

செவளையான் ஒருவன் எங்கள் வீட்டில் வண்டிக்காரனாக வேலை பார்த்தான். தினம் அவன் வீட்டுத் திண்ணையில் அமர்ந்து இலை போட்டுச் சாதம் சாப்பிடுவதை பார்க்கும்போது எனக்கும் என் சகோதரர்களுக்கும் அதிசயமாகத் தோன்றும்.

அந்த வயசில் எல்லாமே அதிசயங்களாகப் பார்வையில் பட்டு மனசில் பதிந்தன. பெரிய குளத்திலிருந்து, மதகுகள் வழியாக நீர் சிறுசிறு அருவிகளாக விழுந்து, பள்ளத்தில் ஓடிய வாய்க்காலை அடைந்து ஓடும். அந்த அருவிகளை எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் அலுக்காமல் பார்த்து நிற்கலாம் என்றிருக்கும்.

குளத்தின் பரப்பில் நீர் அசைந்தாடும் சிற்றலை வீச்சும், கரை ஓர அரசமரங்களின் இலைகளும் அவற்றில் காலம் செய்கிற மாறுதல்களும் அதிசயங்கள் தான். பள்ளிக்கூடத்தின் காம்பவுண்டுச் சுவர் ஓரத்தில், வாசலின் இருபுறமும் ஓங்கி வளர்ந்து நின்ற மரமல்லிகை மரங்கள் ஓயாது வெண்ணிற மலர்களைச் சிந்தும். நீண்ட காம்புடைய அம்மலர்கள் தரையில் பரந்து கிடப்பது ஆச்சரியம். அம்மலர்களை எடுத்துச் சேர்ப்பது ஒரு விளையாட்டு.

பள்ளிக்கூடத்தின் அருகில் உள்ள தென்னந்தோப்பில் நீர்பாயும் ஓடையில் பசிய நிறக் கொடிகள் படர்ந்திருந்தன. அவற்றின் இலைகள் விநோத வடிவம் கொண்டவை. ஊரில் தென்னை மரங்கள் அதிகம் வளர்ந்து நின்று குளுமைக் காட்சிகளாக விளங்கின.

ஒவ்வொரு நாளும், குறிப்பிட்ட நேரத்தில் ஒரு பரதேசி, கழுத்தில் உத்திராட்சம் கட்டி, காவி வேட்டி அணிந்து, நெற்றி நிறையத் திருநீறு

பூசிக்கொண்டு, உரத்தகுரலில் 'வேயிரு தோளிபங்கன், விடமுண்ட கண்டன்... ... ஞாயிறு, திங்கள், செவ்வாய் - அவை நல்ல நல்ல; புதனொடு வியாழம் வெள்ளி சனியும் அவை நல்லநல்ல' என்று, அவருக்கென அமைத்துக் கொண்ட ராகத்தில் பாடியவாறு, பள்ளிக்கூடம் முன் நடந்து போவார். அவரும் அதிசயமாகத் தான் தென்பட்டார்.

எல்லோருக்குமே உண்மையான அதிசயம் அந்த ஊர் சிவன் கோயிலில் காணப்பட்டது. கோயில் பிரகாரத்தில், மதிலை ஒட்டி, சில மரங்கள் நின்றன. பிரகாரத்தை விட்டு விலகி அமைந்திருந்த தோட்டம் அது. மரங்களில் ஒரு மாமரம் அனைவரது கவத்தையும் கவர்ந்தது; பேச்சுக்குப் பொருளாக இருந்தது.

அனைத்து மாமரங்களையும் போலவே தோற்றம் தந்த அந்த மரம் விசேஷமான ஒரு தன்மையைப் பெற்றிருந்தது. அதில் காய்த்த மாங்காய்கள் இதர மரங்களின் காய்களை விடப் பெரிதாக இருந்தன. சாதாரண 'இளநீர்' காய் அளவு பெரியன. காய்களின் மேல் முழுவதும், குஷ்டரோகம் பெற்றவனின் உடம்பில் காணப்படுவது போல முண்டுகளும் முடிச்சுகளும் துருத்தி நிற்கும். அந்த மரத்தின் பழங்கள் பளீர்நிறம் பெற்ற சதைப் பிடிப்பு மிக்கதாய், சுவை மிக உடையதாய் இருந்தன. அம்மரத்தை 'குறைநோக்காட்டு மாமரம்' 'குட்டநோக்காட்டு மாம்பழம் காய்க்கிற மரம்' என்றே ஜனங்கள் குறிப்பிட்டு வந்தார்கள்.

அந்த மாமரத்தில் காய்கள் அப்படிக் காய்ப்பதற்கு ஊர் மக்கள் ஒரு கதை சொல்வது வழக்கம். ஒரு சமயம் எங்கிருந்தோ ஒரு பஞ்சப்பரதேசி அந்த ஊருக்கு வந்து சேர்ந்தான். சிவன் கோயில் திண்ணையில் படுத்துத் தூங்கலாம் என்று வந்தவன் பார்வையில், கோயில் தோட்டத்தில் நின்ற மாமரமும், கிளை அடர்ந்து தொங்கிய காய்களும் பட்டன. ஒவ்வொரு காயும் பெரிய சொம்பு தண்டிக்கு இருக்குதே என்று அவன் அதிசயித்தான். ஏயப்பா, எவ்வளவு பெரிய காயி! அதோ ஒன்றிரண்டு பழுத்துக் கிடக்குதே! அதிலே ஒரு பழம் கிடைத்தால் போதும். தின்றால் வயிறு கம்முனு ரொம்பி விடும் என்று முனகினான். ஏக்கப் பெருமூச்சுவிட்டபடி படுத்தான்.

மறுநாள் காலையில் அந்தப் பரதேசி எழுந்து, மாமரத்தையும் அதன் காய்களையும் பழங்களையும் பார்த்துப் பெருமூச்சுவிட்டவாறே நடந்தான். அவன் கண் கொள்ளிக்கண்! அதன் பார்வை வெப்பம் அந்த

மரத்தை பாதித்தது. காய்கள் மீதும் பழங்களின் மீதும் அம்மை கண்டது மாதிரி கொப்புளம் கொப்புளமாக துருத்தல்கள் கிளம்பின. பார்த்தவர் களுக்கு அவை குஷ்டரோகப் புண்களை நினைவுபடுத்தின.

அதுமுதல் அந்த மரத்தில் காய்கள் அந்தவிதமாகவே காய்த்தன. பரதேசியின் கண்ணேறு பட்டதின் கோளாறு தான் அந்த மாற்றம் என்று ஜனங்கள் நம்பினார்கள். அந்த மரத்துக்கு 'குட்டநோக்காட்டு மாமரம்' என்ற பெயரும் நிலைத்துவிட்டது.

பெருங்குளம் மதகுப் பாலத்தின் மீது நடந்து போனால், அடுத்த பக்கம் பண்ணையவிளை என்ற ஊர் இருந்தது. அங்கு பனைமரங்கள் அதிகம். பனையேறிகளான நாடார்கள் மிகுதியாக வசித்தார்கள். அவர் களில் அநேக குடும்பத்தினர் கிறிஸ்தவர்கள். அவர்களுக்காக அவ்வூரில் ஒரு 'சர்ச்' (மாதா கோயில்) கட்டப்பட்டிருந்தது.

ஒருசமயம் வண்டிக்காரனுடன் என் அண்ணனும் நானும் பண்ணையவிளை போனோம். சர்ச்சை பார்த்தோம். அதன் பெரிய பெரிய சன்னல்களும், அவற்றில் பொருத்தப்பட்டிருந்த வகை வகையான வர்ணக் கண்ணாடிகளும் ஆச்சர்யம் தந்தன.

வாய்க்காலுக்கு தினம் இரண்டு பெரிய வாத்துகள் வருவதுண்டு. அவற்றை 'ஊசி வாத்துகள்' என்று பையன்கள் குறிப்பிடுவர். அதன் மூக்கு நீண்டிருந்ததால், அந்த இன வாத்துக்கு அந்தப் பெயரை அவர்கள் சூட்டியிருந்தார்கள். அவற்றை வேடிக்கை பார்க்கும் பையன்கள் அருகில் சென்றால், அவை கூச்சலிட்டபடி மூக்கினால் குத்த வருவதுபோல், இறக்கைகளை படபடத்துக் கொண்டு முன்னே ஓடி வரும். பையன்கள் பயந்தடித்துப் பின்வாங்கி ஓடுவார்கள். எல்லாம் வேடிக்கையாக இருக்கும்.

வேடிக்கையாகத் தோன்றினாலும் வேதனை தரக்கூடிய விஷயமாக இருந்தது ஒரு பள்ளிக்கூடம். நானும் அண்ணனும் படித்த பள்ளிக் கூடம் பெரிது. அது அக்கிரகாரத்தின் ஒரு ஓரத்தில் இருந்தது. இந்தச் சிறு பள்ளிக்கூடம் வேறொரு மூலையில் அமைந்திருந்தது. பழங்காலத்து அண்ணாவி பள்ளிக்கூடம்.

ஒருநாள் ஒரு பையன் காலில் விலங்குமாட்டி, அதனோடு இணைக்கப்பட்டிருந்த ஒரு மரக்கட்டையை கைகளில் பற்றியபடி சிரமத்தோடு நடந்து பள்ளிக்கூடத்துக்கு வந்து கொண்டிருந்தான்.

அவன் ஒழுங்காக பள்ளிக்கு வரமாட்டான்; சேட்டைகள் பண்ணித் திரிந்தான். அதற்கு தண்டனையாக இப்படி செய்யப் பட்டிருக்கிறது. இதுக்குப் பெயர் கோதண்டம் என்று விஷயம் தெரிந்த ஒரு பெரியவர் விளக்கினார்.

பள்ளிக்கூடத்துக்கு 'டிமிக்கி கொடுக்கிற' பையன்களுக்கும், ஒழுங்காகப் படிக்காமல் 'இடக்குப் பண்ணுகிற'வர்களுக்கும் இதை விடக் கடுமையான தண்டனைகளை வாத்தியார் கொடுப்பது வழக்கம் என்றும் அவர் சொன்னார். அவற்றில் ஒன்று 'எமகண்டம்' என்றும் கூறிய அவர், என்னையும் அண்ணனையும் அந்தப் பள்ளியின் அருகே அழைத்துச் சென்றார். உள்ளே பார்க்கும்படி செய்தார்.

சின்னக் கட்டிடம் தான். அதன் உத்திரத்தில், ஒரு பையனை கட்டித் தொங்கப் போட்டிருந்தார்கள். அவன் கைகளும் கால்களும் தனித்தனிக் கயிற்றால் உத்திரத்தோடு பிணைக்கப்பட்டிருந்தன. வளைந்து தொங்கிய அவன் கீழே விழுந்தால் அவனை வரவேற்பதற்கு தரைமீது மணல் பரப்பி அதில் எழுத்தாணிகளும் முள்ளுகளும் நட்டுவைக்கப் பட்டிருந்தன. அந்தச் சிறுவன் வலியினாலும் பயத்தாலும் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தான்.

அண்ணாவி அமைதியாக உட்கார்ந்து பாடம் நடத்திக் கொண் டிருந்தார். 'எமகண்டம்' அனுபவித்துக் கொண்டிருந்த பையனைப் பார்க்கையில் எனக்கும் அழுகை வந்தது.

பெரியவர் எங்களை அங்கிருந்து நகர்த்தி, கோயில் பக்கம் அழைத்துச் சென்றார். இந்தப் பள்ளிக் கூடத்தில் 'ஏரான்' முறை அமுலி ல் இருந்தது என்று சொல்லி, அவர் அதை விளக்கினார்.

பையன்கள் நாள்தோறும் ஒழுங்காகவும் சீக்கிரமாகவும் பள்ளிக்கூடத்துக்கு வரவேண்டும் என்ற கட்டுப்பாடு அங்கே இருந்தது. சீக்கிரமாக, பள்ளிக்கூடம் திறப்பதற்கு முன்னரே, முதலாவதாக வருகிற பையன் 'ஏரான்' எனக்குறிக்கப்படுவான். அவனை அடுத்து ஒவ்வொருவ ராக வந்து சேர்கிற பையன்கள் எண்வரிசைப்படி குறிக்கப்படுவர். பள்ளிக்கூடம் திறந்ததும், அண்ணாவி வருகைப்பட்டியலை வாசிப்பார். அவர் கையில் பிரம்பு பிடித்திருப்பார்.

'ஏரான்' ஆன பையன் கையில் பிரம்பால் லேசாகத் தடவுவார் அவர். இரண்டாவது வந்தவனுக்கு மெதுவாக ஒரு அடி தரப்படும். இப்படி வரிசைப்படி, ஒவ்வொருவனுக்கும் அடி கொடுக்கப்படுகிற போது,

பிரம்படியின் வலிமை அதிகரித்தவாறு இருக்கும். கடைசியாக வந்த பையனுக்கு பலமான அடிவிழும்.

பாடம் சரியாகப் படிக்காதிருந்தாலும், நன்றாகப் பாடத்தை ஒப்புவிக்கத் தவறினாலும் 'பழியாக அடிகொடுப்பார்' அண்ணாவி. பள்ளிக்கூடம் என்றாலே, வாத்தியாரின் நினைப்பு வந்தாலே, பையன்கள் அஞ்சி நடுங்குவது இயல்பாக இருந்தது. இப்படிக் கல்வி கற்பிக்கும் முறை அந்தக் காலத்தில் பரவலாக நாடு நெடுகிலும் இருந்தது. பழங்காலக் கல்விப் பயிற்சிமுறை பற்றியும் ஆசிரியர்கள் குறித்தும் விவரித்துக் கட்டுரைகள் எழுதியுள்ள எழுத்தாளர் வ.ரா. (வ.ராமஸ்வாமி) 'ஏரான்' முறை, கோதண்டம் எமகண்டம் தண்டனை பற்றி எல்லாம் வர்ணித்திருக்கிறார்.

பையன்களை பள்ளியில் சேர்க்கிற பெற்றோர்களில் அநேகர், அடித்துப் பாடம் சொல்லிக் கொடுக்கிற வாத்தியார் தான் நன்றாகக் கற்றுக் கொடுப்பார் என்று எண்ணம் வளர்த்தார்கள். பையன் ஒழுங்காக பள்ளிக்கூடத்துக்கு வராது போனால், அவன் சரிவரப் படிக்காதிருந்தால், நன்றாக அடிகொடுக்கும்படி அவர்கள் பரிந்துரைக்கவும் தயங்கியதில்லை.

பெருங்குளத்தில் நாங்கள் முதலில் குடியிருந்த வீடு, பெரியரோடை விட்டு விலகிய ஒரு பகுதியில், ஊருக்குள் ஒதுக்கமான ஒரு தெருவில் இருந்தது. வீடு பெரியது தான். அங்கிருந்த காலத்தில், ஒரு மழைநாளில், வீட்டுக்கு எதிரே இருந்த தோட்டத்தின் மரம் ஒன்றில் ஒரு கிளி வந்து அமர்ந்தது. மழையில் நனைந்து குளிரில் நடுங்கிய அந்தக் கிளி திடீரென்று மரத்திலிருந்து கீழே விழுந்தது. அதை எடுத்து வரும்படி அப்பா வேலைக்காரனை அனுப்பினார். அவன் எடுத்து வந்து தந்தான்.

கிளி நோய்வாய்ப்பட்டிருந்தது. அதை வளர்க்கலாம் என்று அண்ணன் சொன்னான். அப்பாவும் இசைவு தெரிவித்தார். அதற்காக ஒரு கூண்டு வாங்கப்பட்டது. கிளியை கூண்டில் விட்டு, பால் பழம் கொடுக்கப்பட்டது. சிறிது சிறிதாக அது தேறி வருவதாகத் தோன்றியது. கூண்டினுள் தத்தித்தத்தி நடந்தது. அவ்வப்போது குரல் கொடுக்கவும் செய்தது. ஆயினும் அக்கிளி அதிகநாள் உயிரோடிருக்கவில்லை. ஒருநாள் அது செத்துக்கிடந்தது.

அதை எடுத்து, குப்பைக் கிடங்கில் குழிதோண்டிப் புதைக்கும்படி அப்பா ஏவினார். வேலையாள் அவ்விதமே செய்தான். கிளிக்கென

வாங்கப்பெற்ற கூடு வெறுமையாகக் கிடந்தது, வெகுநாள் வரை. வேறு கிளியையோ அல்லது மைனாவையோ பிடித்து வளர்க்க வேண்டும் என்ற நினைப்பு யாருக்கும் இருக்கவில்லை. எங்கள் வீட்டில் நாய் கூட வளர்க்கப்பட்டதில்லை.

அந்த வீட்டில் வசித்த நாள்களில், ஒரு சமயம் தனித்தன்மையோடு அமைக்கப்பட்ட பெரிய வட்ட வடிவக் கூடைகளில் அடிப்பகுதி பிரப்பங்கூடையாகவும் மேல்பகுதி பருமனானகயிற்று வலை பின்னப் பட்டதாகவும் இருந்தன. நிறைய நிறைய வாத்துக்கள் அடைக்கப்பட்டு, வண்டியில் கொண்டுவந்து இறக்கப்பட்டன. நாலைந்து கூடைகள் இருக்கலாம். பல கூடைகளில் முட்டைகளும், மாம்பழங்களும் வந்திறங்கின. இவ்வளவு வாத்துக்களும் முட்டைகளும் பழங்களும் எதற்காக என்று ஆச்சர்யப்பட்ட எங்களுக்கு அப்பா விளக்கினார்.

இன்ஸ்பெக்ஷனுக்காக சூப்ரண்டு துரை வாறார். அவர் சாராயக் கடைகள் கள்ளுக்கடைகள், அவற்றின் கணக்கு வழக்குகளை எல்லாம் சோதிப்பார். அவரை திருப்திப்படுத்துவதற்காக, அவர் சோதனை முடித்துப் போகிற போது, இவற்றை எல்லாம் அவருக்கு கொடுத்து அனுப்புவோம். சாராயக்கடை லைசன்ஸ்தார்களும், கள்ளுக்கடை குத்தகைக்காரர்களும் இவற்றை வாங்கி அளிக்கிறார்கள் என்று அப்பாசொன்னார்.

ஒரு ஆளுக்கு இத்தனை கூடைகள் நிறைய வாத்துக்களும் முட்டைகளும் பழங்களும் எதற்காக? இவ்வளவையுமா அவர் சாப்பிடமுடியும்? இப்படி சந்தேகம் எழுந்தது எனக்கு.

ஒருத்தரே சாப்பிடமுடியுமா? அவரும் வேண்டியவர்களுக்கு பரிசாகக் கொடுப்பார். விருந்துகள் வைத்துப் பல துரைமார்களை அழைத்து சாப்பாடு போடுவார். மீதியிருந்தால் ஆள்மூலம் விற்கவும் செய்யலாம். அவர் என்ன செய்வார் என்பது முக்கியமில்லை. சூப்ரண்டு துரை சந்தோஷப்படும்படி அவருக்கு தாராளமாகக் கொடுத்து அனுப்பணும். இது தான் வழக்கம் என்று அப்பா தெரிவித்தார்.

அப்பா எங்களிடம் எப்பவும் பிரியமாகவே இருந்தார். இரவு நேரங்களில், சாப்பாட்டு வேளையில், உற்சாகமாகக் கதைகள் சொன்னார். கால்திருடன், அரைத் திருடன், முக்கால் திருடன் கதை, ஜில் சதாரம் கதை, அல்லி அர்ஜுனன், பவளக்கொடிகதை என்று பலவகையான கதைகளும் சொல்வார். உத்தியோக அனுபவத்தில், அவர்

சந்திக்க நேர்ந்த குற்றவாளிகளின் சாகசங்கள், அவர்களை சாமர்த்திய மாக மடக்கிப் பிடித்த சாதனைகள் பற்றி எல்லாம் சுவாரசியமாகச் சொல்வார்.

ஒரு இரவில், வீட்டுத் திண்ணையை ஒட்டிய தரையில் ஈசிச்சேரில் அப்பா சாய்ந்திருந்து பேசிக் கொண்டிருந்தார். அரிக்கன்லாந்தர் மங்கிய வெளிச்சம் தந்து கொண்டிருந்தது. அண்ணன், நான், தம்பி மூவரும் திண்ணையின் பட்டியக் கல்லில் உட்கார்ந்து கதை கேட்டுக் கொண்டிருந்தோம். வண்டிக்காரனும், வேறொரு சேவகனும் வாசலில் நின்றார்கள்.

அப்போது கன்னங்கரேலென்று, தடியாக ஒரு பிராணி தோட்டத்துப்பக்கமிருந்து ஓடிவந்தது. வீட்டை ஒட்டிய தோட்டத்தில் அவரைக்கொடி, தூதுவளை, கீரை முதலியன பயிரிடப்பட்டிருந்தன. ஒரு ஓரத்தில் குப்பைக் கிடங்கு. அங்கிருந்துதான் அந்த ஐந்து வந்திருக்க வேண்டும். ஈசிச்சேரை நோக்கி அது முன்னேறி வந்தது.

வண்டிக்காரன் அதை கவனித்து விட்டான். 'ஏ நட்டு வாக்காலி யில்லா!' என்று கத்தினான். சேவகன் தன் கையிலிருந்த தடியால் அதன்மீது ஒரு போடுபோட்டான். அது நசுங்கி அசிங்கத் திரவம் வடித்தது. எத்தாத் தண்டி நட்டு வாக்காலி! இது கடித்தா ஆள் பிழைக்க முடியாது என்று சொன்னான்.

நல்லகாலம்! வண்டிக்காரன் அதை பார்த்தான் என்ற மகிழ்ச்சி எல்லோருக்கும். அது அப்புறப்படுத்தப்பட்டு, அந்த இடம் தண்ணீர் கொண்டு சுத்தம் செய்யப் பெற்றது.

மறுநாள் விடிந்ததும் முதல் வேலையாக, குப்பைக்கிடங்கில் சேர்ந்திருந்த குப்பை முழுவதும் மொட்டை வண்டிகளில் அப்புறப் படுத்தப் பட்டன. தோட்டமும் செத்தை குப்பை இல்லாதவாறு பெருக்கி சுத்தமாக்கப்பட்டது.

இந்த விதமாகப் புதியபுதிய விஷயங்களை அறிந்துகொள்ளக் காலம் உதவிக் கொண்டிருந்தது.

ஒருநாள் வேடிக்கை காட்ட ஒரு ஆள் வந்து சேர்ந்தான். பெரிய வீடுகள் தோறும் சென்று ஜாலவித்தைகள் செய்துகாட்டி, காசு வாங்கிப் பிழைக்கும் வித்தைக்காரன். அவன் பின்னாலேயே தெருப்பிள்ளைகள் கூட்டமாக வந்தன.

அவன் சாதாரணத் தோற்றமே கொண்டிருந்தான். பழைய கோட்டு அணிந்திருந்தான். முதுகில் ஒரு பெட்டி துணிப்பட்டையால் அது உடம்போடு இணைக்கப்பட்டிருந்தது. அப்பாவை கும்பிட்டு, ஒரு நோட்டை காட்டினான். நான் இப்படி பெரியமனிதர்கள் முன்னிலையில் ஜாலவித்தை காட்டிப் பிழைக்கிறவன். என் வித்தைகளை பார்த்து மகிழ்ந்த பலரும் என்னை பாராட்டி இந்த நோட்டில் எழுதி யிருக்கிறார்கள். உங்கள் முன்பும் வித்தைகாட்ட அனுமதிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டான்.

அப்பா அனுமதிக்கவும் அவன் பலவித வித்தைகள் செய்து காட்டினான். வாயிலிருந்து ரிப்பன் போல், வர்ணம் வர்ணமான தாளை வெளியே இழுத்துக் கொண்டே இருந்தான். முடிவற்று அது வந்தவாறு இருந்தது. பிறகு அவனாக அதை நிறுத்தினான். கையிலிருந்த பொருளை காணாமல் போகச் செய்தான். திரும்பவும் அதை வரவழைத்தான். பெட்டிக்குள் பெட்டிக்குள் பெட்டி என்று பல பெட்டிகளை எடுத்துக் காட்டினான். முடிவில் வந்தது ஒரு குட்டிப் பெட்டி அதைத் திறந்ததும் அதுக்குள் ஒரு மோதிரம் இருந்தது. இவ்விதம் பல தந்திர வேலைகள் செய்து காட்டினான். மாயமந்திரம் என்றான்.

அப்பா அவனுக்கு ஐந்து ரூபாய் கொடுத்து அனுப்பினார். இது 'கண்கட்டிவித்தை' - மேஜிக் என்று சொன்னார். அதை எல்லாம் அவன் எப்படிச் செய்தான் என்பது புரிந்து கொள்ளமுடியாத அதிசயமாகத் தான் இருந்தது எனக்கு.

பெருங்குளம் ஊருக்கு நாடகக் குழு ஒன்று வந்தது. எவராவது ஒருவர் 'நாடகக் கான்ட்ராக்டர்' என்று சொல்லித் திட்டமிடுவார். இது போன்ற 'ஸ்பெஷல் நாடகம்'களில் நடிப்பதற்கென்றே நடிகர்களும் நடிகைகளும் இருந்தார்கள். வெவ்வேறு ஊர்களில் வசித்த அவர்களை தொடர்பு கொண்டு, ஒன்று சேர்த்து, இத்தனை நாடகங்கள் நடிக்க வேண்டும், இத்தனை நாள்கள் நாடகம் நடத்த வேண்டும், சம்பளம் இவ்வளவு என்று கான்ட்ராக்டர் ஒப்பந்தம் செய்து கொள்வார். குழுவுக்கு ஏதேனும் பெயர் இருந்தாலும் இருக்கும்; அல்லது ஒப்பந்தகாரர் பெயருடன் 'ஸ்பெஷல் டிராமா செட்' என்று சேர்த்துச் சொல்லப்படும். ஒரு ஊரில் நாடகம் வெற்றிகரமாக - அதாவது லாபகரமாக - நடந்தால், அவர் தொடர்ந்து வேறொரு ஊரில் நாடகம் நடத்த ஏற்பாடு செய்வார். நடிகர் நடிகையருக்கும் தொடர்ந்து பிழைப்பு நடக்கும்.

அப்படிப்பட்ட ஒரு குழு பெருங்குளத்தில் நாடகங்கள் நடித்துக் காட்ட வந்தது. நாடக மேடை அமைத்து, அரங்கமாகக் கொட்டகைப் பந்தல் போடப்பட்டது. நாடகம் பார்க்கிறவர்கள் திறந்தவெளியில் அமர்ந்து தான் கண்டுகளிப்பார்கள்.

நாடகம் நடத்துவதற்கு முன்னதாக, நாடகக் காண்ட்ராக்டர் ஊரின் பெரிய மனிதர்களை சந்தித்து வணங்கி, விஷயத்தை எடுத்துக் கூறி, உங்கள் ஆதரவு வேண்டும் என்று கேட்டுக் கொள்வார். அந்த ரீதியில் அவர் அப்பாவை சந்தித்து, ஆதரவு கோரினார். நீங்கள் தினசரி வந்து நாடகம் பார்க்க வேண்டும்; குடும்பத்தோடு வந்து பாருங்கள் என்று வேண்டிக்கொண்டார்.

நாடகம் ஒரு இரவு நடந்தால், அடுத்த இரவு நாடகம் கிடையாது. மூன்றாம் நாள் இரவு தான் புது நாடகம் நடத்தப்படும். இப்படி ஒரு மாத காலம் நாடகம் நடைபெற்றது.

அப்பா அண்ணனையும் என்னையும் அழைத்துச் சென்றார். வேலைக்காரன், வீட்டிலிருந்து மூன்று நாற்காலிகளை எங்களுக்காக எடுத்து வந்தான். அவனும் நாடகம் பார்த்துக் கொள்ளலாம். வள்ளி திருமணம், பவளக்கொடி, அல்லிஅர்ஜுனா, நல்ல தங்காள், சதாரம் போன்ற நாடகங்கள் நடித்துக் காட்டப்பட்டன. அத்தகைய நாடகங்களில் நடித்து அனுபவம் பெற்ற நடிகநடிகையர் நடித்தார்கள்.

அந்தக் காலத்தில் ஸ்பெஷல் நாடகங்களில் நடித்துப் பெயர் பெற்றிருந்த எஸ்.ஆர். கமலம், எஸ்.ஆர். கிருஷ்ணவேணி என்ற சகோதரிகள் 'ஸ்த்ரீ பார்ட்' கிருஷ்ணவேணி ஆண்வேடம் தாங்கி, பாட்டுப்பாடி, நடிக்கவும் செய்வாள். இனிமையாகப் பாடியும், சமய சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி சொந்தமாக வசனம் பேசியும், பார்வை யாளர்களை வசீகரிக்கக் கூடிய திறமை பெற்றிருந்தாள் அவள்.

ஒரு நாடகத்தில் அவள் இளவரசன் வேடம் தரித்திருந்தாள். ஒரு காட்சியில் ஒரு ஆள் அவளுடன் வாதாடிக் கொண்டிருந்தான். அய்யா, உமது பேரென்ன என்று அவள் கேட்டாள். அவன் சொல்லாமல் கோணங்கித்தனம் பண்ணிநின்றான். முதல் வரிசைப் பிரமுகர் ஒருவர் 'அவன் பேர் மாமா - டாப்பர் மாமா' என்று உற்சாகமாகக் குரல் கொடுத்தார். அவள் அவர் பக்கம் ஒரு பார்வை பார்த்தாள். மோகன முறுவல் பூத்தாள். ஆகா, மாமா - டாப்பர் மாமா! டாப்பரே, உம்மை நம்பின பேரெல்லாம் பாப்பரே என்று பாட்டு போல் நீட்டிமுழக்கினாள்.

இந்தக் காட்சி என் நினைவில் ஆழமாகப் பதிந்து விட்டது. நான் தினமும் நாடகம் பார்க்க வேண்டும் என்று போனேன். ஆனாலும் எந்த நாடகத்தையும் முழுமையாகப் பார்த்ததில்லை. கால்வாசி, அரைவாசி தான் பார்த்திருப்பேன். ஒவ்வொரு நாடகத்திலும் என்னை பயப்படுத்தும் - பயந்து அலறச் செய்யும் - காட்சி ஏதாவது வந்துவிடும். அல்லது கோரத் தோற்றம் உடைய நடிகன் எவனாவது வந்து கூச்சலிடுவான். அதைக் கண்டும் ஒவென்று அழத்தொடங்குவேன். அவ்வளவு 'பயந்தாங்கொள்ளி' யாக இருந்தேன். உடனே அப்பா வேலைக்காரனை கூப்பிட்டு என்னை வீட்டுக்கு இட்டுச் செல்லும்படி சொல்லிவிடுவார்.

ஒவ்வொரு நாடகத்தின் போதும் இது நடந்தது. எனது இந்தப் போக்கு வண்டிக்காரனுக்கு எரிச்சல் ஊட்டுவதாக இருந்தது. அவன் சுவாரசியமாக நாடகம் பார்த்துக் கொண்டிருந்தான். அதைக் கெடுத்தது எனது அழுகை, நாடகத்தை தொடர்ந்து பார்க்க முடியாதபடி, என்னை வீட்டுக்குக் கூட்டிப் போகும் வேலை அவனுக்குக் கிட்டியது.

என்னை கூட்டிப் போகிறபோது, ஏன் அழுகிறே? இதுலே பயப்பட என்ன இருக்கு? சும்மா நாடகம் தானே! என்பான். இனிமேல் பயப்படும்படியா எதுவும் வராது; இங்கேயே இருந்து நாடகம் பார்க்கலாமா என்று கெஞ்சுவான். நான் அழ ஆரம்பிப்பேன். எரிச்சலுடன் முனகியபடியே என்னை தூக்கிச் செல்வான். நீ எதுக்கு நாடகம் பார்க்கவாறே? வீட்டிலேயே இருந்திருக்கலாமே என்று கசப்பாகக் கூறுவான். என்னை விட்டுவிட்டு அவன் நாடகம் பார்க்க ஓடுவான்.

இவ்விதம் ஒவ்வொரு நாடகத்தின் போதும் நிகழவே, நான்கு நாடகங்களுக்குப் பிறகு, நீ இனிமேல் நாடகம் பார்க்க வரவேண்டாம்; வீட்டிலேயே படுத்துத் தூங்கு என்று அப்பா கண்டிப்பாகச் சொல்லி விட்டார். வண்டிக்காரனுக்கும் நிம்மதி ஏற்பட்டது.

சிறிது காலத்திலேயே நாங்கள் வீடுமாற்ற நேரிட்டது. சிவன்கோயில் தெருவிலிருந்த 'பட்டர் வீடு' என்கிற ஒரு பெரிய வீட்டுக்குக் குடிபுகுந்தோம்.

தெருவும் விசாலமானது. அழகிய சூழ்நிலையும் அமைதியும் பெற்றிருந்தது. பெரிய சிவன் கோயில். அதற்கு நேர் எதிரான தெரு. ஒரு வரிசையில் மட்டுமே வீடுகள் இருந்தன. எதிர் சாரியில், சப்ரிஜிஸ்ட்ரார் அலுவலகம். அதற்கு முந்திய இடம் காலி மனையாகக்

கிடந்தது. அதில் சில செடிகள் முளைத்து நின்றன. ஆள்கள் நடந்து நடந்து, நடுவில் ஒற்றையடித் தடம் பதிந்து கிடந்தது. ஆபீசுக்கு அடுத்து இரண்டு மூன்று வீடுகள். அவை அடைத்தே கிடக்கும். அப்புறம் சிவன் கோயில் தேர் நின்ற இடம்.

ஆள் நடமாட்டம் அதிகம் இல்லாத தெரு மாலை நேரங்களிலும் முன்னிரவிலும், வீட்டுத் திண்ணையை ஒட்டி, தெருவிலேயே கட்டில் களைப் போட்டு நாங்கள் பேசிக்கொண்டிருப்போம். கோடை நாள்களில் அங்கேயே படுத்து உறங்கியதும் உண்டு.

அவ்விதம் உறங்கிக் கொண்டிருந்த ஒரு இரவில், நேரம் என்ன இருக்கும் என்று தெரியாது. யாரோ திடும்திடுமென்று தெரு வழியே ஓடியது தெரிந்தது. தீ, தீ என்று கூப்பாடு போட்டவாறு பின்னால் ஒருவர் ஓடினார். இந்தச் சத்தத்தினால் நான் விழித்து விட்டேன். பக்கத்து வீட்டில் ஒரே வெளிச்சம். நான் படுக்கையை எடுத்துக் கொண்டு, வீட்டுக்குள் போகலானேன்.

தெருவில் கூட்டம் கூடியது. பக்கத்து வீடு - ஓலைக் குடிசைதான் தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தது. தீ - தீ என்று கூச்சல் கும்பலை கூட்டியது. பலரும் தீயை அணைப்பதில் மும்முரமாக ஈடுபட்டனர். நாங்கள் எங்கள் வீட்டில் நின்றபடி வேடிக்கை பார்த்தோம். அப்பா தீ பற்றிய வீட்டின் பக்கம் சென்றிருந்தார்.

அந்த வீட்டில், நடுத்தர வயதுடைய ஒரு பெண் வசித்தாள். அவளுடைய 'நடத்தை ஒருமாதிரி' என்று சொன்னார்கள். அவளுக்குப் பிடிக்காத எவனோ ஒருவன், ஏதோ தகராறு காரணமாக, அவள் வீட்டுக்கு தீ வைத்து விட்டான் என்று சொல்லப்பட்டது.

நீண்ட போராட்டத்துக்குப் பிறகு தீ அணைக்கப்பட்டுவிட்டது. ஆயினும் மிகுந்த சேதம் தான். விடிந்த பின்னர் வெளிச்சத்தில், கரிக்கட்டையாகக் காட்சி அளித்த வீட்டின் பகுதிகளும், வீட்டினுள் எரிந்து கருகிக் கிடந்த சாமான்களும் அந்த அம்மாளுக்கு நேர்ந்த இழப்பை எடுத்துக்காட்டின.

அவளும் அவளுக்கு வேண்டிய சில பேரும் அப்பாவிடம் முறையிட்டனர். அப்பாவும் யார் யாரிடமெல்லாமோ விசாரணை நடத்தினார். முடிவு என்ன ஆயிற்று என்பது எனக்குத் தெரியாது.

அக்காலத்தில் ஜனங்கள் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு (அரசு

அதிகாரிகளுக்கு) பயம் கலந்த மரியாதை தந்து கொண்டிருந்தார்கள். அப்பா கலால் மற்றும் சுங்க இலாக்கா அதிகாரி தான். ஆனாலும், அவர் பணிபுரிந்த ஊர்களில் எல்லாம், அவரை 'இன்ஸ்பெக்டர் பிள்ளை' என்றே மரியாதை காட்டி, அஞ்சினார்கள். குற்றம்குறைகளை தீர்க்கும்படி முறையிட்டார்கள். போலீஸ் இன்ஸ்பெக்டருக்குக் காட்டு கிற பயத்தையும் பணிவையும் மக்கள் அப்பாவுக்கும் அளித்தார்கள்.

அப்பா நல்ல உயரமாய், எடுப்பான தோற்றம் கொண்ட உருவின ராய் விளங்கினார். முறுக்கிவிட்ட மீசை அவருக்குத் தனி மிடுக்கு தந்தது. அத்துடன் 'இன்ஸ்பெக்டர் பிள்ளை' என்ற கவுரவிப்பும் அவருக்கு பெருமை சேர்த்தது. அவரும் குற்றவாளிகளை விசாரிக்கவும், அடி உதைகள் கொடுத்து ஆக்கினைகள் செய்யவும், தண்டனைகள் விதிக்கவும் தயங்கியதில்லை. அவரது அதிகார தோரணையும், துணிச்சலான செயல்முறைகளும் அவருக்கு வெற்றிகள் பெற்றுத் தந்தன. குற்றம் செய்தவர்கள் உண்மையை ஒப்புக்கொண்டு, எதிர்ப்பு காட்டாது அவரது தீர்ப்புகளை ஏற்றுவந்தனர்.

ராஜவல்லிபுரத்தில் தங்கியிருந்த நாள்களில் ஒருநாள், நடுத்தெருவில் ஒரு தோட்டத்தில் இருந்த வைக்கோற் படப்பில் எவனோ தீ வைத்து விட்டான். வீட்டக்காரர் அப்பாவிடம் முறையிட்டார். அப்பா ஊர் மறவர்களை வரவழைத்தார். உங்க ஆள்களில் ஒருவன் தான் இதை செய்திருக்க வேண்டும். மரியாதையாக அவனை கொண்டு வந்து நிறுத்துங்கள்; இல்லையென்றால் மறக்குடிக் குடிசைகள் எல்லாம் தீப்பற்றி எரியும் என்று கண்டிப்பாகச் சொன்னார். அவர் சொன்னபடியே செய்து தீர்ப்பார் என்று உணர்ந்த மறவர்கள் சிறிது நேரத்திலேயே உண்மையான குற்றவாளியை பிடித்திழுத்து வந்து அப்பாமுன் நிறுத்தினார்கள். அவனுக்கு சரியானபடி உதை கொடுக்கப் பட்டது. அவன் அலறி அடித்து அப்பாவின் காலில் விழுந்து கும்பிட்டு, மன்னிக்கும்படி கெஞ்சினான். வைக்கோல் படப்பின் கிரயத்தை அவன் கொடுத்தாக வேண்டும் என்று அப்பா உத்திரவிட்டார்.

பகை உணர்வினால், புத்திகெட்டுப் போய் இப்படிச்செய்து விட்டான்; அவனால் இவ்வளவு தெண்டம் கொடுக்க இயலாது; ரொம்பவும் கஷ்டப்படுகிறவன் என்று தேவமார் அவனுக்காகப் பரிந்து பேசினார்கள். அவனும் அழுது கெஞ்சினான். படப்பை இழந்தவரும், போகட்டும் விட்டு விடுங்கள்;அவன் கொடுக்கிற தொகையை கொடுக்கட்டும் என்று மனமிரங்கினார். அப்பாவும் அதற்கு இசைவு

தெரிவித்தார். மறவர்கள் ஒரு தொகையைக் கட்டிவிட்டு அவனை அழைத்துப் போனார்கள்.

மற்றொரு சமயம் ராஜவல்லிபுரத்தில், ஒரு வீட்டில் - பிள்ளைமார் வீட்டில் தான் - திருட்டு நடந்து விட்டது. ராத்திரி எவனோ வீட்டில் புகுந்து துணிமணிகளையும் பணம் வைத்திருந்த சிறு மரப்பெட்டியையும் ('கைப்பெட்டி' என்று குறிப்பிடுவார்கள்) களவாடிச் சென்றுவிட்டான். அதிகாலையில் வீட்டுக்காரரும் அவர் மனைவியும் அப்பாவை தேடிவந்து முறையிட்டு, அழுது புலம்பினார்கள்.

அப்போதும் அப்பா மறக்குடிப் பெரியவர்களை வரவழைத்து, விஷயத்தை சொல்லி, உத்திரவிட்டார். உங்களுக்குத் தெரியாமல் இதெல்லாம் நடக்காது. என்ன செய்வீர்களோ எனக்குத் தெரியாது, திருடு போன பொருள்கள் எல்லாம் வந்து சேரணும்; இல்லாவிட்டால் என்ன நடக்கும் என்று என்னால் சொல்லமுடியாது என்று அப்பா கண்டிப்புக்குரலில் பேசினார்.

தேவமார் ஆள்கள் தலைகுனிந்தபடி போனார்கள். பத்து மணி சுமாருக்கு ஒரு ஆள் வந்தான். எசமான், மரப்பெட்டி ஒன்று வாய்க்கால் தண்ணீரில் ஆழமாக அமுக்கிவைக்கப்பட்டிருக்கு; அது மேலே பாறாங்கல்லு ஒண்ணு வைக்கப்பட்டிருக்குது என்று தெரிவித்தான்.

திருட்டு கொடுத்த வீட்டுக்காரரும் வந்தார். காணாமல் போன துணிகள் எல்லாம், கீழத்தெரு தோட்டத்திலே பாழ்ங்கிணறு பக்கத்திலே கிடந்ததாம். ஒரு ஆள் எடுத்துக்கொண்டு வந்து கொடுத்தான் என்று சொன்னார்.

அவரையும் கூட்டிக்கொண்டு, மற்றும் சிலபேர்களுடன் அப்பா வாய்க்கால் பக்கம் போனார். பையன்களும் வேடிக்கை பார்க்க உடன் சென்றார்கள்.

வாய்க்கால் சிறியது. வயல்களுக்கு தண்ணீர் பாய்வதற்காக அமைக்கப்பட்டது. பெரியகுளத்திலிருந்து தண்ணீர் அதன் வழியே ஓடிக்கொண்டிருக்கும். எப்பவாவது ஒன்றிருவர் அதில்குளிப்பார்கள். பொதுவாக, வாய்க்கால் வெறிச்சிட்டுக் கிடக்கும். அதில் பெண்கள் குளிக்கக் கூடிய இடத்தில், ஒரு பள்ளத்தில் மரப்பெட்டி அமுக்கி, பாறாங்கல்லைத் தாங்கியபடி, வைக்கப்பட்டிருந்தது.

ஒருவர் நீரில் இறங்கி பெட்டியை எடுத்து வந்து தரைமீது வைத்தார்.

சொந்தக்காரர் பெட்டியை திறந்து பார்த்தார். எல்லாப் பொருள்களும் வைத்தது வைத்தபடியே இருப்பதாகக் கூறினார். மகிழ்ச்சிப் பெருக்கோடு கையெடுத்து அப்பாவை கும்பிட்டார். உங்களாலே தான், நான் இழந்த பொருள் எல்லாம் திரும்பக் கிடைத்திருக்கு. நீங்க நல்லாயிருக்கணும்; மக ராசனா இருக்கணும் என்று வாழ்த்தினார்.

அவர் பெட்டியை எடுத்துக்கொண்டு வீட்டுக்குப் போனார். மற்றவர்களும் போய்ச்சேர்ந்தார்கள். சிறிது நேரத்தில் மறக்குடித் தெருவை சேர்ந்த இரண்டு பெரியவர்கள் அப்பாவைப் பார்ப்பதற்காக வந்து, கும்பிட்டு நின்றார்கள்.

'என்ன தேவரே, என்ன விஷயம்?' என்று அப்பா கேட்கவும் அவர்கள் மீண்டும் வணங்கினார்கள். எசமான், மன்னிக்கணும். எவனோ தெரியாத்தனமா தப்பு பண்ணிப் போட்டான். பயத்தினாலே அந்தப் பயல் எடுத்த சாமான்களை தனக்கென்று வைத்துக் கொள்ளவுமில்லை. தோட்டத்துக் கிணத்துப்பக்கமும், வாய்க்காலிலும் போட்டுவிட்டு, எங்கேயோ ஓடிப்போயிட்டான். எங்கே போனான்னு தெரியலே என்று சொன்னார்கள்.

அப்பா சிரித்தார். அவர்கள் தங்கள் இனத்தானை காட்டிக் கொடுக்க விரும்பவில்லை என்று புரிந்துகொண்டார். போகட்டும்! பொருள்கள் தான் வந்துவிட்டனவே! என்று எண்ணினார். அப்படியா, போனாப் போகுது விடுங்க என்று கூறினார். உட்காருங்க, சாப்பிட்டு விட்டுப் போங்க என்றார்.

அவர்கள் பணிவுடன் வணங்கினார்கள். எசமான் தயவு இருந்தால் போதும். சாப்பாட்டுக்கு என்ன! நாங்க வாறோம் என்றார்கள்.

அவர்களுக்கு வெற்றிலை பாக்கு கொடுக்கும்படி அப்பா கட்டளையிட்டார். அவ்வாறே கொடுக்கப்பட்டது. அதைப் பெற்றுக் கொண்ட தேவர்கள் இருவரும் மீண்டும் கும்பிடு போட்டுவிட்டு வெளியேறினார்கள்.

கண்டிப்பாக நடந்து கொள்ளும் அப்பா கருணை காட்டவும் தவறுவதில்லை. நம்பினபேருக்கு நடராசர்; நம்பாதபேருக்கு எமராசா என்று அடிக்கடி சொல்வது உண்டு. அடி உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி உதவமாட்டான்; எடுத்த எடுப்பிலேயே அடித்து உதைத்து மிரட்டினால் தான், உண்மையை வெளிக்கொண்டு வரமுடியும் என்று அவர் சொல்வார். அப்படியே செயலாற்றுவார்.

பெருங்குளத்தில், சிவன் கோயிலுக்கு வெளிப்புறத்தில், மதில்சுவரை ஒட்டி ஒரு வீடு இருந்தது. சிறிய வீடு தான். தாசி வீடு அது. தாசி ஒருத்தி மகளுடன் அங்கு வசித்தாள். மகளுக்கு பன்னிரண்டு அல்லது பதின்மூன்று வயதிருக்கலாம்.

ஒருநாள் அவள் மகளை அழைத்துக் கொண்டு அப்பாவை காணவந்தாள். தன் வீட்டிலிருந்த பட்டுப் புடவைகளையும் சில நகை களையும் யாரோ சிலர் திருடிச் சென்றுவிட்டார்கள். இரண்டு மூன்று பேர் செய்த காரியம் அது; நீங்க தான் கண்டுபிடித்துக் கொடுக்க வேண்டும் என்று அவள் முறையிட்டாள்.

உனக்கு யார் மீதாவது சந்தேகம் இருக்கிறதா என்று அப்பா கேட்டார்.

உங்க வீட்டு வண்டிக்காரனும் இதில் சம்பந்தப்பட்டிருப்பதாக எனக்குத் தோணுது. அவனை விசாரித்தால் துப்பு துலங்கும் என்று அவள் தெரிவித்தாள்.

மாணிக்கமா? மாணிக்கமா அப்படிச் செய்தான் என்கிறே? என்று அப்பா அழுத்திக் கேட்கவும், ஆமா. அவன் பேரிலே எனக்கு சந்தேகமிருக்கு. அவன் ரெண்டு மூணு நாளா எங்கவீட்டையும் தோட்டத்தையும் நோட்டம் விட்டுத் திரிஞ்சான். அதை நான் பார்த்திருக்கேன். என்ன விசயம் என்று கேட்டேன். அவன் எதுவும் சொல்லாமப் போயிட்டான். நேத்துப் பகலிலும் அவன் அங்கே அலைஞ்சான். ராத்திரி தான் திருட்டு வேலை நடத்திருக்கு என்று அவள் கூறினாள்.

அப்பா வண்டிக்காரன் மாணிக்கத்தை கூப்பிட்டார். இந்த அம்மா என்னமோ சொல்லுது, என்ன நடந்தது என்று சாதாரணமாகக் கேட்டார்.

அவன் மிரளமிரள விழித்து, எஞ்ஞமிஞ்ஞவென்று என்னவோ சொன்னான்.

அப்பாவுக்குக் கோபம் பொங்கியது. வேகமாக எழுந்தார். அவர் ஓரமாகக் கிடந்த சாட்டைக் கம்பை எடுத்து, மாணிக்கத்தை கண்டபடி விளாசினார். தாசியே இரக்கப்பட்டு, அய்யய்யோ, இப்படி அடிக்காதீங்க சாமி என்று கெஞ்சும் அளவுக்கு மூர்க்கமாக சாட்டையால் அறைந்து தள்ளினார் அப்பா.

மாணிக்கம் நெடுஞ்சாண்கிடையாகக் கீழே விழுந்து கும்பிட்டான். உள்ளதை சொல்லிடறேன், எசமான். என்னை அடிக்காதீங்க என்று கத்தினான்.

சொல்லு என்று அடியை நிறுத்தினார் அப்பா.

தன்னோடு உடந்தையாகச் செயல்பட்ட இரண்டு பேரைப் பற்றிச் சொன்னான் மாணிக்கம். அவர்கள் எங்கே இருப்பார்கள் என்றும் தெரிவித்தான்.

அங்கு ஒதுங்கி நின்ற சேவகர்களை அழைத்தார் அப்பா. இவன் காலையையும் கையையும் கயிற்றால் கட்டி, திண்ணை ஓரத்திலே உட்காரவையுங்க. அப்புறம் இவன் சொன்ன இடங்களுக்குப் போயி, இவன் குறிப்பிட்ட இரண்டு பேரையும் இழுத்திட்டு வாங்க என்று உத்திரவிட்டார்.

அவர்களும் அவ்விதமே செயல் புரிந்தார்கள். மாணிக்கத்தை கட்டி உட்காரவைத்து விட்டு வெளியேறிய சேவகர்கள் அரை மணி நேரத்தில் திரும்பி வந்தார்கள். அவர்களுடன் இரண்டு பேர் வந்து சேர்ந்தார்கள்.

என்ன ஏது என்று விசாரிக்காமலே, எடுத்த எடுப்பிலேயே சாட்டையால் அவர்களை விளாசினார் அப்பா. மாணிக்கம் இருந்த நிலையை பார்த்ததுமே அவர்களுக்கு விஷயம் புரிந்துவிட்டது. எசமான், மன்னிக்கணும். தெரியாமல் செய்துபோட்டோம். பொருள்களை திரும்ப சேர்ப்பித்து விடுகிறோம் என்று கும்பிட்டபடி, காலில் விழுந்தார்கள்.

அப்பா அடிப்பதை நிறுத்தினார். சாமான்கள் எல்லாம் எங்கே இருக்கு என்று கேட்டார்.

சேவகர்கள் கூட வந்தால், நான் எடுத்துத் தருகிறேன் என்று ஒருவன் சொன்னான்.

அப்பா சேவகர்களுடன் அவனை அனுப்பிவைத்தார். சிறிது நேரத்திலேயே, களவு போன பொருள்களுடன் சேவகர்கள் அவனையும் இட்டுக் கொண்டு வந்தார்கள். பொருள்களை அப்பாவிடம் அளித்தார்கள்.

தாசியும் அவள் மகளும் அங்கேயே தான் அமர்ந்திருந்தார்கள். அப்பா அவளுடைய பொருள்களை அவளிடம் தந்தார். 'எல்லாம் சரியாக இருக்கா, பார்த்துக்கோ' என்றார்.

அவள் நன்கு கவனித்து, எல்லாம் சரியாக இருக்கு என்றாள். ஐயா, உங்களுக்கு ரொம்பப் புண்ணியம். நீங்க நல்லாஇருக்கணும். உங்களாலே தான் இழந்துவிட்ட சொத்துகள் எனக்கு திரும்பக் கிடைத்தன என்று நன்றியுடன் கூறிக் கும்பிட்டாள். விடைபெற்றுச் சென்றாள்.

மாணிக்கத்தின் கட்டுகளை அவிழ்த்து விடும்படி செய்தார் அப்பா. மூன்று பேரையும் அங்கேயே உட்காரச் செய்து, இலை போட்டு சாப்பாடு பரிமாற வைத்தார். மூவரும் 'போதும் போதும்' என்று சொல்கிற வரை அவர்களுக்கு உணவு வழங்கப்பட்டது. பிறகு வெற்றிலை பாக்கு அளிக்கப்பட்டது.

உண்மையாக உழைத்துப் பிழைக்கணும். ஏன் திருடி வாழ ஆசைப்படுறீங்க? அப்பாவி ஜனங்களின் வயிற்றெரிச்சலை ஏன் வாங்கிக் கட்டிக் கொள்கிறீங்க? என்று அப்பா நல்ல வார்த்தை சொன்னார். மாணிக்கம் இப்படிச் செய்வான்னு நான் நினைக்கவேயில்லை. ஏன் மாணிக்கம் உன் புத்தி இப்படிப் போச்சு? என்று வண்டிக்காரனிடம் பேசினார்.

அவன் தலைகுனிந்து நின்றவன் தான். வாய் திறந்து எதுவும் சொல்லவில்லை.

சரி. போங்க. இனிமேல் ஒழுங்கா இருங்க. புத்தியாய் பிழையுங்க என்று கூறி மூன்று பேரையும் அனுப்பிவைத்தார் அப்பா.

அன்று போனவன் தான். அதன்பிறகு மாணிக்கம் வேலைக்கு வரவேயில்லை. அவனுக்கு பதிலாக, மாடசாமி என்கிற உவச்சர் குலத்தவன் வண்டிக்காரனாக வந்து சேர்ந்தான்.

நன்றி உணர்வு கொண்டிருந்த தாசி, அதன் பிறகு அவ்வப்போது மகளுடன் எங்கள் வீட்டுக்கு வந்து பேசிக்கொண்டிருந்து விட்டுப் போனாள். அவள் வீட்டில் பண்ட பலகாரம் செய்தால், அவற்றில் ஒரு பங்கை பாத்திரத்தில் எடுத்துக்கொண்டு வந்து அன்புடன் அளிப்பதை வழக்கமாகக் கொண்டாள். சில நாள் என்னையும் அண்ணனையும் தன்னுடன் வீட்டுக்கு அழைத்துச் சென்று உபசரித்தாள்.

அவள் மகளை அக்கா என நாங்கள் அழைத்தோம். அவளுக்கு நீண்ட தலைமுடி கருகரு என வளர்ந்து தொங்கியது. அவள் தாய் வாசனைத் தைலம் தடவி அந்த முடியை வாரிப் பின்னி, நுனியில் குஞ்சலம் கட்டித் தொங்கவிட்டு அழகு பார்ப்பாள். மினுமினுவென்று நீண்டு தொங்கிய சடையும் குஞ்சலமும் வசீகரமாக விளங்கின.

அவளுடைய அண்ணன் தேர்ந்த நடிகன் என்றும், அவன் சேர்ந்துள்ள நாடகக்குழு அச்சமயத்தில் இலங்கை யாழ்ப்பாணம் எல்லாம் சென்று நாடகங்கள் நடத்துவதாகவும் அவள் சொன்னாள். சுருள் சுருளாக அவள் சேர்த்து வைத்திருந்த பல வர்ண நாடக நோட்டீசுகளையும் அவள் காட்டி மகிழ்ந்தாள். பெரிய பெரிய நோட்டீசுகள் அவை. ஒவ்வொன்றிலும், வெவ்வேறு வேடத்தில், முக்கியமாக ஒரு நடிகனின் படம் அச்சிடப்பட்டிருந்தது. அது தான் அவள் அண்ணன் என்று அந்த அக்காள் பெருமையுடன் தெரிவிப்பாள்.

சில மாதங்களில் அவள் 'பெரிய மனுஷி' ஆகிவிட்டாள் எனச் சடங்குகள் நடத்தப்பட்டன. அதன் பிறகு அவள் எங்கள் வீட்டுக்கு வருவதில்லை. நாங்களும் அங்கே போகக் கூடாது என்று எங்கள் அம்மா கார்வார் பண்ணிவிட்டாள்.

காலியாகக் கிடந்த வெற்று மனையின் ஒற்றையடித்தடத்தின் வழியாகத் தான் நாங்கள் பள்ளிக்கூடம் போய் வருவோம். அப்படிப் போகிற பாதையில், பெரிய ரஸ்தாவை ஒட்டி செங்கோல் மடம் என்ற சைவ சமய மடம் இருந்தது. பெரிய மடம் தான். அங்கு தினம் பூஜைகள் நடைபெறும். தேவார திருவாசகப் பாடல்கள் ஓதப்படும்.

செழிப்பாக இருந்து நன்கு செயல்பட்டு வந்த பெருங்குளம் செங்கோல் மடம் பின்னர் சிலரது சொத்துத் தகராறு - கோர்ட்டு வழக்குகள் காரணமாக இடைக்காலத்தில் மூடுண்டு கிடக்க நேர்ந்தது. மடத்தின் சில பகுதிகள் இடிந்து சிதைந்து, புல்லும் பூண்டும் எருக்கஞ் செடிகளும் முளைக்கும் இடமாக மாறியிருந்தது. கால ஓட்டத்தில் வழக்கு மடத்துக்கு சாதகமாகத் தீர்ப்பாயிற்று. மீண்டும் மடம் நன்னிலை பெற்றது. கட்டிடங்கள் புதுப்பிக்கப் பெற்றன. மறுமலர்ச்சி பெற்ற செங்கோல் மடம் வளமுற்று வனப்புடன் விளங்குவதையும் நான் காணமுடிந்தது. மனிதர்களின் வாழ்க்கை போலவே கட்டிடங்களும் நிறுவனங்களும் உயர்வுதாழ்வுகள், சரிவுகள் மீட்சிகள், வறட்சிகள் வளங்களை எல்லாம் அனுபவிக்க நேரிடுகின்றன என்ற எண்ணம் என்னுள் எழுவது உண்டு.

பெருங்குளத்தில் தென்னை மரங்கள் மிகுதியாக வளர்ந்து காணப்பட்டன. பள்ளிக்கூடம் போகிற வழி நெடுகத் தென்னைகள். பள்ளிக்கூடத்தின் சுற்றுப்புறங்களில் தென்னந்தோப்புகள். ஆகவே ஊரின் சூழல் குளுமையாகவும் பசுமையாகவும் இருந்தது.

ஆற்றுக்குப் போக வேண்டுமானால் ஒன்றரைமைல் தூரத்துக்கும் அதிகம் போகவேண்டும். மங்கலக் குறிச்சி என்ற சிற்றூரைத் தாண்டி, ஒரு வழியில் திரும்பி, இறக்கத்தில் சென்றால் தாமிரவர்ணி ஆறு தென்படும். மங்கலக்குறிச்சி போகிற ரஸ்தா நெடுகிலும் தென்னை மரங்கள் தான். பச்சைநிற இளநீர் காய்கள், செவ்விளநீர் மற்றும் வெள்ளை இளநீர் என்று பல நிறங்களில் காய்கள் குலைகுலையாகக் காய்த்துத் தொங்குவதும், அநேக மரங்களில் பாளை பிளந்து பூக்கள் சிரித்துக் காட்சி தருவதும் மனரம்மியமாக விளங்கும்.

மங்கலக்குறிச்சியிலிருந்து வேறு திக்கில் திரும்பிச் செல்கிற பாதை ஏரல் ஊருக்குக் கொண்டு சேர்க்கும். பணி நிமித்தமாக அப்பா அடிக்கடி ஏரல் போக வேண்டிய அவசியம் ஏற்படும். வில்வண்டியில் போவார். சிலசமயம் எங்களையும் கூட்டிச் செல்வார்.

ஏரலில் சிலுவைப்பிள்ளை என்பவர் சாராயக் கடைக் கான்ட்ராக்டராகத் தொழில் புரிந்து வந்தார். அடிக்கடி அவர் எங்கள் வீட்டுக்கு வருவது உண்டு. எங்களிடம் அன்பும் பிரியமும் காட்டுவது அவர் இயல்பாக இருந்தது. வீட்டுக்கு அவர் வருகிறபோது, புதுவிதமான மிட்டாய்கள் வாங்கி வந்து எங்களுக்கு அளிப்பார். ஏரலுக்கு நாங்கள் போனால், பிரியமாக உபசரிப்பார். பருகுவதற்கு 'கலர்' பானம், தின்பதற்கு தினுசு தினுசான மிட்டாய்கள், பண்டங்கள் வாங்கிக் கொடுப்பார். விளையாட்டு பொம்மைகளும் வாங்கித் தருவார்.

அவரும் வேறு சிலரும், ஆங்கிலப் புதுவருடப் பிறப்பின் போது வசீகரமான காலண்டர்கள் கொண்டு தருவார்கள். பெருங்குளத்தில் வசித்த போது தான் காலக்கணிப்பு உணர்வு எனக்கு ஏற்பட்டது. கோவில்பட்டியில் வாழ்ந்த போதும் காலண்டர்கள் வீட்டில் இருந்திருக்கும். ஆனாலும், வருடம் மாதம் தேதி என்ற காலப் பிரக்ஞை அப்போது ஏற்பட்டதில்லை. எனது ஐந்தாவது வயதின் இறுதியில், ஆறாவது வயது துவக்கத்தில் தான் காலக் கணக்கை நான் கற்றுக்கொள்ளலானேன்.

பெருங்குளத்தில் வசித்த காலத்தில் எங்கள் வீட்டுக்கு வந்த 1926, 1927ஆம் வருடக் காலண்டர்கள், அவற்றில் வசீகரமாக அச்சிடப்பட்டிருந்த வர்ணச் சித்திரங்கள் என்னை ஈர்த்து, மனசில் ஆழமாகப் பதிந்துவிட்டன. அவற்றில் பெரும்பாலானவை ஜெர்மனியில் அச்சாகி வந்த படங்கள். கொழும்புவிலிருந்து சிலுவைப்பிள்ளை பெற்ற

புதுமையான, பளீர் வர்ணங்கள் கொண்ட - படங்கள் அழகு செய்த காலண்டர்கள் மறக்கமுடியாதவை.

கடவுளர் படங்கள், ராஜா ரவிவர்மா தீட்டிய ஓவியங்கள், சகுந்தலையும் மான்குட்டியும், தடாகத்தின் அருகே புல் தரைமீது ஒயிலாகப் படுத்தவாறு சகுந்தலை தாமரை இலை மீது கடிதம் எழுதும் பாவனை எனப் பலவாறான படங்கள் குளுமையான வர்ணங்களில் அழகாக அச்சிடப்பட்டு இறக்குமதியாகிக் கொண்டிருந்தன.

வாசனை நிறைந்த சுந்தரி சோப், லயன் பிராண்ட் சோப் என்று குளிக்கும் சோப்புகள், அழகு அழகான அட்டைப் பெட்டிகளில், மூடி மீது கவர்ச்சிகரமான படங்களோடு, இங்கிலாந்திலிருந்து வந்தன. வினோலியா ஒயிட் ரோஸ் சோப் தரத்திலும் மணத்திலும் விசேஷமானது. மூன்று சோப்புகள் கொண்ட நீளப் பெட்டியில் அவை கிடைத்தன. அட்டைப் பெட்டி பொன் வண்ணத்தோடு, தங்கத்தால் செய்யப்பட்டது போல், மினுமினுக்கும். பெட்டியின் மேலே இனிய தேவதைகளின் படம் மிளிரும்.

பிஸ்கட் தினுசுகளும் அயல்நாட்டுச் சரக்குகள் குறைந்த விலையில் கிடைத்துக் கொண்டிருந்தன. ஹன்ட்லி பால்மர்ஸ் பிஸ்கட் பிரசித்தி பெற்றது. ஒரு துண்டை நாவில் வைத்தால் தானாகக் கரைந்துவிடும் என்று சொல்லும்படியான மென்மைத்தன்மையும் இன்சுவையும் பெற்றிருந்த உயர்ரக பிஸ்கட் அது. தகரடப்பாவில், மினுங்கும் வர்ணங்களோடும் இனிய படங்களோடும், நைசான மிக லேசுக் காகிதத்தில் பொதியப்பட்டு, தனி மணத்தோடு வந்தது அந்த பிஸ்கட்

உடுத்தும் துணிகளும் இங்கிலாந்திலிருந்து வாணிபப்பொருளாக வந்து குவிந்தன. மிக நைஸான மல்வேட்டி (கிளாஸ்கோமல்)யும் மஸ்லின் சட்டைத் துணிகளும் மிகுதியாக வந்தன. அவற்றை அணிவதே நாகரிகம், பெருமை, மதிப்பு மிக்கது என்று ஜனங்களும் நம்பினார்கள். சிலுவைப்பிள்ளை சதா நைசான மல்வேட்டியிலும், வெள்ளைவெளே ரெனத் துலங்கிய மெல்லிய மஸ்லின் துணிச் சட்டையிலும் தான் காட்சி தந்தார். கோடை காலமோ, மழைகாலமோ, எப்போதும் அவர் குடை வைத்திருப்பார். கொழும்புக் குடை. கொழும்புக் குடை உசத்தியானது, அந்தஸ்தின் சின்னம் என்று கருதப்பட்டு வந்தது அக்காலத்தில்.

மிடுக்காகத் தன்னை அலங்கரித்துக் கொண்டு திரிந்த மற்றொரு மனிதரும் அவ்வப்போது அப்பாவை பார்க்க வருவார். பண்ணைய

விளைப் பண்ணையார் என்று குறிப்பிடப்பட்டார் அவர். தற்பெருமை மிக்கவர். இளம் வயது தான். இவர் ஜரிகைக்கரை வேட்டி, சில்க் சட்டை, பட்டு லேஞ்சி என்று அணிந்து திரிவார். பெரும் பேச்சுப் பேசுவார். பேச்சில் நேர்மை கிடையாது என்பதை அவர் செயல்கள் நிரூபித்தன.

ஒரு சமயம் பண்ணையார் இரண்டுபேருடன் மாலை நேரத்தில் வீட்டுக்கு வந்தார். அப்பாவுடன் வெகுநேரம் பேசி கொண்டிருந்தார். இருட்டி விட்டது. நிலாக் காலம் இல்லை. இரவு கும்மென்று கவிந்திருந்தது. இருட்டிலே ஊர்போய்ச் சேர்வது கஷ்டமாக இருக்கும்; அரிக்கன் லாந்தர் ஒண்ணு கொடுங்க; நாளைக்கு கொடுத்து அனுப்பிவிடுகிறேன் என்று அவர் அப்பாவிடம் கேட்டுக் கொண்டார்.

அப்பாவும் ஒரு லாந்தரை அவரிடம் கொடுக்கச் செய்தார். புதிதாக வாங்கப்பட்டிருந்த நல்ல லாந்தர். எங்கள் வீட்டில் நான்கு அரிக்கன்லாந்தார்கள், அநேக சிறு விளக்குகள் (பெட்ரூம் லைட் என்று சொல்லப்பட்ட ரகம்) பழக்கத்தில் இருந்தன. ஒவ்வொரு அறைக்கும் ஒரு விளக்கு.

தினசரி சாயந்திரவேளைக்கு முன்னதாகவே, வேலைக்காரன் லாந்தர் சிம்னிகளை நன்றாக, திருநீறு அல்லது சாம்பல் வைத்து, துலக்கி வைப்பான். புகைக் கறை படியாது சிம்னிகள் பளீரென்றிருக்கும். கைவிளக்குகளில் (குருவி லைட்டு என்று அம்மா குறிப்பிடுவாள்) ஒன்றில் சிம்னி சுண்ணாம்பு பூசியது போல வெள்ளை நிறத்தில் இருக்கும். கோழி முட்டைசிம்னி என அம்மா சொல்லுவாள்.

நல்ல புதிய லாந்தரை வாங்கிப்போனார் பண்ணைய விளைப் பண்ணையார். மூன்று நாள்களுக்குப் பிறகு தான் அவர் வந்தார். அவர் வாக்களித்தபடி 'மறுநாளே' லாந்தரைக் கொடுத்தனுப்பவில்லை; அன்று வந்த போது அவர் அதை கொண்டுவரவுமில்லை. அம்மா, லைட்டை அனுப்பிவைக்கவே இல்லையே என்று நினைவுபடுத்தவும், அடடா, மறந்தே போனேன்; கட்டாயம் நாளைக்கு கொடுத்து அனுப்புகிறேன் என்று அவர் உறுதி கூறினார்.

அப்படி அவர் செய்யவில்லை. ஒரு வாரத்துக்குப் பிறகு அப்பா வேலைக்காரனை பண்ணைய விளைக்கு அனுப்பினார், லாந்தரை திரும்பப் பெற்று வருவதற்காக.

சில மணிநேரம் சென்று அவன் வந்தான், கையில் ஒரு லாந்தருடன். முணமுணத்தபடியே வந்தான். அவன் கொண்டு வந்தது ஒரு பழைய

லாந்தர். பாடாவதி விளக்கு! சிம்னியும் அநேக நாள்கள் துடைக்கப் பெறாமல் கரிபடிந்து காணப்பட்டது.

புதிய லாந்தரை எடுத்துப் போன பண்ணையாரு, இப்ப இது தான் நான் கொண்டு வந்த லைட்டு என்று இந்தப் பழைய விளக்கை தாறாரு. எசமான் வீட்டிலே இது மாதிரி லாந்தரே கிடையாது. அன்னைக்கு உங்ககிட்டே கொடுத்தது புதிய அரிக்கன்லைட்டு. இது ரொம்பப் பழசாக இருக்குதே என்று எவ்வளவோ சொன்னேன். அவரு தான் சொன்னதையே சொல்றாரு. நான் கொண்டு வந்தது இந்த லைட்டு தான்; எங்க வீட்டிலே வேற அரிக்கன் லாந்தரே கிடையாது என்று கழுவஞ்சாதனை சாதிக்காரு. பேரு தான் பண்ணையாரு. நல்ல மனசு இல்லே அவருகிட்டே என்று வேலைக்காரன் புலம்பித் தீர்த்தான்.

நல்ல புது லைட்டை எடுத்திட்டுப் போயிட்டு, இப்படி மோசமான லைட்டை கொடுத்து அனுப்பியிருக்காரே! என்ன மனுசன் அவரு என்று அம்மா குறைபட்டுக் கொண்டாள்.

போகுது போ, அவரு தரம் அவ்வளவு தான் என்று அப்பா அந்த விவகாரத்தை ஒதுக்கிவிட்டார்.

பண்ணைய விளையில் பெயர்பெற்ற ஒரு நாடாரும் இருந்தார். சிவலிங்க நாடார் என்று. கை எலும்பு முறிவு, கால் எலும்பு முறிவு, மனித உடலில் எந்தப் பாகத்தில் எந்த எலும்பு முறிந்து போனாலும் அவர் முறையான சிகிச்சை செய்து நேர்படுத்தி விடுவார். கைதேர்ந்த மருத்துவர் அவர்.

பெருங்குளத்தில் இருந்தபோது எனக்கு ஒரு விபத்து ஏற்பட்டது. நான் ஒரு விபத்தை ஏற்படுத்திக் கொண்டேன் என்று சொல்ல வேண்டும்!

சின்னவயசில் எனக்கு தலைமுடி நீளமாக வளர்ந்து தொங்கியது. எனது பதினான்காவது வயதில் தான் முடி வெட்டப்பட்டு, கிராப் தலையாக மாறியது.

நீண்ட தலைமுடியை நன்றாக வாரி, சடைபின்னி, தினந்தோறும் பூவைத்து அழகுபடுத்துவாள் அம்மா. காது குத்தி கடுக்கன்கள் அணியப்பட்டிருந்தன. கைகளில் காப்பும், கால்களில் பாதச் சலங்கையும் மாட்டி பெற்றோர்கள் மகிழ்வுற்றனர். அண்ணனுக்கும் தம்பிக்கும் தலைமுடி நீளமாகவே வளரவிடப்பட்டிருந்தது.

பொதுவாக, அந்நாள்களில் எல்லா ஆண்குழந்தைகளுக்கும், பெண்பிள்ளைகளைப் போலவே, தலைமுடியை நீளமாக வளரவிடும் பழக்கம் இருந்தது. பெரிய ஆண்கள் கூட தலைமுடி வைத்திருப்பது சகஜமாக இருந்தது. பெரியவர்களில் சிலபேர் தலைமுடியை ஒட்ட வெட்டி மொட்டைத் தலையர் மாதிரி காட்சி தருவார்கள். படித்து நாகரிகமானவர்கள் கிராப் வெட்டிக்கொள்ளும் வழக்கம் சிறிது சிறிதாக வந்தது.

அண்ணனுக்கு சீக்கிரமே கிராப் தலை ஏற்பட்டுவிட்டது. எனக்கும் தம்பிக்கும் வெகுகாலம் வரை நீண்ட தலைமுடி தான்.

பெருங்குளத்தில் வசிக்கையில், வழக்கம் போல் தலைசீவிப் பின்னி பூச் சூடியிருந்த ஒருநாளில் நடந்த சம்பவம் இது. அன்று ஏதோ விசேஷநாள். அப்பாவைக் கண்டுபோக பலபேர் வந்திருந்தார்கள். மாலை நேரம். அப்பா, அம்மா, அண்ணன், தம்பி எல்லோரும் வீட்டின் முன்பக்கம் திண்ணையில் இருந்தார்கள். வேலைக்காரன், சேவகர்கள் வழக்கமான இடங்களில் நின்றார்கள். பார்க்க வந்தவர்கள் கும்பலாக தெருவில் நின்று பேசிக்கொண்டிருந்தார்கள்.

நான் வீட்டினுள் அடுப்பங்கரைப் பக்கம் போனேன். பின் வாசல்படி மீது நின்று, என் தலையிலிருந்த பூச்சரத்தை எடுத்தேன். அது வாடியிருந்தது. கையை உயர்த்தி பூவை சுழற்றி விட்டெறிந்தேன். எப்படியோ கால் இடறி படிக்கட்டில் உருண்டு தோட்டத்து மன் தரையில் விழுந்தேன். உயரமான படி வரிசை. மூன்று கல்படிகள். ஒவ்வொரு படியிலும் விழுந்து புரண்டு கீழே தரைக்கு வந்ததில், இடது கை முழங்கை மூட்டில் பலத்த அடிபட்டிருந்திருக்கிறது. அடிபட்டதனால் வலி ஏற்பட்டது. நான் கண்ணீர்வடித்தபடி எழுந்து, பூச்சரத்தை எடுத்துத் தூர வீசிவிட்டு, பட்டாசலுக்கு வந்தேன்.

கைவலி அதிகமாகியது. நான் உரக்க அழவில்லை. பட்டாசலில் தொங்கிய ஊஞ்சலில் படுத்து விட்டேன். சிறு பிள்ளைகளுக்கான பிரம்பு ஊஞ்சல். சுற்றிலும் மரத்தினாலான தடுப்பு இருக்கும். தொட்டில் ஊஞ்சல் என்று சொல்லப்பட்டது. அதில் படுக்கை, தலையணைகள் கிடந்தன. தலையணையை கைக்கு அண்டை கொடுத்து, படுத்து விட்டேன். வலி காரணமாக அழுகை வந்தது. ஆயினும் வாய்விட்டு அழாமல் கண்ணீர் வடித்தபடி கிடந்தேன்.

நேரம் போயிற்று. வந்தவர்கள் விடைபெற்றுப் போனார்கள். எங்கே

கிருஷ்ணனை காணோம்? இத்தனை நேரமா அவன் வெளியே வரவேயில்லையே என்று அப்பா கேட்கவும், அம்மா வீட்டுக்குள் வந்து தேடிப்பார்த்தாள். ஊஞ்சலில் கிடந்தவனைக் கண்டதும், இங்கே தான் ஊஞ்சலிலே படுத்துக் கிடக்கான் என்று சொல்லி அம்மா என்னை அணுகினாள். அந்திநேரத்திலே என்ன தூக்கம், எழுந்திரு என்று கூறி, என்னை ஊஞ்சலிலிருந்து தூக்கினாள்.

இடது கையில் அம்மா பிடி அழுத்தியதும் எனக்கு வலி அதிகமாயிற்று. ஓவென்று கத்தி அழுதேன். ஏன் ஒருமாதிரி இருக்கிறே? என்ன ஆயிற்று என்று பதறி அம்மா இடதுகையை நோக்கினாள். கை மூட்டின் அருகே வீங்கியிருந்தது. கையை மடக்க முயன்றாள். வலி கூடியது. அழுகையும் அதிகரித்தது.

அப்பா வந்து பார்த்தார். கை வீக்கம் கண்டிருக்கு; ஏதோ அடிபட்டிருக்கு. என்ன நடந்தது என்று அப்பா கேட்டார்.

பூச்சரத்தை எடுத்து விட்டெறிந்த போது, படியில் உருண்டு விழுந்ததை சொன்னேன். இடது கைமூட்டுப்பக்கம் தொட்டாலே வலி மிகுதியாக இருந்தது.

விழுந்ததிலே மூட்டு பிசகியிருக்கு என்றார் அப்பா. விழுந்த உடனேயே வந்து சொல்வதற்கென்ன? ஏன் சொல்லாமலே படுத்துக் கிடந்தே? சிவலிங்க நாடான் இத்தனை நேரமும் இருந்துவிட்டு இப்பதானே போனான்! அப்பவே அவனிடம் காட்டியிருந்தால் மூட்டுப்பிசகை சரிபண்ணியிருப்பானே என்று அப்பா எரிச்சலோடு சொன்னார்.

தொடர்ந்து வேலைக்காரனை அனுப்பி நாடாரை அழைத்து வரும்படி ஏவினார்.

அவன் வேகமாகப் போய், பாதி வழி சென்றிருந்த சிவலிங்க நாடாரை அழைத்து வந்தான். நாடார் என் கையைப் பார்த்தார். மூட்டு எலும்பு தன் இடத்திலிருந்து விலகியிருக்குது. அதை சரிப்படுத்திடலாம் என்று கூறி, என் கையைப் பற்றி, உரிய இடத்தில் அழுத்தி ஏதோ செய்தார். மிக வலித்தது.

எலும்பிலே இலேசா முறிவு ஏற்பட்டிருக்கும் போல் தோணுது. மட்டை வச்சுக் கட்டணும். சரியாகி விடும் என்று சொன்னார். தேவையான பொருள்களை கொண்டுவரச் செய்தார்.

முட்டை, களிப்பாக்கு, நல்லெண்ணெய், மற்றும் ஏதோ சில. பனைமட்டையை சிறிதாக்கி, சிறுசிறு பட்டைகளாக வகிர்ந்து கொண்டார். துணியும் தேவைப்பட்டது. முட்டைக் கருவை ஊற்றி, களிப்பாக்கை மைபோல அறைத்து, எண்ணெய் ஊற்றி, மேலும் மசித்துப் பசையாக்கினார். அதை கைமுட்டிலும் கைமீதும் நன்றாக அப்பி, மட்டைகளை வைத்து, துணிகொண்டு கட்டுப் போட்டார். வலியினால் நான் அழுதுகொண்டேயிருந்தேன்.

அப்பா கோபித்தார். நாயை அடிப்பானேன், பீயை சுமப்பானேன்? பூவை எடுத்து ஏன் படிமேலே நின்று சுழற்றி எறியணும்? கீழே விழுந்து ஏன் அடிபடணும்? விளையாட்டாக இருந்துதா அப்போ? அதுக்கு இப்ப அனுபவி என்று பேசினார்.

இரண்டு மூணு நாளைக்கு ஒருக்க, கட்டை அவிழ்த்து, பசையை புதுசா வச்சுக்கட்டணும். நான் வந்து பார்க்கிறேன் என்று சொல்லி சிவலிங்க நாடார் விடைபெற்றுச் சென்றார்.

மட்டை கட்டப்பெற்ற இடது கை மடித்து வைக்கப் பெற்று, கழுத்திலிருந்து தொங்கிய ஒரு துணியில் தொட்டிலிடப்பட்டிருந்தது. இந்த நிலை கை குணமாகிற வரை நீடித்தது.

நாடார் அடிக்கடி வந்து, கைக் கட்டை அவிழ்த்துப் பார்த்து உரிய முறையில் சிகிச்சை செய்தார். நாளடைவில் எலும்பு சேர்ந்து இணைந்து விட்டது; இருந்தாலும் ஜாக்கிரதையாக இருக்கணும் என்று சொன்னார். தொட்டில் கட்டை சிறிது சிறிதாகத் தாழ்த்தி, கையை மெதுமெதுவாகக் கீழிறக்கி, முடிவில் இயல்பாகத் தொங்கும் நிலைக்குக் கொண்டு வந்தார். அதற்கு சில மாதங்கள் பிடித்தன. முட்டையும் களிப்பாக்கும் அறைத்து மசி போலாக்கிப் பூசுவது தொடர்ந்தது.

உரிய காலத்தில் கை குணமாயிற்று. இடது கை இயல்பான தன்மைபெற்று. இருப்பினும், இரண்டு கைகளையும் நீட்டி வைத்தால், இடது கை சிறிது வளைந்திருப்பது பிறர் பார்வையில் புலனாகியது. விழுந்த உடனேயே காட்டியிருந்தால், உடனடியாக எலும்பை சீர்படுத்தியிருந்தால், பூரணமான குணம் ஏற்பட்டிருக்கும். இந்தக் குறைபாடு இருந்திருக்காது என்று நாடார் தெரிவித்தார்.

அது பெரிய குறைபாடாகத் தோன்றவில்லை. காலப் போக்கில் எல்லாம் சரியாகிவிட்டது.

காலம் சந்தோஷமாகத் தான் போய்க் கொண்டிருந்தது. கோயில்களில் திருவிழாக்கள் நடந்தன. பெருமாள் கோயில் திருவிழா, சிவன்கோயில் திருவிழா, சாமி புறப்பாடு, சப்பரத்தின் முன்னே ஆள்கள் தலைமீது தூக்கிச் செல்லும் கியாஸ் லைட்டுகள், கைத் தீவட்டிகள், சக்கரத் தீவட்டி, சாமியை சுமந்து செல்லும் வாகனங்கள் - இப்படி எத்தனை எத்தனையோ வேடிக்கைக் காட்சிகள்.

காளிஅம்மான் கோயில் கொடை வேறு விதமான சந்தோஷங்களை கொண்டு சேர்க்கும். பெண் வேடமிட்டு ஆடும் ஆண்கள், கன்னியான் கூத்து, சாமி வந்து ஆடுகிற பூசாரி என்று பரவசப்படுத்தும்.

காளிகோயில் பூசாரி (உவச்சன்) மனைவி ஒரு குழந்தை பெற்றெடுத்தாள். அதன் முகம் விசித்திரத் தோற்றம் கொண்டிருந்தது. பிள்ளை நரசிம்மம் போலத் தோணுது; சிங்க முகம் மாதிரி இருக்குது அதன் மூஞ்சி என்று குழந்தையைப் பார்த்தவர்கள் சொன்னார்கள்.

அது தோஷம், குடும்பத்துக்கு ஆகாது. தோஷம் நீங்க வேண்டும் என்றால், பிள்ளையை கழுவிலே ஏத்தி இறக்கணும் என்று சிலர் கூறினர். கழுவிலே ஏத்திறதுன்னா, நிசமாவே கழுமரத்திலே குத்தி எடுக்கறது இல்லே; சும்மா தோஷத்தை போக்கடிக்க பிள்ளையை கழு முனையிலே கிடத்தி எடுத்திரணும் என்றும் விளக்கினார்கள்.

நாள் குறிப்பிட்டு அவ்விதமே செய்யப்பட்டது. ஆடிமாதம் ஒரு செவ்வாய் கிழமை. அம்மன் சப்பரத்தில் புறப்பட்டு வந்தாள். அந்தி மயங்கும் நேரம். காளி கோயிலுக்கு எதிரே உள்ள முச்சந்தியில் கழு நாட்டப்பட்டிருந்தது. தடிமனான ஒரு பெரிய ஈட்டி தான் 'கழுமரம்.' அந்த ஈட்டி முனைமீது சிறு மெத்தை போன்ற துணிச்சுருள் வைக்கப் பட்டு, அதன் மேல் வேப்பங்குழை மிகுதியாக அடுக்கப்பட்டிருந்தது. அதில் குழந்தையை படுக்க வைத்தார்கள். அதன் உடம்பு, முகம் முழுவதும் திருநீறு பூசப்பட்டிருந்தது. நெஞ்சிலும் முகத்திலும் குங்குமக் குழம்பு தடவப்பட்டு, ரத்தம் போல் சிவந்து காணப்பட்டது.

குழந்தை வீரிட்டு அழுதது. அதன் விகாரமுகம் மேலும் அதிக விகாரத் தன்மை பெற்று கோரமாகத் தோன்றியது.

அம்மனுக்கு சூடன் தீபாராதனை நடந்தது. சூடன் தட்டிலிருந்து எடுக்கப்பெற்ற திருநீறு குழந்தையின் முகத்தில் இடப்பெற்றது.

சப்பரம் நகர்ந்ததும், குழந்தையின் தாய் பிள்ளையை எடுத்து அணைத்துக் கொண்டாள்.

இதை வேடிக்கை பார்க்கக் கூடியிருந்த கும்பலும் கரைந்து மறைந்தது.

இனி எல்லாம் சரியாப் போகும் என்று அநேகர் அந்தத் தாய்க்கு ஆறுதல் கூறினார்கள்.

ஆனால் எதுவும் சரியாகவில்லை. சில வாரங்களில் அந்தக் குழந்தை இறந்துவிட்டது. பிரச்னைக்குக் காலம் அளித்த தீர்வு அது.

அந்த வட்டாரத்தில் குரங்கணி அம்மன் பிரசித்தி பெற்ற சிறு தெய்வமாக விளங்கியது. அந்த அம்மன் கோயில் ஏரலுக்கு அருகே, ஆற்றின் மறுகரையில் இருந்தது. திருவிழாக் காலத்தில் - ஆடி மாதம் - கோயில் பரபரப்பும் பெரும் கவனிப்பும் பெற்றுக் காணப்படும். ஆடி மாதம் கடைசிச் செவ்வாயன்று, வெளியூர்களில் இருந்தெல்லாம், வண்டி கட்டிக் கொண்டு ஜனங்கள் வந்து கூடுவார்கள். பெரிய பெரிய கூண்டு வண்டிகள்.

அன்று அம்மனுக்கு ஏகப்பட்டு ஆடுகள் வெட்டி, பொங்கலிட்டு, பூசைகள் செய்வார்கள் பக்தர்கள். இத் திருநாளுக்காகக் கோயிலைச் சுற்றிலும், ஆற்று மணலிலும், வளையல் கடைகள், மிட்டாய் கடைகள், மற்றும் பலரகமான கடைகள் ஏற்பட்டிருக்கும். ராட்டினங்களும் வந்திருக்கும். பெரும் கும்பல் காரணமாக, கடைகளில் நல்ல வியாபாரம் நடக்கும்.

இரவு நேரத்தில் வாண வேடிக்கை நடைபெறும். அவுட் வாணங்கள், விதம்விதமான ஆகாச வெடிகள், கொளுத்தி வானில் விடப்பெறும். வெடிகள் ஒளிக்கோடுகளாக உயரப் போவதும், மேலே போய் வெடித்து கலர்கலராகப் பொறிகள் தெறித்துச் சிதறுவதும், மத்தாப்பூக்களாக ஒளிர்ந்து கீழிறங்குவதும் பார்ப்பதற்கு நல்ல வேடிக்கையாக அமையும்.

ஒரு வருடம் அப்பா எங்களை எல்லாம் குரங்கணிக்கோயில் திருவிழா பார்க்கக் கூட்டிப் போனார். வண்டியில் பகலிலேயே ஏரலுக்குப் போய் தங்கியிருந்தோம். இரவில் ஆற்றின் இக்கரையிலிருந்தே அக்கரையில் நிகழ்கிற வாண வேடிக்கைகளை வெகு நேரம் கண்டு களித்தோம்.

மறுநாள் கோயிலுக்குப் போனோம். மணல் பரப்பில், கடைகள்

ராட்டினங்கள் நடுவில் நடந்து வேடிக்கை பார்த்தோம். ஆறு அகன்று பரந்த மணல்பகுதி அதிகம் கொண்டிருந்தது. கோடை நாள் ஆதலால் தண்ணீர் குறைவாகவே ஓடியது.

கண் எட்டிய தூரமெங்கும் மணலின் பரப்பு. இந்த மணல் பகுதியில் எச்சரிக்கையாக நடக்கவேண்டும்; தனியாக வெகு தொலைவில் போய்விடக் கூடாது. எங்கே சொரிமணல் (சொருகு மணல்) இருக்கும் என்று சொல்லமுடியாது என்று அப்பா கூறினார்.

சொரி மணல் (சொருகு மணல்) என்றால் என்ன என்பதையும் அப்பா விளக்கினார். இதர இடங்களில் புதை மணல் என்று சொல்லப் படுவது திருநெல்வேலி ஜில்லாவில் சொரிமணல் எனக் குறிப்பிடப் பட்டது. பார்ப்பதற்கு மணல் பரப்பு சாதாரணமாக எல்லாப் பகுதிகள் போலத்தான் இருக்கும். ஆனால் அந்த இடத்தில் யார் போனாலும் - மனிதன், ஆடு மாடு கழுதை எதுவானாலும் - சொருசொரு என்று மணல் இறங்கி ஆளை அல்லது மிருகத்தை உள்ளே இழுத்து, உள்ளுக்குள்ளே சொருகிச் சாகடித்துவிடும். பயங்கரமான, ஆபத்தான மணல் பகுதி அது என்று அப்பா சொன்னார்.

ஒரு சமயம் ஒரு கலெக்டர் துரை - வெள்ளைக்காரன் - குதிரை மேல் அமர்ந்து வந்தார். கரைப் பக்கமெல்லாம் சுற்றி விட்டு, ஆற்றைக் கடந்து அக்கரை ஊருக்குப் போகலாம் என்று மணலில் இறங்கினார். அந்த இடத்தில் சொரிமணல் இருந்தது யாருக்கும் தெரியாது. குதிரை சவாரி செய்து ஒய்யாரமாக மணலைக் கடக்க முயன்ற துரை, அங்கே வந்ததும் குதிரையோடு உள்ளே இழுக்கப்பட்டார். வேகமாக சர்ரென குதிரையும் துரையும் உள்ளே போய் விட்டார்கள். விரைவிலேயே, அவர் போன இடம் தெரியாதபடி, மணல் மூடிக்கொண்டது. அதன் அருகே போகவே இதர ஆள்கள் பயந்தார்கள். சொரிமணல் யாரையும் சாகடித்துப்போடும் என்று அப்பா விவரித்தார்.

இந்தக் காலத்திலும், தாமிரவர்ணி ஆற்றில், மேற்கே திருப்புடை மருதூர் என்ற இடத்தில், அழகான சிவன் கோயில் அருகே, படித்துறைப் பக்கத்தில் புதைமணல் இருப்பதாகவும், வருடத்துக்கு ஒன்றிரண்டு பேர் தெரியாத்தனமாக அதில் சிக்கி ஆழ்ந்து போய் விடுவதாகவும் பத்திரிகைகளில் அவ்வப்போது செய்தி வருவது உண்டு.

குரங்கணி அம்மான் கோயில் திருவிழா முடிந்து ஜனங்கள் கூண்டு வண்டிகளில் அவரவர் ஊர் திரும்புவார்கள். வண்டிகள் வரிசையாகப்

போகும். அவற்றின் கூட்டின் மீது - ஒவ்வொரு வண்டி மேலும் - குடல் வகிரப்பட்ட ஆடுகளின் எலும்புகளும் ரத்தம் சுண்டிய தோல்களும் படர்ந்து கிடப்பதைக் காணமுடியும்.

அந்தக் காலத்தில் அப்படி நடந்தது. காலப்போக்கில் இது மாறியிருக்கும். பஸ் போக்குவரத்து அதிகரித்தபிறகு, கூண்டு வண்டிகளும் மறைந்து போயின.

எந்தக் காலத்திலும் மனிதர்கள் தெய்வமாக்கப்படுவது நடந்து கொண்டு தானிருக்கிறது. நாங்கள் பெருங்குளத்தில் வசித்தபோது, ஏரலில் சேர்மன் கோயில் என்று ஒன்று புதிதாகத் தோன்றி பெயர்பெற்று வந்தது.

ஒரு பெரிய நகரத்தில் முனிசிபல் சேர்மன் ஆகப் பதவி வகித்த நாடார் ஒருவர் ஓய்வு பெற்று ஏரலில் வசித்தார். சேர்மன் நாடார் என மதிப்புப் பெற்றிருந்த அவர் ஜனங்களுக்கு நன்மைகள் செய்து கொண்டிருந்தார். குறி சொல்லுவது போல் அவர் கூறியவை சிலருக்கு பலித்து வந்ததாகச் சொல்வார்கள். அவர் இறந்த பிறகு அவர் உடல் ஒரு தோட்டத்தில் சமாதிவைக்கப்பட்டது. மக்கள் பக்தியுடன் அங்கு சென்று வணங்கினார்கள். அவர்கள் வேண்டிக்கொள்வது வேண்டியவாறு நடந்தது என்றும், அநேகருக்கு நோய் நொடிகள் தீர்ந்தன என்றும் பேச்சு பரவியது. மக்களின் நம்பிக்கை வளர்ந்தது.

நாளாக ஆக சேர்மன் சமாதி, சேர்மன் கோயில் என்று அந்தஸ்தைப் பெற்றது. சமாதி பட்டாடைகளால் அலங்கரிக்கப்பட்டும், விபூதி குங்குமம் பூசப்பட்டும், நம்பிக்கை கொண்ட மக்களால் போற்றி வழிபடப்பட்டது. விசேஷ திருநாள்களும் சிறப்புப் பூஜைகளும் ஏற்பட்டன. சேர்மன் இறந்த நாள் குருபூசை தினமாகத் தடபுடல் படுத்தப்பட்டது. ஆண்டு தோறும் அந்த நாள் திருவிழாக் கோலாகலத்தோடு கொண்டாடப் பெற்றது.

அப்பா எங்கள் எல்லோரையும் அப்படிப்பட்ட ஆண்டுவிழா நாளில் சேர்மன் கோயிலுக்கு அழைத்துப் போனார். கூட்டம் அதிகம் தான். வழக்கமான கடைகள் மிகுதியாகக் காணப்பட்டன.

திருச்செந்தூர் கோயிலுக்கும் ஒருமுறை எங்களை அழைத்துப் போனார் அப்பா. தம்பிக்கு முடி இறக்கி, காது குத்துகிற விசேடத்தை நடத்துவதற்காக. அவனுக்கு மூன்று வயது நிறைந்திருந்த சமயம்.

கோயிலைச் சார்ந்து 'கட்டளை அய்யர்'கள் என்று சிலர் வாழ்க்கை நடத்தினார்கள். அவர்களில் ஒவ்வொருவர் ஒவ்வொரு ஊருக்குப் போய் முக்கிய குடும்பங்களை அணுகி, திருச்செந்தூர் கோயிலில் மாதாமாதம் உங்கள் பெயரால் அர்ச்சனை நடத்தி பிரசாதம் அனுப்புவோம்; நீங்கள் திருச்செந்தூர் வருகிற போது உங்களுக்கு தங்கும் வசதிகள் ஏற்பாடு செய்து, உங்களை சன்னிதிக்கு அழைத்துப் போய் சவுகரியமாக சாமி தரிசனம் பண்ண உடனிருந்து உதவுவோம் என்று கூறி, நெல் அரிசி பணம் என்று வாங்கிச் செல்வார்கள். மாதம் தோறும் தபாலில் 'இலைவிபூதி பிரசாதம்' அனுப்பிவைப்பார்கள். அவர்கள் வசூலுக்கு வருகிற போது கட்டுகட்டாக இலைவிபூதி அளிப்பார்கள்.

எங்கள் வீட்டுக்கும் அப்படி ஒரு 'கட்டளை அய்யர்' இருந்தார். முக்காணி அய்யர். திருச்செந்தூர் கோயிலில் முக்காணி ஊரைச் சேர்ந்த பிராமணர்கள் தான் அதிகம் பணிவிடை செய்து, பூஜை பண்ணிக் கொண்டிருந்தார்கள். முன்குடுமி வளர்த்து தலையில் முன்னே முடிச்சு போட்டு வைத்திருப்பார்கள்.

நாங்கள் போனபோது திருச்செந்தூரில் கட்டளை அய்யர் அவர் வீட்டிலேயே தங்குவதற்கான வசதிகள் செய்து தந்தார். அப்போது திருச்செந்தூர் சாதாரண கிராமமாகத் தான் இருந்தது. இப்போதும் ஊர் விசேஷமாக வளர்ந்து விடவில்லை. கோயிலைச் சுற்றிலும் நவீன வளர்ச்சிகள் அதிகம் ஏற்பட்டுள்ளன.

அந்நாள்களில் (1920களில்) கோயில் இயற்கைச்சூழலோடு எழிலுற விளங்கியது. சுற்றுப் பிரகார மண்டபங்கள், கல்தூண்கள், காங்கிரீட் தளங்கள் எல்லாம் கிடையா. தங்கும் விடுதிகள், லாட்ஜுகள் இல்லவே இல்லை. 'நாழிக் கிணறு' மணல் பகுதியில், வெட்டவெளியில் தனித்து இருந்தது. 'வள்ளி ஒளிந்த குகை' என்பது அதன் இயற்கைத் தன்மையோடு - செயற்கைக் கட்டுமானங்கள் இல்லாமல் - பயங்கரச் சூழ்நிலை கொண்டிருந்தது. அதற்குப் போவதற்கு அலையாடும் கடல் பரப்பில் நடந்து கடந்தாக வேண்டும். அலைகள் எழுந்து வந்து காலில் மோதித் திரும்பும். மணல் காலை அரிக்கும்.

கால ஓட்டத்தில் எல்லாம் மறைந்து போயின. சுற்றுலாப் பயணிகளின் வசதி கருதி கான்க்ரீட் தளம், கல்தூண்கள், மண்டபங்கள் எங்கெங்கும் ஆக்கிரமித்து விட்டன. 'நாழிக் கிணறு' அதன் தனித் தன்மையை, சிறப்பை, இழந்துவிட்டது. கதவு - பூட்டுத்திறப்பு, படி

இறங்கி உள்ளே போகத் தனிக்கட்டணம், வெளியிலேயே குளியலறை. குழாய் மூலம் கிணற்றுத் தண்ணீர் மேலே வர ஏற்பாடுகள் என்று நாகரிகப்படுத்தப் பெற்றுவிட்டன.

அந்நாள்களில் மணல் மேடுகள் தான் எங்கெங்கும் பரந்து காணப் பட்டன. இப்போது கட்டிடங்களும் ஜனப்பெருக்கமும் நெருக்கடியும் தான் மிகுந்து காணப்படுகின்றன.

ஒருசமயம் நவதிருப்பதி தரிசனத்துக்கு அப்பா ஏற்பாடு செய்து தந்தார். அவர் வரவில்லை. அம்மா, அண்ணன், தம்பி, நான் நால்வரும் வில்வண்டியில் பயணம் செய்தோம். வண்டிக்காரன் மாடசாமி தான் எங்களுக்குப் பாதுகாப்பு.

ஸ்ரீவைகுண்டம் முதல் பெருங்குளம் கோயில்கள் வரை ஏற்கனவே பார்த்திருந்தோம். எனவே, பெருங்குளத்துக்குப் பிறகு உள்ள கோயில் களுக்குப் போனோம். ஒற்றைத் திருப்பதி தாண்டி, உடைமரங்கள் செறிந்த பாதை வழி வண்டி செல்கையில், திடீரென மழை பெய்யத் தொடங்கியது. கோயிலுக்குச் சிறிது தொலைவு இருந்த போது, மழை வலுத்தது. கல்மழையாக அடர்ந்தது. ஐஸ் கட்டிகள் சிறு கோலி குண்டுகள் அளவில் வானிலிருந்து மழைநீரோடு கலந்து வந்து சாடின. வண்டிக் கூண்டில் பெருத்த ஓசை எழ மழை பெய்தது.

வண்டிக்காரன் 'ஆலங்கட்டி - ஆலங்கட்டி' என்று சொல்லி, குளிர்ந்த வெண்ணிறப் பனிக்கட்டிகளைப் பிடித்து எங்களுக்குத் தந்து கொண்டிருந்தான். வண்டியினுள்ளும் ஆலங்கட்டிகள் சாடின. அவற்றைப் பிடித்தெடுத்து வாயில் போட்டால் சிலீரென்றிருந்தது. குளிரால் பற்கள் கிட்டித்தன.

மாடுகள் முன்னேறத் திணறின. நல்லவேளையாக, கோயில் மண்டபம் வந்து சேர்ந்தது. அவசரம் அவசரமாக வண்டியிலிருந்து இறங்கி நாங்கள் வேகமாக ஓடி மண்டபத்தை அடைந்தோம். வண்டிக்காரன் மாடுகளை அவிழ்த்து மண்டபத்தினுள் கொண்டு சேர்த்தான்.

சிறிது நேரம் மழை பலமாகப் பெய்துவிட்டு, வேகம் குறைந்து, படிப்படியாக மென்தூறலாக மாறியது. விரைவில் அதுவும் ஓய்ந்தது.

நாங்கள் அந்தக் கோயிலைக் கும்பிட்டுவிட்டு, வண்டிப் பயணத்தைத்

தொடர்ந்தோம். முடிவில் ஆழ்வார்திருநகரிக் கோயிலை அடைந்து சாமி தரிசனம் செய்து மகிழ்ந்தோம்.

நான் முதன்முதலாக அனுபவித்த, கண்டறிந்த, அந்த ஆலங்கட்டி மழைக்குப் பிறகு அது அளவு பெரிய பெரிய கட்டிகள் விழும் மழையைக் கண்டதேயில்லை. பிற்காலத்தில் வெவ்வேறு ஊர்களில் இருந்த போது, அபூர்வமாகச் சிலவேளைகளில் மழைநீரோடு சிறுசிறு ஐஸ்கட்டிகள் கலந்து விழுவதைப் பார்க்க நேர்ந்தது உண்டு. அவை மிளகு பருமன், மிஞ்சிப் போனால் சுண்டைக் காய் அளவு பெரிதாகவே இருந்தன. கைகளில் பிடிக்கும் போதே கரைந்து போயின. நவதிருப்பதி யாத்திரையின் போது பெய்த மழையோடு சேர்ந்து விழுந்த பெரிய கட்டிகள் மாதிரி - கையில் பிடித்து வாயில் போட்டு சிறிது நேரம் வைத்திருக்கக் கூடிய அளவு பெரிதாக - அப்புறம் வரவேயில்லை.

ஒரு தடவை ஸ்ரீவைகுண்டம் போயிருந்த போது, ஊர் பரபரப்பு பெற்றிருந்தது. மகாத்மா காந்தி வருகிறார் என்று மக்கள் ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள்.

காந்திஜி இந்திய அரசியலில் முனைந்து, விடுதலைப் போராட்ட இயக்கத்துக்குத் தலைமை ஏற்று மும்முரமாகச் செயலாற்றிக் கொண்டிருந்த ஆரம்பகாலம். மக்களிடையே தேசபக்தியையும் விடுதலைப் போராட்ட உணர்வையும் பரப்புவதற்காக நாடு நெடுகிலும் சுற்றுப் பயணம் மேற்கொண்டிருந்தார் அவர். தமிழ் நாட்டுக்கு முதன் முறையாக வருகை தந்த சமயம். திருநெல்வேலி ஜில்லாவில் சுற்றிவந்த காந்திஜி ஸ்ரீவைகுண்டத்துக்கும் வந்தார்.

முற்பகல் நேரம். கடைவீதியில் ஒரு வீட்டின் உயர்ந்த திண்ணை மேல் நின்று பலரும் காந்தியை தரிசிக்கக் காத்திருந்தார்கள். அப்பா வுடன் அண்ணனும் நானும் நின்றோம். எங்கும் ஜனக்கூட்டம்.

கதர் ஆடையும் 'காந்திக்குல்லா'வும் அணிந்த தொண்டர்கள் மூவர்ணக் கதர்கொடியை உயர்த்திப் பிடித்தவாறு முன்வர, திறந்த காரில் காந்திஜீ அமர்ந்திருந்தார். அவருக்கு இருபக்கத்திலும் இரண்டு பேர் இருந்தார்கள். மகாத்மா காந்திக்கு ஜே என்ற கோஷத்துடன் கூட்டம் ஊர்வலமாக நகர்ந்து சென்றது.

அதோ காரில் நடுவில் இருப்பவர் தான் காந்தி என்று அப்பா எங்களுக்குக் காட்டினார். காந்தியை பார்க்க முடிந்தது. முன்னும்

பின்னும் தொண்டர்கள் சூழ சூழ கார் நகர்ந்துவிட்டது. காந்தியை பார்த்தேன் என்று சொல்ல முடிந்ததே தவிர, அவர் முகமும் உருவமும் என் மனசில் நன்கு பதிவாகவில்லை. பிறகு படங்கள் மூலம் தான் காந்திஜீயை நன்றாகத் தெரிந்து கொள்ள முடிந்தது.

இவ்வாறு நாள்கள் இனிமையாகப் போய்க்கொண்டிருந்தன. பள்ளிக்கூட வாழ்க்கை விசேஷ நிகழ்வுகளின்றி சாதாரணமாக அமைந்திருந்தது. பெருங்குளம் பள்ளிக்கூடத்தில் இரண்டாவது, மூன்றாவது வகுப்புகளில் படித்துத் தேர்ந்தேன்.

இரண்டாவது வகுப்பில் ஞானசம்பந்தம் என்பவர் வாத்தியாராகப் பாடம் கற்பித்தார். நல்ல மனிதர். அவர் பேசுகிற போது வாயின் இரண்டு பக்கங்களிலும் எச்சில் நுரைத்து நிற்கும். அதனால் பெரிய வகுப்புப் பையன்கள் அவரை 'சாளவாய் ஞானசம்பந்தம்' என்று குறிப்பிடுவது வழக்கம். சிலநாள்களில் அவர் சட்டை அணியாமல், பெரிய வெள்ளைத் துண்டை உடம்பில் போர்த்தியபடி வகுப்புக்கு வருவார்.

மூன்றாம் வகுப்பு வாத்தியார் முறப்பநாடு ஊர்காரர். சண்முக சுந்தரம் என்று பெயர். அவர் காகிதத்திலும், அட்டைகளிலும் படங்கள் வரைவார். மாயக்கூத்தன், கிளி, மயில் என்று சித்திரங்கள் தீட்டி, பல வர்ணங்கள் பூசி, பிள்ளைகளுக்குக் கொடுப்பார். அதனால் நீண்ட அட்டைகளை அவரிடம் கொடுத்து, படம் வரைந்து தரும்படி பையன்கள் கெஞ்சுவார்கள். அந்த வகுப்பில் இரண்டு பிராமணப் பெண்களும் படித்தார்கள்.

அச்சிறுமிகள் வாத்தியாரிடம் சகஜமாகப் பேசிப் பழகினார்கள். அவர்களுக்கு அவர் அதிகமான படங்கள் வரைந்து தந்தார். அவரது ஊர் முறப்பநாடு என்பதனால் ஒரு பெண் கேலியாக, 'வல்லநாடு முறப்பநாடு, வாழவைத்த தோப்பு நாடு' என்று நீட்டி நீட்டிச் சொன்னாள்.

அவர் பதிலுக்கு 'பிச்சை எடுத்தான் பெருங்குளம்' என்று வசையாகச் சொன்னார்.

'நீங்க பெருங்குளத்திலே தானே வேலை பார்க்கறீங்க' என்று கூறி, அந்தப் பெண் மூஞ்சியை சுழித்துப் பழிப்புகாட்டியது. அவர் சிரித்தார். கோபிக்கவில்லை.

தலைமை ஆசிரியர் ஒரு ஐயங்கார். அவரும் கோபித்து, கண்டிப்புகள் எதுவும் பண்ணுவதில்லை. நல்ல மனிதர்.

ஒருசமயம் 'அம்மை குத்துற இன்ஸ்பெக்டர்' திடீரென்று பள்ளிக்கு வந்து விட்டார். எல்லாப் பிள்ளைகளுக்கும் அம்மை தடுப்பு ஊசி குத்த வேண்டும் என்று சொன்னார். அவர் தலைமை ஆசிரியரிடம் பேசிக் கொண்டிருந்தார். அப்போது மணி பகல் 12 'சாப்பாட்டு மணி' அடிப்பதற்கு இன்னும் அரைமணிநேரம் இருந்தது.

ஆனாலும், அம்மை ஊசி குத்திக்கொள்வதற்கு பையன்கள் பயந்தார்கள் என்று புரிந்து கொண்ட ஒரு மாணவன் பள்ளிவிடும் அறிவிப்பு மணியை ஓங்கி அடித்தான். மணி ஓசை எழுந்ததும் பையன்கள் அவசரம் அவசரமாக வெளியேறி அவரவர் வீடுகள் நோக்கி ஓடினார்கள்.

பிற்பகல் வகுப்புகளுக்கு அதிகம் பிள்ளைகள் வரவில்லை. நானும் வீட்டிலேயே தங்கிவிட்டேன். பள்ளியில் காத்திருந்த சுகாதார அதிகாரி, வகுப்புக்கு வந்த குறைவான பிள்ளைகளுக்கு மட்டும் ஊசி குத்தி விட்டுப் போனார். இதை மறுநாள் தெரிந்து கொள்ள முடிந்தது.

பள்ளி விடும் நேரம் வருவதற்கு முன்னரே மணிஅடித்து எல்லோரையும் ஓடச் செய்த மாணவனையோ, வீட்டுக்கு ஓடிவிட்டு பிற்பகல் வகுப்புக்கு வராமல் இருந்துவிட்ட பிள்ளைகளையோ தலைமை ஆசிரியர் தண்டிக்கவில்லை. ஊசி குத்துவதிலிருந்து தப்பி விட்டீர்கள், இல்லையா! அம்மை தடுப்புக்கு ஊசிகுத்திக்கொள்வது நல்லது; நோய் வராமல் தடுக்கும் முன்னேற்பாடு அது என்று நல்லுரை கூறினார் அவர்.

சிவன் கோயில் தெருவில் நாங்கள் வசித்த வீடு தனித்திருந்தது. அதன் விசாலமான திண்ணையில் அமர்ந்து படிக்கும் போது, வானத்தின் அதிசயங்களை எல்லாம் பார்க்க முடிந்தது. மேல்திசை வானில் சூரியன் அஸ்தமிக்கிற போது தோன்றிய விந்தைக் காட்சிகள், ஒளி பெற்ற மேகத்திரள்கள் முதலியவற்றை வேடிக்கையாகப் பார்த்து நாங்கள் பொழுது போக்குவோம். ஊர்ந்து திரியும் மேகங்கள் கூடியும் பிரிந்தும் வெவ்வேறு மாதிரி இணைந்தும் காட்சி அளிக்கையில், அவை மிருகங்கள் போலவும், மனிதர்கள் போலவும், நாடகத் தோற்றங்கள் போலவும் காணப்பட்டன. அப்படித் தோன்றுவதாக எங்கள் கற்பனை

உருவகப்படுத்தி மகிழ்ச்சி தந்தது. அது நல்ல பொழுது போக்கு ஆக இருந்தது.

நவராத்திரி சமயம் பொம்மை வியாபாரி அழகு அழகான பொம்மைகள் கொண்டு வந்து, கோயில் அருகே, கடைபரப்புவான். நல்ல வியாபாரம் நடக்கும். நாங்கள் முதலில் இரண்டு சிறு பொம்மைகள் வாங்கினோம். அவை போதா என்று சொல்லி, அப்பா பெரிய பொம்மைகள், அழகான பூனை, ஆடு, மான், கிளி, மயில், கிருஷ்ணன் என்று அதிகமாக வாங்கித் தந்தார். எங்கள் வீட்டில் கொலு வைத்ததில்லை. ஆயினும் பொம்மைகள் அதிகம் சேர்ந்தன.

அவை எல்லாம் நீண்டகாலம் வரை பாதுகாக்கப்பட்டன. பின்னர், பல வருடங்களுக்குப் பிறகு, ராஜவல்லிபுரத்தில் வசித்த போது, பொம்மைகளை உறவுக்காரர்களின் குழந்தைகளுக்கு மகிழ்ச்சியுடன் வழங்கினோம்.

அந்தச் சின்ன வயசிலேயே எனக்கு கதைகள் மீது அதிகமான ஆர்வம் ஏற்படுத்தும் சூழல் அமைந்திருந்தது.

அம்மா படிப்பறிவு இல்லாதவள். ஆனாலும் தலைமுறை தலைமுறையாக மக்கள் மத்தியில் சொல்லப்பட்டு வருகிற புராதனமான கதைகளை எல்லாம் அவள் அறிந்துவைத்திருந்தாள். மக்கள் வாழ்வில் உயிருடன் உலாவிய பேய்பிசாசுகள் பற்றிய கதைகள், மூத்தாள் மகளை கொடுமைப்படுத்தும் மாற்றாந்தாயின் செயல்களை, சுவாரசியமாக விவரிக்கும் கதைகள், அப்பாவி மருமகள்களின் செயல்கள் பற்றிய கதைகள், மீனாராசா மகளுக்கு பொண்ணுண்டோ என்று தேடி அலைகிறவர்கள், நாக கன்னிகை பற்றிய கதைகள் - இப்படி நிறையக் கதைகளை அம்மா சொல்வது உண்டு. பிற்காலத்தில் நாட்டார் வழக்கியல், தொன்மக் கதைகள் என்றெல்லாம் பிரித்து ஆய்வு செய்யப் படுவதற்கு உதவிய மக்களின் செவி வழிக்கதைகள் கிராம மக்களிடையே ஜீவித்து வந்தன. கால ஓட்டத்தில் அவை மறக்கப்பட்டு விட்டன. படிப்பறிவு பெற்ற பெண்கள் உயிர்த் துடிப்புள்ள கதைகள் சொல்லும் கலையை கற்றுக் கொள்ளவேயில்லை.

அப்பா வேறு ரகமான கதைகள் சொன்னார். அனுபவம் சார்ந்த கதைகள் அவை. அவருடைய உத்தியோக உலகத்தில் எதிர்ப்பட்ட குற்றவாளிகள், அவர்களை சாகசமாகப் பிடித்த விதம் பற்றி எல்லாம் சொல்லுவார். அத்துடன் கால் திருடன் - அரைத்திருடன் முக்கால்

திருடன் - முழுத் திருடன் கதை, மதனகாமராசன் கதை, சதாரம் கதை போன்ற கதைகளை அவர் சுவையாக விவரிப்பது வழக்கம்.

அப்பாவின் சேவகர்களில் பாலகிருஷ்ண நாயுடு என்று ஒருவர் இருந்தார். அவர் எங்களிடம் பிரியமாகப் பழகினார். அவரும் கதைகள் சொன்னார். அவர் சொல்லிய கதைகள் வேறு ரகமானவை. புராணங் களை ஆதாரமாகக் கொண்ட கதைகள், கடவுள்கள் அவர்களது லீலைகள் பற்றிய கதைகளாக இருந்தன அவை.

பொதுவாக, சமூகத்தில் கதை சொல்லிகள் மிகுதியாகவே இருந்தார்கள். தங்கள் அனுபவங்களையும், மற்றவர்களது அனுபவங் களையும், கண்டது கேட்டது அனைத்தையும், கற்பனை மெருகோடு கலந்து பேசிப் பொழுதுபோக்குவது அவர்களது இயல்பாக இருந்தது. கதைகள் எழுதுகிறவர்கள் அதிகம் தோன்றியிராத காலம் அது. பொழுதுபோக்குவற்கு என்றும், சுவாரசியமான நிகழ்ச்சிகளையும் செய்திகளையும் வம்புகளையும் சேகரித்துத் தருவதற்கென்றும் பத்திரிகைகள் வளர்ந்து பரவாத காலம். சினிமாக்கள் இல்லாத காலம். அது கதை சொல்லிகளின் காலமாக இருந்தது.

எங்கள் வீட்டுக்கு இடைக்காலத்தில் சமையல்காரன் ஒருவன் வந்திருந்தான். திருநெல்வேலிக்காரன். அம்மா, அவளது அண்ணாச்சி சொந்த ஊரான தெற்குக் கார்சேரியில் நோய் கண்டு சிரமப்படுகிறார் என்று கேள்விப்பட்டு, அவரைப் பார்க்கவும் உடனிருந்து உதவவும் அங்கே போயிருந்தாள். எனவே, வீட்டில் ஒரு சமையல் காரனை நியமிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

அவன் இளைஞன் தான். இருபத்தைந்து இருபத்தாறு வயதிருக்கலாம். திருநெல்வேலியில் சைவாள் ஓட்டல்களில் வேலை செய்தும், சில தனியார் வீட்டில் பணிபுரிந்தும் அனுபவப்பட்டவன்; நன்றாக சமைப்பான்; நம்பகமானவன் என்று அப்பாவின் உறவினர் ஒருவர் அவனை கொண்டு வந்து சேர்த்திருந்தார். அவனும் பணிவாக நடந்து கொண்டான். திறமையாக சமையல் வேலைகளை கவனித்து வந்தான். ஆள் பார்ப்பதற்கு நாடக நடிகன் மாதிரி இருந்தான். தலை முடியை - கிராப் தான் - வகிடு எடுத்து வாரிக் கொள்ளாது, மேல்நோக்கி ஸ்டைலாக சீவியிருப்பான். அலைபடிந்த கேசம். பேச்சில் அதிகமாக அளந்து தள்ளுவான். 'கதைவிடுதல்' என்பார்களே, அந்த மாதிரி.

அப்பா இல்லாத வேளைகளில், எங்களிடமும் அங்கு இருக்கக் கூடிய

சேவகரிடமும் அவன் அப்படிப் பேசுவது வழக்கம். தன் வாழ்க்கையில் அப்படி நிகழ்ந்தது, ஒரு முதலாளி வீட்டில் வேலை பார்த்த போது முதலாளி மகள் தன்மீது ஆசைப்பட்டது, ஊரில் ஒரு விதவைப் பெண் தன்னோடு ஓடி வரத் தயாராக இருந்தது போன்ற விவரிப்புகள். எல்லாம் சுத்த அளப்புதான் என்று சேவகர் ஒரு முறை சொன்னார்.

ஏன்? சமையல்காரன் என்றால் இளப்பமா? இப்படி எல்லாம் நடக்காது - நடக்கமுடியாது என்கிறீர்களா? ராசா மகளே ஒரு சமையல் காரனை கல்யாணம் பண்ணிக் கொள்ள நேர்ந்த கதை உங்களுக்குத் தெரியுமா என்று கேட்டு, அவன் அந்தக் கதையை ரசமாகச் சொன்னான்.

ஒரு ராசாவின் அரண்மனையில் ஒருவன் சமையல்காரனாக வேலை பார்த்து வந்தான். ராசா, ராணி, அவர்களுடைய ஒரே மகள். மூன்று பேர் தான் ராசா மகள் எப்பவும் அடுப்படியை சுத்திச் சுத்தி வருவாள். அவனிடம் பேசிக் கொண்டிருப்பதில் அவளுக்கு ஒரு சந்தோஷம். ஒருநாள் அவன் குளிப்பதற்காக குளத்துக்குப் போனான். அவன் திரும்பி வருவதற்கு ரொம்ப நேரம் ஆகியது. அவன் வந்ததும், ஏன் இவ்வளவு நேரம் என்று ராசா மகள் கேட்டாள். குளத்தங்கரை மண்டபத்திலே ஒரு முனிவர் இருந்தார். அவருக்கு முன்னாலேயும் சுத்திவரவும் பச்சிலைகள் மாதிரி இலைகள் குவியல் குவியலாகக் கிடந்தன. அவற்றில் இருந்து அவர், ஒரு ஒழுங்கு முறையில்லாமல், ஏதேதோ இலையை எடுத்து, இரண்டு இரண்டாகச் சேர்த்து கட்டிப் போட்டபடி இருந்தார். எனக்கு அது வேடிக்கையாகப் பட்டது. அதையே பார்த்துக்கிட்டு நின்றதிலே நேரமானதே தெரியலே என்று சொன்னான்.

ஆச்சர்யமா இருக்குதே! அவரு ஏன் அப்படி ரெண்டு ரெண்டு இலையா சேர்த்துக் கட்டிப் போட்டுக்கிட்டு இருந்தாரு? அவரு ஏன் அப்படிச் செய்றாருன்னு நீ கேக்கலியா என்று ராசாமகள் விசாரித்தாள்.

கேட்காமல் இருப்பேனா? கேட்டேன். நான் விதி தேவதை. ஊரிலே உலகத்திலே, மனிசங்களிலே ஆணுக பொண்ணுகளிலே யாருக்கும் யாருக்கும் கலியாணம் நடக்கணுமின்னு முடிச்சு போட்டு வைக்கிறேன். இதுபடி தான் நடக்கும் என்று அவரு சொன்னாரு என்று சமையல் காரன் பதில் அளித்தான். அவரு பொருத்தம் பாராமல் எப்படி எப்படியோ, கைக்கு வந்தபடி, அவரு மனம் போன போக்கிலே ஜோடி ஜோடியா சேர்த்துக் கட்டிவைக்காரு. அதனாலே தான் மனிசங்க

மத்தியிலே நடக்கிற கல்யாணங்களிலே, ஆண்பெண் ஜோடிகள் எப்படி எப்படியோ அமைந்து போகுது என்றும் அவன் சொன்னான்.

ராசாமகள் சிரித்துக் கொண்டே கேலியாக, உனக்கும் யாருக்கும் முடிச்சுப் போட்டிருக்காராம்? நீ அதைக் கேட்டியா? என்று வினவினாள்.

எனக்கும் உனக்கும் தான் முடிபோட்டிருக்காரு. நம்ம ரெண்டு பேருக்கும் கல்யாணம் நடக்கும் என்று முனிவர் சொன்னார் என்று சமையல்காரன் பதிலளித்தான். சிரித்தான்.

ராசா மகளுக்கு கோபம் பொங்கியது. ஓகோ, உனக்கு இப்படி ஒரு நினைப்பு இருக்குதா? ஆசையைப் பாரேன் என்று கத்தினாள். அவள் ஆத்திரம் தணியவில்லை. அங்கே இருந்த வெண்கல அகப்பையை எடுத்து, அவன் மண்டையில் ஆவேசமாக ஓங்கி அடித்தாள். அது ஆழமாகப் பட்டது. வெட்டுப்பட்ட இடத்திலிருந்து ரத்தம் பெருகி வடிந்தது.

அவள் ஆங்காரமாகக் கூச்சலிட்டாள். போ இனியும் இங்கே நிற்காதே. இந்த ஊரை விட்டே ஓடிப் போயிடு. இல்லைன்னு சொன்னா, ராசா கிட்டே சொல்லி உன்னை சிறையில் அடைக்க வைப்பேன் என்று கத்தினாள்.

அவன் பயந்துபோய் அரண்மனையை விட்டு வெளியேறினான். ஊரை விட்டு, அந்த நாட்டை விட்டே வெளியேறினான். காடா செடியா, மேடா மடுவா, எங்கெங்கோ சுற்றித் திரிந்தான். ஊர் ஊரா, நாடு நாடாக அலைந்தான். அவனுக்கு அதிர்ஷ்டம் காத்திருந்தது.

பக்கத்து தேசம் ஒன்றில், அதன் ராசா செத்துப் போனார். அவருக்கு பிள்ளைகள் இல்லை. பட்டத்துக்கு ஆள் தேடி, அந்தக் காலத்து வழக்கப்படி, ஒரு யானை தும்பிக்கையில் பூமாலையை கொடுத்து, அனுப்பினார்கள். அதன் பின்னாலேயே மந்திரிபிரதானிகள், சேனாதிபதி எல்லோரும் போனார்கள். யானை அங்குமிங்கும் அலைந்தது. ஒரு இடத்துக்கு வந்ததும், அங்கே நின்று கொண்டிருந்த ஒருவன் கழுத்தில் மாலையைப் போட்டது. அவனுக்கு மரியாதை செலுத்துவது போல் யானை தன் தும்பிக்கையை உயர்த்தி வணங்கியது. எல்லோரும் அவனையே அரசனாக ஏற்று, அவனை யானை மீது அமர்த்தி அரண்மனைக்கு அழைத்து வந்தார்கள். முறைப்படி அவனுக்கு முடி சூட்டினார்கள். அவன் ராசாமகளால் விரட்டியடிக்கப்பட்ட பழைய

சமையல்காரன்தான். அதிர்ஷ்டவசத்தாலே அவன் ஒரு தேசத்துக்கு ராசா ஆகிவிட்டான்.

அவன் நல்ல முறையில் அரசாண்டு பெயர் பெற்றான். அவனது கீர்த்தி பல நாடுகளுக்கும் பரவியது. சில வருடங்கள் ஓடிவிட்டன. அவன் முன்பு பணிபுரிந்த தேசத்தின் ராசா அவனுக்கு தன் மகளை மணம் புரிந்து கொடுக்க விரும்பி முயற்சி செய்தார். அவனுக்கும் பழைய ராசாமகளுக்கும் முறைப்படி கல்யாணம் நடந்தது. ராசா ஆகியிருந்த அவன் ஆளே மாறியிருந்தான். ராசாமகள் அவனை அடையாளம் கண்டுகொள்ளவேயில்லை. இருவரும் சந்தோஷமாக வாழ்ந்தார்கள்.

ஒருநாள் அந்த ராசாமகள் கணவனுக்கு தலையில் எண்ணெய் தேய்த்தாள். தலையில் ஆழமான வெட்டுக்காயத்தின் தழும்பை அவள் காண நேரிட்டது. அன்பாக அதை வருடியபடி, இது எந்தப் போரிலே பட்ட காயம் என்று கொஞ்சலாக விசாரித்தாள்.

அவன் புன்முறுவல் பூத்தபடி, அது எந்தப் போரிலும் பட்ட காயமில்லை பெண்ணெ! ஒரு சமயம் நீ கோபப்பட்டு வெண்கல அகப்பையினாலே என் தலைமீது ஓங்கி அடித்தாயே, அப்போபட்ட காயத்தின் தழும்புதான் அது என்றான்.

ராசாமகள் வெட்கித் தலைகுனிந்தாள். அவன் மென்மையாகச் சொன்னான்: விதி வலியது பெண்ணே! முனிவர் வாக்கு பலித்து விட்டது.

இந்தக் கதையை சுவாரசியமாகக் கூறிய எங்கள்வீட்டு சமையல் காரன் சொன்னான்: அது தான், யாருக்கு என்ன நடக்கும் என்று எவருக்கும் தெரியாது. ஒருவர் வாழ்க்கையில் எது வேண்டுமானாலும் நடக்கலாம். எனக்கும் ஒருநாள் அதிர்ஷ்டம் வந்து, எதிர்பாராத வகையிலே நான் பெரும் பணக்காரனாகி விடலாம். இப்ப சமையல் காரனாக இருக்கிறேன். அவ்வளவுதான் என்றான்.

பெரும்பாலான மனிதர்களைப் போலவே அவனும் அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை வைத்து, ஆசைக்கனவுகளை வளர்த்து வந்தான். அவன் எத்தன், ஏமாற்றுக்காரன், திருநெல்வேலியில் மோசடிகள் செய்தவன் என்று அப்பாவுக்கு நம்பகமான ஒரு நபர் மூலம் தெரியவந்தது. அதனால் அப்பா, ஒருநாள், அவன் கணக்கைத் தீர்த்து அவனை வேலையிலிருந்து நீக்கி விட்டார்.

அதற்காக அவன் வருத்தப்படவில்லை. எல்லோரிடமும் சொல்லிக்கொண்டு பெருங்குளம் ஊரைவிட்டு வெளியேறினான். அப்புறம் அவன் என்ன ஆனானோ, தெரியாது.

பெருங்குளத்தில் வசித்த காலத்தில், சாவு பற்றி தெரிந்து கொள்ளும்படியான சந்தர்ப்பங்கள் தொடர்ந்து வாய்த்தன. அவை அம்மாவின் உறவினர்கள் மூலமே கிட்டின.

அம்மாவின் ஊரான தெற்குக் கார்சேரியில், அவளது பிறந்த வீடான கிணற்றங்கரைப் பிள்ளை குடும்பத்தில் சாவு தொடர்ந்து வந்தது. அம்மா குடும்பத்தினர் மூன்று வீடுகளைச் சேர்ந்தவர்கள். பெரிய வீடு, நடு வீடு, சின்ன வீடு எனப் பெயர் பெற்றிருந்த மூன்று வீடுகளும் ஒரே வரிசையில் சேர்ந்தே இருந்தன. அம்மா பெரிய வீட்டின் மூத்த மகள். அவளுக்கு அண்ணாச்சி ஒருவர் இருந்தார். அந்த ஊரின் கிராம முனிசீப் அவர்.

நடுவீட்டு மாமா போலீஸ் இன்ஸ்பெக்டர். சின்ன வீட்டு மாமா வல்லக்குளம் கிராமமுனிசீப். ராஜவல்லிபுரத்தில் வசித்த எங்கள் இரண்டாவது பெரியப்பாவின் மகளான அகிலாண்டம் அவருக்கு வாழ்க்கைப் பட்டிருந்தாள். அவர்களுக்குக் குழந்தை பிறக்கவில்லை.

சின்ன வீட்டுத் தாத்தா, வயது அதிகமானவர், சாகக் கிடந்தார். அம்மாவும் நாங்களும் கார்சேரி போயிருந்தோம்.

தாத்தா நல்ல உயரம். காதுகளில் சிவப்புக்கல் கடுக்கன் அணிந்திருந்தார். மரணப்படுக்கையில் கிடந்த அவரிடம் உறவுக்காரர்கள் ஏதாவது கேட்டு தொந்தரவு செய்து கொண்டிருந்தார்கள். அவருடைய காதுக் கடுக்கன்களை கொடுக்கும்படி பிள்ளைகளை கேட்கும்படி செய்தார்கள். பேரன் என்ற முறையில், கடுக்கன்களைக் கேட்கும்படி என் அண்ணனையும் தூண்டினார்கள்.

அப்படி கேட்கப்பட்ட போது, தாத்தா பதட்டமடைவார். தன் கைகளால் காதுக் கடுக்கன்களைப் பற்றிக் கொண்டு, தரமாட்டேன் - தரமாட்டேன் என்று முனங்குவார்.

பாருங்களேன், சாகிற சமயத்திலும் பொருளாசை அவரை விடவில்லையே என்று பெரியவர்கள் சொல்வார்கள். சாகக் கிடக்கிற மனிதனை இப்படி தொல்லைப்படுத்துவது சரியல்ல என்று யாரும் எண்ணவில்லை.

ஒருநாள் அவர் இறந்து போனார். எல்லோரும் துக்கம் கொண்டாடி

னார்கள். பெண்கள் அழுது ஒப்பாரி வைத்துப் புலம்பினார்கள். நடுவில் எங்கள் அக்கா - இறந்துவிட்டவரின் மருமகள் - அண்ணனையும் என்னையும் அடுப்படிக்கு அழைத்துச் சென்றாள். உடம்பை எடுத்துப் போக இன்னும் நேரமாகும்; அது வரை நீங்க பட்டினி கிடக்கமுடியாது என்று சொல்லி எங்களுக்கு காப்பி கொடுத்தாள். அவளும் குடித்தாள்.

அவள் ஐந்தாம் வகுப்பு வரை படித்திருந்தாள். தொடர்ந்து பக்தி நூல்களைப் படிக்கவும், தேவாரம் திருவாசகம் முதலியவற்றைப் பாடவும் பயிற்சி பெற்று தனது அறிவை வளர்த்துக் கொண்டாள். மாமனார். இறந்து போனதில் அவளுக்கு வருத்தம் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. பிணத்தருகே பெண்கள் அமர்ந்து அழுது புலம்பி ஓலமிட்டுக் கொண்டிருந்தது அவளுக்குப் பிடிக்கவில்லை.

இதெல்லாம் வேண்டாத வேலை. ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ, மாநிலத்தீர் என்று முன்னோர்கள் சொல்லிவைத்திருக்காங்க. என்ன தான் அழுது புலம்பினாலும் செத்தவங்க திரும்ப வரவா போறாங்க? இல்லையா தம்பி என்று அந்த அக்காள் என் அண்ணனிடம் சொன்னாள். அவள் இயல்பு வழக்கத்துக்கு மாறுபட்ட ஒன்றாகவே எனக்குப்பட்டது.

சின்ன வீட்டுத் தாத்தா இறந்து சில மாதங்கள் ஆன பின்னர், பெரிய வீட்டு மாமா படுக்கையில் விழுந்தார். அதை ஒட்டித்தான் அம்மா கார்சேரி போய் தங்கியிருந்தாள்.

முடிவு சீக்கிரம் ஏற்படாது என்று தெரிந்ததாலும், சமையல்காரன் போய் விட்டான் என்று அப்பா சொல்லிவிட்டதாலும், அம்மா பெருங்குளம் வந்து சேர்ந்தாள். சில வாரங்களில் மாமாவின் சாவுச் செய்தி வந்தது.

அம்மா, எங்கள் மூவரையும் கூட்டிக் கொண்டு, வில் வண்டிப் பயணம் செய்து, கார்சேரி அடைந்தாள். வழி நெடுக அழுது அரற்றிய படியே இருந்தாள்.

சாவு வீட்டில் நடைபெறும் சம்பிரதாயச் சடங்குகளை கவனிக்கும் வாய்ப்பு கிடைத்தது. மாமாவுக்கு ஒரே பிள்ளை. ஆண் குழந்தை. மூன்று வயசிருக்கும். குழந்தைக்கும் எப்பவும் ஏதாவது வியாதி தான். தந்தைக்கு கொள்ளிவைப்பதற்காக அதை சுடுகாட்டுக்கு எடுத்துச் சென்றார்கள். மொட்டையடிக்கப் பட்டு, ஓயாது அழுதபடி, காட்சி தந்த சிறு மகவு பரிதாபத்துக்குரியதாகவே பட்டது.

அந்தக் குழந்தையும் அப்புறம் நெடுநாள் உயிரோடிருக்கவில்லை. சாவு அதையும் விழுங்கிவிட்டது.

இந்த விதமாக எனது உணர்வுகளின் விழிப்புக்கும் அறிவு வளர்ச்சிக்கும் பெருங்குளம் பெரிதும் உதவியுள்ளது.

இந்தப் பெருங்குளம் தான் 'பத்மாவதி சரித்திரம்,' 'சத்யானந்தன்' 'கிளாரிந்தா' முதலிய பல நாவல்களையும், 'குசிகர் குட்டிக் கதைகளையும் எழுதிய அ. மாதவய்யாவின் ஊர். இத்தகவலை நான் பிற்காலத்தில் தெரிந்து கொள்ள முடிந்தது.

இந்த ஊர் மாதவய்யா என்பவரும் என்னைப் போல சால்ட் அன்ட் எக்சைஸ் சப்இன்ஸ்பெக்டராக வேலை பார்த்தவர் தான். அவரை எனக்குத் தெரியும். அவர் அந்த வேலையை விட்டுவிட்டார். கதைப் புத்தகங்கள் எழுதிப் பெயர்பெற்றிருக்கிறார். ஒரு பத்திரிகை நடத்தினார். அவர் இப்போது இந்த ஊரில் இல்லை என்று அப்பா சொன்னது உண்டு.

'குசிகர் குட்டிக் கதைகள்' புத்தகத்தின் பழைய பிரதி ஒன்று ராஜவல்லிபுரம் வீட்டில் ரொம்ப காலம் இருந்தது. மாதவய்யா நடத்திய 'பஞ்சாமிர்தம்' பத்திரிகையின் ஒன்றிரண்டு இதழ்களும் இருந்தன. பிறகு அவை அழிந்து போயின.

நான் மூன்றாம் வகுப்பில் தேர்ச்சி பெற்று, நான்காம் வகுப்பு அடைந்தேன். அனைத்துப் புத்தகங்களும் வாங்கப்பட்டு விட்டன. வகுப்புகள் நடக்கத் தொடங்கியிருந்தன. அவ்வேளையில், அப்பாவுக்கு இடமாறுதல் உத்திரவு வந்து சேர்ந்தது.

இம்முறை வெகு தொலைவில் உள்ள ஊருக்கு அப்பா மாற்றப் பட்டிருந்தார். ராமநாதபுரம் ஜில்லாவில் உள்ள தொண்டி என்ற ஊருக்குப் போய் அவர் பணிபுரிய வேண்டும்.

அந்த ஊர் வெகு தொலைவில் இருந்தது. திருநெல்வேலி ஜில்லாவில் கிடைக்கிற வசதிகள் அங்கு இரா. அதனால் அப்பா மட்டும் அங்கே போவது என்றும், நாங்கள் திருநெல்வேலியில் தங்கி படிப்பைத் தொடரவேண்டும் என்றும் அப்பா முடிவு செய்தார். உரிய ஏற்பாடுகள் செய்கிற வரை நாங்கள் ராஜவல்லிபுரத்தில் தங்கியிருக்கலாம் என்று அம்மாவையும் எங்களையும் ஊரில் கொண்டு வந்து சேர்த்தார். 1928ன் நடுவில்.

திருநெல்வேலி போய், அங்கேயே தங்கியிருந்து, பள்ளிக் கூடத்தில் சேர்ந்து படிப்பைத் தொடர்வதற்கு சிறிது காலதாமதம் ஆயிற்று. அதுவரை ராஜவல்லிபுரத்திலேயே சும்மா இருக்க நேர்ந்தது.

அங்கும் ஒரு சாவு நிகழ்வு ஏற்பட்டது. அம்மா வழியில் உறவினரான ஒருவரின் தாய் இறந்துவிட்டாள். எனக்கும் அண்ணனுக்கும் ஆச்சி (பாட்டி) முறை வேண்டும். அவள் உடலை சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்லும்போது, அவளுக்கு பேரன் பேத்தி உறவுள்ளவர்கள் நெய்ப்பந்தம் பிடிக்க வேண்டும் என்று சொன்னார்கள். எங்களையும் சேர்த்து ஒரு பத்துப் பிள்ளைகள் கையில் சிறுசிறு துணிப்பந்தங்கள், நெய்யில் முக்கி எடுக்கப் பட்டவை, தந்தார்கள். அவற்றில் தீ வைத்து, உயர்த்திப் பிடிக்கும்படி ஏற்பாடு செய்தார்கள்.

இறந்து உடலிலிருந்து பிரிந்து சென்ற உயிர் வழி தெரியாமல் இருட்டிலே திண்டாடும் என்றும், அந்த ஆத்மாவுக்கு மோட்சத்துக்குப் போகும் வழியில் வெளிச்சம் படர்வதற்காக பேரன் பேத்திகள் நெய்ப்பந்தம் பிடிக்க வேண்டும் என்றும் பெரியவர்கள் விளக்கம் அளித்தார்கள். தீ பற்றி எரிந்த சிறுசிறு பந்தங்களை உயர்த்திப் பிடித்தபடி நிற்பது சிறுபிள்ளைகளுக்கு நல்ல விளையாட்டாகத் தான் தோன்றியது.

சிறிது நாள்களில் ஒரு கல்யாணமும் நிகழ்ந்தது. எங்கள் இரண்டாவது பெரியப்பாவின் இரண்டாவது மகளுக்கு உள்ளூரிலேயே கிழக்குத் தெருவின் தென்கோடியில் இருந்த அத்தை மகனுக்கு அவளை மணம் முடித்துக் கொடுத்தார்கள்.

அப்படி உள்ளூரிலேயே சம்பந்தம் செய்து கொள்வது சகஜ நிகழ்வாகவே நடந்து வந்தது. தலைமுறை தோறும்.

கல்யாணம் சிறப்பாக நடந்தது. இரவு ஊர்வலத்துக்காக திருநெல் வேலியிலிருந்து 'ஆயான் தகத்து' வரவழைக்கப் பட்டிருந்தது.

'தகத்து' என்பது அழகான சிறு ரதம். தற்காலத்தில் சில கோயில் களில் பிரபலமாக இருக்கிற வெள்ளித் தேர், தங்கத்தேர் போன்று அழகிய சின்ன வடிவம் கொண்டது. முழுவதும் பளபளக்கும் கண்ணாடிச் சில்லுகள் பதிக்கப் பட்டிருக்கும். பாதரசம் பூசப்பட்ட

கண்ணாடிகள். வகை வகையான கலர் கண்ணாடிகளும் உண்டு. பகலில் பார்ப்பதற்கே அது தகத்தகாயமாக மிளிரும். இரவில் காந்த விளக்கு (கியாஸ் லைட்) வெளிச்சத்தில் கண்ணாடிச் சில்லுகளில் ஒளிபட்டு தகதகவென ஒளிரும். அதனாலேயே அதற்கு 'தகத்து' என்று பெயர்.

அந்தத் தேரில் மாப்பிள்ளை பெண் அமர்வதற்கு வசதியான ஆசனங்கள் இருக்கும். அவற்றின் இருபுறமும் உயரமான பொம்மைகள். பெண் வடிவங்கள் கைகளில் மென்மயிரினால் அடர்த்தியாகச் செய்யப்பட்ட 'கவரி'கள் விசிறிகளாகக் கொடுக்கப்பட்டிருக்கும். பொம்மைகள் கையை அசைத்து அசைத்து கவரி கொண்டு வீசி காற்றெழ வைப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கும். ஊர்வலம் நெடுகிலும் பொம்மைகள் கவரி வீசிக் கொண்டிருப்பது காண்போருக்கு இனிய காட்சியாக அமையும். அவற்றின் அருகில் மெழுகுவர்த்தி விளக்குகள் தாங்கிய தீப மங்கையரும் (பொம்மைகள் தான்) காணப்படுவர்.

இந்தத் தகத்தின் உரிமையாளர் திருநெல்வேலியில் வசித்த ஒரு கார்காத்தார். கார்காத்த இனத்தவர்களிடையே பழக்கமான வழக்குச் சொற்களில் 'ஆயான்' என்பதும் ஒன்று. தந்தையைக் குறிப்பது. கிராமங் களில் சமீபகாலம் வரை கூட, சில குடும்பத்தினர் அப்பாவை ஆயான் என்று குறிப்பிடும் வழக்கம் நடைமுறையில் இருந்தது. பெரியப்பாவை பெரியாயான் (பெரிய ஆயான்), என்றும் சித்தப்பாவை சின்னாயான் (சின்ன ஆயான்) எனவும் சொல்வார்கள். தாய்மார்கள் பிள்ளையை கொஞ்சும் போது 'என்னைப் பெத்த ஆயான்!' 'என் செல்ல ஆயான்' என்று அன்பாகச் சொல்வது வழக்கம்.

இதனால் இதர இனத்தவர், கார்காத்த இனத்தைச் சேர்ந்தவர் ஒருவரைக் குறிப்பிட்டுச் சொல்ல 'அவர் ஆயான்' என்று கூறுவதும் வழக்கமாக இருந்தது. அந்த அடிப்படையில், தகத்தை சொந்தமாக வைத்துக்கொண்டு, திருமணவிசேஷங்களுக்குகார்காத்தார் ஒருவர் வாடகைக்கு விட்டு வந்ததால், அது 'ஆயான் தகத்து' என்று பெயர் பெற்றிருந்தது.

அந்தத் தகத்து ராஜவல்லிபுரத்துக்கு வந்தது அதிவிசேஷமாகக் கருதப்பட்டது. மாப்பிள்ளையும் பெண்ணும் தகத்தில் அமர்ந்து ஊர்வலம் வந்தார்கள். முன்னும் பின்னும் பல கியாஸ்லைட்டுகளை ஆள்கள் சுமந்து வர, அந்தப் பேரொளியில் தகத்து அற்புதமாகப் பிரகாசித்தது.

திடீரென்று தகத்தில் சிறு விபத்து தலைகாட்டியது. ஒய்யாரமாகக் கைஅசைத்து கவரி வீசிக்கொண்டிருந்த பொம்மைகள் ஒன்றின் கவரியின் நீளமயிர், அருகிலிருந்த மெழுகுவர்த்தி நெருப்பில் பட்டு குப்பென்று தீப்பிடித்தது. நல்ல வேளையாக, தகத்தின் பக்கத்திலேயே நடந்து வந்து கொண்டிருந்தவர்களில் சிலர் உடனேயே அதை கவனித்து, பதற்றத்துடன் தீ - தீ என்று கூச்சலிட்டார்கள். கூடவே வந்த தகத்துக் காரர் வேகமாகச் செயல்பட்டு தீயை அணைத்தார். அத்துடன் கவரி வீசும் பொம்மையின் கைஇயங்குதலை நிறுத்திவிட்டார்.

அதன் பிறகு ஊர்வலம் அமைதியாக நகர்ந்தது.

வேறு விசேஷங்களின்றி நாள்கள் போய்க் கொண்டிருந்தன. பள்ளியில் சேர்ந்து படிப்பைத் தொடராமல் வீணாகக் காலம் கழிப்பது எனக்குக் கஷ்டமாக இருந்தது. பள்ளிக்கூடம் போகவேண்டும் என்று ஒருநாள் அழலானேன்.

அந்தச் சமயம் வீட்டுக்கு வந்த சித்தப்பா, 'ஏன் இவன் அழுதுகிட்டிருக்கிறான்?' என்று விசாரித்தார்.

அம்மா விஷயத்தை சொன்னாள். அவர் சிரித்தார். 'பரவால்லேயே. புள்ளைகள் பள்ளிக்கூடத்துக்கு போகமாட்டேன்னு அழுவது தான் வழக்கம். இவன் பள்ளிக்கூடத்துக்குப் போகலியே, பள்ளிக்கூடத்திலே என்னை சேர்த்துவிடுன்னு அழுறானே! நல்ல பையன் தான்' என்றார்.

பிறகு, 'திருநெல்வேலிக்குப் போய் பள்ளியில் சேர்கிற வரைக்கும் இவன் நம்ம ஊருப் பள்ளிக் கூடத்துக்குப் போய் வரட்டும். நான் ஸ்கூல் எட்மாஸ்டரிடம் சொல்லி ஏற்பாடு செய்கிறேன்' என்று சித்தப்பா சொன்னார். அப்படியே செய்தார்.

ராஜவல்லிபுரம் பள்ளிக்கூடத்தை நிர்வகித்தவர் அவர் தான். அந்தப் பள்ளியை நிறுவி, அதன் மேனேஜராக அவர் செயலாற்றிக் கொண்டிருந்தார். அதனால் பிள்ளைகள் அவரை 'பெரியஸார்வாள்' என்று குறிப்பிடுவது வழக்கம்.

அது முதல் நான் தினசரி உள்ளூர் பள்ளிக்கூடத்துக்குப் போய் வந்தேன். சங்கரய்யர் என்பவர் தலைமை ஆசிரியராக இருந்தார். நான் வைத்திருந்த நான்காம் வகுப்புப் புத்தகங்களை அவர் பார்வையிட்டார். நம்ம ஸ்கூலுக்கும் இதே புத்தகங்களை பாடப்புத்தகங்களாக வைத்து விடலாம் என்று தீர்மானித்து, அவ்விதமே ஏற்பாடுகள் செய்தார்.

சில வாரங்களிலேயே, அம்மா எதிர்பார்த்த கடிதமும் பணமும் அப்பாவிடமிருந்து வந்து சேர்ந்தன. உடனடியாக திருநெல்வேலி செல்வதற்கான ஆயத்தங்கள் செய்யப்பட்டன.

எங்கள் பெரிய அண்ணன் கல்யாணசுந்தரம், திருநெல்வேலியில் அம்மாச்சி வீட்டில் தங்கிப் படித்துக் கொண்டிருந்தான். அண்ணனுக்கு தாய் மாமன் மூன்று பேர். அவர்களில் ஒருவர் வேறு ஊரில் ஏதோ தொழில் புரிந்து கொண்டிருந்தார். இன்னொருவர், மனைவியோடு, திருநெல்வேலியில் இருந்தார். அவரின் அம்மாவும் கல்யாணமாகாத தம்பியும் அவரோடுதான் வசித்தார்கள்.

சுப்பையா மாமா என்கிற அவர் நல்ல மனிதர். அன்பு உள்ளம் கொண்ட பரோபகாரி. கல்யாணி அண்ணனோடு, வெளியூரிலிருந்த பெரிய மாமாவின் பையன்கள் இரண்டுபேரும் அதே வீட்டில் தங்கி, பள்ளியில் படித்துக் கொண்டிருந்தார்கள்.

அந்த மாமா தான் நாங்கள் திருநெல்வேலி வருவதற்கும், பள்ளியில் சேர்வதற்கும் வேண்டிய உதவிகள் பலவும் செய்தார்.

அம்மாவின் தங்கை வீடும் திருநெல்வேலியில் இருந்தது. அவள் கணவர் காந்திமதிநாத பிள்ளை பெரும் செல்வந்தர். பல்லிக்கோட்டை என்ற ஊரில் அவருக்கு சொத்து அதிகம் இருந்தது. அவர் பல்லி க்கோட்டைப் பிள்ளை என்றே பெயர் பெற்றிருந்தார்.

பல்லிக்கோட்டை என்பது பரலிக் கோட்டை என்பதன் சிதைவாகும். அதை பரலி என்றும் சுருக்கமாகச் சொல்வர். பரலி சு. நெல்லையப்பர் எனும் புகழ்பெற்ற தேசபக்தரும், மகாகவி பாரதியாருக்கு அவர் வாழ்நாளில் பேருதவிகள் செய்தவருமான எழுத்தாளர் - பத்திரிகாசிரியர் அந்த ஊர்க்காரர் தான். அவர் சென்னையில் வசித்தார். 'லோகோபகாரி' என்கிற பத்திரிகையை நடத்தி வந்தார். அந் நாள்களில் மிகுந்த கவனிப்புக்கு உரிய இதழாக அது விளங்கியது.

காந்திமதிநாத பிள்ளை சமூகப் பிரமுகர். சுகவாசி. அவருக்கு முதல் மனைவி மூலம் பிறந்த ஒரு மகள் இருந்தாள். வயதுக்குவந்த பெரியவள். மனைவி இறந்த பிறகு இரண்டாம் தாரமாக, எங்கள் அம்மாவின் தங்கை ஆவுடையம்மாளை மணந்திருந்தார்.

அவள் நோயாளியாகவே வாழ்ந்தாள். அவளுக்கு ஆண் குழந்தைகள் பிறந்தன. ஆனால் பிறந்த ஒவ்வொரு குழந்தையும் நோஞ்சானாகவே

பிறந்தது. கழுத்தில் ஏதோ கோளாறு காரணமாக தலை நேராகவே இராது. இரண்டு, இரண்டரை வயதானாலும் படுக்கையிலேயே தான் வாழ்ந்தது. சீக்கிரமே செத்தும் போயிற்று.

அப்பா வந்து வேறு ஏற்பாடுகள் செய்கிற வரை, நாங்கள் சித்தப்பா வீட்டிலேயே வசிப்பது என்று முடிவாயிற்று. அது விசாலமான பெரிய வீடு. முன் வராந்தா கூட வெகு அகலமானது தான். படிவிட்டு இறங்கினால், சிமின்ட் பூசிய நீண்ட முற்றம். அதன் எதிரே பரப்பு மிகுந்த மண்தரை. ஒரு ஓரத்தில் நெல்லி மரங்களும் கறிவேப்பிலை மரங்களும் நின்றன. வீட்டின் பக்கத்திலேயே பெரிய வாய்க்கால் ஓடியது.

சின்னம்மையும் சித்தப்பாவும் எங்களிடம் பாசமும் பிரியமும் கொண்டு அன்பு காட்டினார்கள். அக்காளும் பிரியமாக இருந்தாள். அந்த வீட்டில் சில மாத காலம் இனிது கழிந்தது.

திருநெல்வேலி மந்திரமூர்த்தி உயர்நிலைப் பள்ளியில் நான்காம் வகுப்பில் நான் சேர்க்கப்பட்டேன். அண்ணன் ஆறாம் வகுப்பு. கல்யாணி அண்ணன் அதே பள்ளியில் ஏழாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தான்.

திருநெல்வேலி டவுன் ரயில் நிலையம் செல்கிற சாலையில் அமைந்திருந்தது அந்தப் பள்ளி. எதிர்புறமும் சுற்றுப்புறங்களிலும் நெல்வயல்கள். வீட்டிலிருந்து சுமார் ஒரு மைல் தூரம் இருந்தது.

நான்காம் வகுப்பு வாத்தியார் ராமசாமி பிள்ளை கல்வி கற்பிப்ப துடன், மாணவர்களுக்கு ஒழுக்கம், இலட்சியம் முதலியன பற்றி அறிவுறுத்துவதிலும் ஆர்வமாக இருந்தார். புத்தகத்தில் உள்ள பாடங்களைக் கற்றுக் கொடுப்பதோடு, நற்கருத்துக்களைக் கூறும் கதைகளை ரசமாகச் சொல்வதிலும் அவர் ஈடுபாடு கொண்டிருந்தார்.

தந்தையின் சொல்லை மீறாத குணம் உடைய மகனான கசபியான்கா கதை - கப்பல் தலைவரான தந்தை ஒரு பயணத்தின் போது மகனையும் உடன் அழைத்துச் சென்றார். ஒருநாள், மகனை பாய்மரத்தின் அருகே நிற்க வைத்து, நீ இங்கேயே நில்லு; நான் கப்பலை சுற்றிப் பார்த்து விட்டு வருவேன். நான் திரும்ப வருகிற வரை நீ நகராமல் இதே இடத்தில் நிற்க வேண்டும் என்று சொல்லிச் சென்றார். சற்று நேரத்தில் எதிரிகளின் கப்பலிலிருந்து வீசப்பட்ட குண்டு தாக்கி, கப்பல் தீப்பற்றிக் கொண்டது. தலைமை மாலுமியும் இறந்து போனார். கப்பலில் இருந்தவர்கள் தப்பிச் செல்வதற்காக ஓடினார்கள். அந்தப் பையனையும் அழைத்தார்கள்.

அவன், அப்பா வரும் வரை நான் இங்கேயே தான் நிற்பேன் என்று சொல்லி அவர்கள் அழைப்பை மறுத்தான். அப்பா செத்துப் போனார்; அவர் வரமாட்டார்; கப்பலில் தீப் பற்றிக் கொண்டது; நீ எங்களுடன் வா என்று சிலர் எவ்வளவோ சொல்லியும், அவன் கேட்கவில்லை. என் அப்பா சொல்லை நான் தட்ட மாட்டேன், என்னை இங்கேயே நிற்கும்படி அவர் சொல்லிப் போயிருக்கிறார் என்றே அவன் சொல்லிக் கொண்டிருந்தான். அவர்கள் உயிர்தப்பிப் பிழைப்பதற்காக அவனை விட்டுவிட்டு ஓடினார்கள். கப்பல் முழுவதும் எரிந்து கடல் நீரினுள் ஆழ்ந்தது. கசபியான்கா கடைசி வரை அந்த இடத்தை விட்டு நகராமல் அங்கேயே நின்று, கப்பலோடு கடலுக்குள் ஆழ்ந்துபோனான்.

பரோபகார குணம் பெற்றிருந்த சர் பிலிப் சிட்னி கதை - அவர் ஒரு ராணுவத் தளபதி. யுத்த களத்தில் அடிபட்டுக் கிடந்தார். தாகம் மிகுதியால் குடிக்கத் தண்ணீர் கேட்டார். வீரன் ஒருவன் சிரமப்பட்டு தண்ணீர் கொண்டு வந்து அவரிடம் தந்தான். அவர் அதை குடிக்கப் போகிற சமயம், தண்ணீர் - தண்ணீர் என்ற ஏக்கக் குரல் அவர் அருகில் கேட்டது. தளபதியின் பார்வை அத் திசையில் சென்றது. அங்கே சாதாரணப் போர்வீரன் ஒருவன் அதிகமான காயம்பட்டு, சாகும் நிலையில் கிடந்தான். அவருக்குத் தண்ணீர் அளிக்கப்படுவதைக் கண்டு, தாகத்தோடு தவித்த அவனும் தண்ணீர் என்று குரல் கொடுத்தான். அவனது நிலையை உணர்ந்த தளபதி, என் தேவையினும் அவன் தேவை பெரிது; தண்ணீரை அவனுக்கே கொடு, அவன் குடிக்கட்டும் என்று கட்டளையிட்டார். தண்ணீர் அந்த வீரனுக்கே அளிக்கப்பட்டது. தளபதி முகமலர்ச்சியோடு அவனை நோக்கினார்.

இத்தகைய கதைகளை நான்காம் வகுப்பு வாத்தியார் விரிவாக எடுத்துச் சொன்னார். சிறுசிறு கதைப் புத்தகங்களைக் கொண்டு வந்து, மாணவர்களில் ஒருவனைக் கூப்பிட்டு, கதைகளை உரக்க வாசிக்கும்படி சொல்வார். நான் அப்படி பலமுறை வாசிக்க நேர்ந்தது.

லட்சுமண பிள்ளை என்ற ஆசிரியர் பூகோளப் பாடம் நடத்த வருவார். அவர் நேர்த்தியாக கோட் - சூட் அணிந்து நாகரிக தோரணை யோடு விளங்குவார். கைக்குட்டையால் தனது ஆடைகளை அடிக்கடி தட்டிக்கொள்வார். நாற்காலியையும் மேஜையையும் தூசியில்லாமல் இருக்க துணியால் தட்டிக் கொண்டேயிருப்பார். மேல்வகுப்புப் பையன்கள் அவருக்கு 'க்ளீனர்' என்று பெயர் வைத்திருந்தார்கள்.

பத்தாம் வகுப்பில் படித்தவர்கள் பெரிய பெரிய - நன்கு வளர்ந்த - பையன்களாக இருந்தார்கள். படிப்பில் காட்டியதை விட, குறும்புகள் செய்வதிலும் கலாட்டா பண்ணுவதிலும் அதிகமான உற்சாகம் காட்டினார்கள். நினைத்தால் பள்ளிக்கு 'மட்டம் போட'த் தயங்க மாட்டார்கள். ஒரு சமயம் பெரிய மாணவன் ஒருவன், பக்கத்தில் நின்ற ஒரு பையனின் புது நோட்டிலிருந்து ஒரு தாளைக் கிழித்தெடுத்தான். 'நான் காலரா கண்டு கஷ்டப்படுகிறேன். அதனால் வகுப்புக்கு வரமுடிய வில்லை. தயவு செய்து எனக்கு லீவு கொடுக்கவும்' என்று 'லீவு லெட்டர்' எழுதிக் கொடுத்தான். ஜாலியாக சைக்கிளில் ஏறிச்சுற்றப் போனான்.

இன்னொரு மாணவனுக்கு டிரில் மாஸ்டரை பிடிக்கவில்லை. பெருமாள் தாஸ் என்பர் டிரில் மாஸ்டராகப் பணியாற்றினார். உடல் பயிற்சி வகுப்பில் அவர் மாணவர்களை 'ஏ பர்மா பிரேதம்' 'அடே சைனாச் சவமே' 'ஏலே ஜப்பான் பொம்மை' என்று திட்டுவார். நன்கு வளர்ந்திருந்த பெரியமாணவனையும் அவர் அவ்விதமே திட்டிக் கொண்டிருந்தார். 'நெட்டிலிங்க மரம் மாதிரி நிற்கிறியே! சைனா பிரேதம் மாதிரி மூஞ்சியை வச்சுக்கிட்டு!' என்று அவனை அவர் வசைபாடினார்.

ஆத்திரம் அடைந்த அந்த மாணவன் மாஸ்டர் மூஞ்சியில் ஓங்கி ஒரு குத்துவிட்டான். ஓடிப் போய், தயாராக நிறுத்தி வைத்திருந்த சைக்கிளில் ஏறி, வேகமாகப் பள்ளியைவிட்டு வெளியே போய்விட்டான். அதற்குப் பிறகு அவன் படிக்கவே வரவில்லை.

அவமானம் அடைந்த டிரில் மாஸ்டரும் வேலையிலிருந்து விலகிக் கொண்டார்.

சித்தப்பா வீட்டில் தங்கியிருந்த நாங்கள் சில மாதங்களிலேயே வேறு வீடு பார்த்து தனியாக வசிக்கப் போய்ச் சேர்ந்தோம். தொண்டி என்ற ஊரில் வேலை பார்ப்பது ஒத்துக் கொள்ளாததால், அப்பா நீண்ட விடுப்பு எடுத்துக் கொண்டு திருநெல்வேலிக்கு வந்துவிட்டார். அங்குள்ள சாப்பாடு சரிப்பட்டு வரவில்லை. சீதோஷ்ண நிலையும் ஒத்துக்கொள்ள வில்லை. அதனால் அப்பாவின் உடம்பில் பெரிய கட்டி தோன்றி தொல்லை கொடுத்தது.

ஏற்கனவே அப்பாவுக்கு ஆஸ்துமா நோய் இருந்தது. தீராத நோய் அது. தொடர்ந்து மருந்துகள் சாப்பிட்டு வந்தார். மூச்சு விடுவது வெகு சிரமமாக இருக்கும்போது 'ஹிம்ராட்ஸ் க்யூர்' எனும் ஒரு பொடியை

சிறு தட்டில் வைத்து, நெருப்பிட்டுக் கொளுத்தி, அதிலிருந்து எழும் புகையை மூக்கினால் உறிஞ்ச வேண்டும் அம் மருந்துப் புகை இதம் அளிக்கும். அதன் மணம் தனிரகமானது. இங்கிலாந்திலிருந்து, அழகிய பச்சைநிற டப்பாவில் அடைக்கப்பட்டு இறக்குமதியாகியது அந்த மருந்துப்பொடி.

திருநெல்வேலி டவுணில், வெள்ளம் தாங்கிப் பிள்ளையார் கோயில் தெருவில், 'மணக் கடப்பிள்ளை வீட்டு வளைவு' என்ற அமைப்பில் இருந்தது நாங்கள் குடியேறிய வீடு. பல வீடுகள் கொண்டது ஒரு வளைவு. ('வளவு' என்று வழக்கில் சொல்லப்படும்) 'நெடுவளவு', 'பெரிய வளவு', 'ஏட்டுப்பிள்ளை வீட்டு வளவு' என்ற ரீதியில், பல அமைப்புகள்.

மணக்கடப் பிள்ளை வீட்டு வளைவில். இரு வரிசை வீடுகள். ஒவ்வொரு வரிசையிலும் பெரியதும் சிறியதுமாக நான்கு வீடுகள். ஆக எட்டு வீடுகள் இருந்தன.

முதல் வீடு சற்றே பெரிதானது. வேணுப் பிள்ளை என்பவர் வசித்தார். வசதியானவர். இரண்டாவது வீட்டில் கோமதிநாயகம் பிள்ளை மனைவியுடன் வசித்தார். குழந்தைகள் இல்லை. அவரது வீட்டை ஒட்டி அவருக்கு சொந்தமான இன்னொரு வீட்டில் நாங்கள் குடிபுகுந்தோம். சுமாரான வீடு.

நான் நான்காவது வகுப்பு படித்து முடிக்கிற வரை நாங்கள் அந்த வீட்டில் தான் வசித்தோம். மாமாவீட்டில் தங்கிப் படித்த கல்யாணி அண்ணனும் எங்களோடு வந்துவிட்டான்.

வீட்டுச் சொந்தக்காரர் பெயர் கோமதிநாயகம் பிள்ளை. அவர் மனைவியின் பெயர் கோமதி அம்மாள்.

அவர்களது திருமணத்துக்கு முன்பு 'பொருத்தம் பார்த்த' போது, பெயர்ப் பொருத்தம் பிரமாதமாக அமைந்திருக்கிறது என்று சோதிடர் சொல்லியிருப்பார். மற்றவர்களும் மகிழ்ந்திருப்பார்கள். ஆனால் திருமணத்துக்குப் பிறகு அந்த அம்மாள் தனது பெயரைத்தானே சொல்ல முடியாத நிலைமை ஏற்பட்டுவிட்டது. சமூக மரபு காரணமாக!

சமூக வழக்கப்படி, திருமணமாகி ஒரு குடும்பத்தின் மருமகளாக வாழ வந்து சேர்கிற பெண், கணவன் மற்றும் மாமனார் மாமியார் மச்சினார் நாத்தனார் முதலிய உறவுக்காரர்களின் பெயர்களை உச்சரிக்கக்கூடாது; அவர்கள் பெயரை உரக்கச் சொல்வது மரியாதைக்

குறைவாகும் என்றொரு விதி கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. அவசர அவசியம் காரணமாகக் கூட அப் பெயர்களை பெண்கள் வாய்விட்டுச் சொல்லக் கூடாது என்ற கட்டுப்பாடு இருந்தது. அதனால், பெயர்களை சொல்ல வேண்டிய சந்தர்ப்பங்களில் பெண்கள் பேசுகிற விதம் வேடிக்கையாகவும் குழப்பம் தருவதாகவும் இருந்தது.

அந்த வீட்டம்மாள் பெயர் கோமதி. அவள் பெயரை யாராவது கேட்கிறபோது, என்பெயர் வந்து அவுக பேரைப் போலத்தான் என்பாள். ஐயா பெயர் என்ன என்று கேட்டால், சங்கரன் கோயில் அம்மன் பேரு என்பாள். உறவினர் எவருடைய பெயராவது சங்கரன் பிள்ளை என்று இருந்துவிட்டால், அவள் தவசுக் கோயில் அம்மன் பேரு தான் அவுக பேரு என்று கூறுவாள்.

சங்கரன்கோயில் தெய்வம் கோமதிஅம்மன். அந்தக் கோயிலில் ஆடித்தபசுத் திருவிழா வெகு பிரசித்தம். எனவே அக்கோயில் தபசுக்கோயில் என்றும் சாதாரண ஜனங்களால் குறிப்பிடப்பட்டு வந்தது.

சுப்பிரமணியன் அல்லது சுப்பையா என்ற பெயரைக் குறிப்பிட முடியாத நிலையில் உள்ள பெண், திருச்செந்தூர் கோயில் சாமி பேரு என்று சொல்வாள்.

இதில் சொல் உச்சரிப்பு சம்பந்தமாகக் கூடக் குழப்பம் ஏற்படுவது உண்டு. குப்புசாமி என்று ஒருவர் பெயர் இருந்தால், அதை சொல்லக் கூடாத நிலையில் இருக்கிற பெண் 'உப்பு' என்று கூட உச்சரிக்க மாட்டாள். லவணம் என்றோ, அல்லது வேறு எதையாவதுசொல்லி உப்பை விளக்கப்படுத்துவாள்.

இவ் வழக்கம் பற்றி பெண்கள் சிலர் பேசிக்கொண்டிருந்த போது, ஒருத்தி தனது சாதுர்யத்தை பெருமையாக எடுத்துக்கூறினாள். அவள் மாமனார் பெயர் பிள்ளைக்கண்ணுப் பிள்ளை. ஆகவே அவள் பிள்ளை என்றும் சொல்லமுடியாது, கண்ணு என்றும் கூறக்கூடாது. அதனால் அவள் சிறுசு, குழந்தை எனக்கூறுவாள். உங்க அக்காளுக்கு குழந்தை பிறந்திருக்கா? என்ன குழந்தை? சிறுசு நல்லாயிருக்குதா? என்று பேசிச் சமாளிப்பாளாம். கண்ணுக்கு பதில் நேத்திரம், பார்வை, விழி என்று குறிப்பிடுவாளாம். கன்று என்பதை ஜனங்கள் கன்னு என உச்சரிப்பது வழக்கம். எனவே, அந்த அம்மாள் கன்று (கன்னு) என்றும் சொல்ல மாட்டாள். அது கண்ணு என்ற பெயர் போல் ஒலிப்பதால். அதுக்கு

மாற்றாக, உங்க மாடு குட்டி போட்டிருக்கா? என்ன குட்டி ஈனியிருக்கு? என்ற தன்மையில் பேசுவாளாம்.

1930களில் நகைச்சுவைக் கதை கட்டுரைகள் எழுதியவர்கள் சமூகத்தில் பெண்களிடையே நிலவிய இந்த வழக்கத்தை பரிகாசத் தொனியோடு எழுதியுள்ளனர். பெண்கள் கல்வியறிவும், உரிமை உணர்வும் பெற்று வளர்ச்சி பெறப்பெற, காலப்போக்கில் இந்தப் பழக்கம் குறைந்து மறைந்து வழக்கில் இல்லாமலே போய்விட்டது. கணவன் மற்றும் மரியாதைக்கு உரிய மூத்தவர்களின் பெயர்களை தாராளமாக உச்சரிக்கும் பழக்கம் நடைமுறைக்கு வந்துவிட்டது.

காலவேகத்தில், நாகரிகமுதிர்ச்சியில், ஆணும் பெண்ணும் சமம் என்ற உரிமையில் கணவனை பெயர் சொல்லி அழைக்கும் மனைவியரும் தோன்றிவிட்டார்கள். எல்லாம் 'வழுவல, கால வகையினானே!'

நாங்கள் திருநெல்வேலியில் வசித்த வருடத்திலேயே, சித்தப்பா மகள் முத்தம்மாள் அக்காளுக்குத் திருமணம் நிகழ்ந்தது. மணமகன் ராஜவல்லி புரத்தை சேர்ந்தவர். எங்களுக்கு மாமா முறை உள்ள ஒரு பெரிய வீட்டுக்காரரின் மூத்தமகன். கல்யாணம் ராஜவல்லிபுரத்தில் நடந்தது. திருநெல்வேலி பெண்வீட்டில் மறுவீடு விசேஷம், கல்யாணம் போலவே, விமரிசையாக நடைபெற்றது. அதில் அம்மா முக்கிய பங்கேற்றுச் செயல் புரிந்தாள்.

விசேஷமாகக் குறிப்பிடத் தகுந்த நிகழ்வுகள் எதுவும் இன்றி எங்கள் திருநெல்வேலி வாசம் முடிவுக்கு வந்தது.

குறிப்பிடத் தக்கது என்று வேணுப்பிள்ளை - நாங்கள் வசித்த வளைவில் முதலாவதாக இருந்த பெரிய விட்டுக்காரர் - சென்னையி லிருந்து வரவழைத்த சுவர்க்கடியாரம் வந்திறங்கியதை சொல்லலாம்.

அந்தக் காலத்தில் அபூர்வமாக சில வீடுகளிலேயே சுவர்க் கடியாரம் இருந்தது. வசதிபடைத்த வேணுப்பிள்ளையும் பெரிய கடியாரம் ஒன்று வாங்க விரும்பினார். பத்திரிகையில் வந்த விளம்பரத்தைப் பார்த்து, சென்னை கம்பெனிக்கு பணம் அனுப்பி ஆர்டர் செய்தார். அந்நாளில் அந்தக் கடியாரத்தின் விலை ஐந்து ரூபாய் தான்.

ஐந்து ரூபாய் என்பதே பெரும் தொகை தான் மிகப் பலருக்கு.

ஒருநாள் பார்சல் வந்து சேர்ந்தது. சாதிக்காப் பெட்டியில் பத்திரமாக வைத்து நன்கு துண்டு துணுக்குத் தாள்களில் பொதிந்து

கடியாரம் அனுப்பப்பட்டிருந்தது. வேணுப்பிள்ளை அதைப் பிரித்து வெளியே எடுப்பதைப் பார்ப்பதற்கு அந்த வளைவில் இருந்தவர்கள் பலரும் வந்து கூடிவிட்டார்கள்.

அவர் எச்சரிக்கை உணர்வோடு, பார்சலைப் பிரித்து, கடியாரத்தை வெளியே எடுத்து, மகிழ்ச்சியும் பெருமையும் பொங்க, எல்லோருக்கும் காட்டினார். சுவரில் நல்ல இடம் பார்த்து ஆணி அடித்து அதை மாட்டினார். புதிய சுவர்க் கடியாரத்தினால் அந்த வீட்டுக்கு தனி மதிப்பு சேர்ந்தது.

வேணுப்பிள்ளை வீட்டுக்கு வாரம் தோறும் 'லோகோபகாரி' இதழ் வந்து கொண்டிருந்தது. பரலி சு. நெல்லையப்பர் அவருக்கு உறவினராக இருக்கலாம். வேணுப்பிள்ளை அதற்கு சந்தா கட்டியிருந்தார். பத்திரிகையை அவர் படித்து விட்டு, எங்களுக்கும் படிக்கத் தருவார். அதன் ஆசிரியர் பரலி நெல்லையப்பரைப் பற்றிப் பெருமையாகச் செல்லுவார்.

எதிர்வரிசையில் இருந்த ஒரு வீட்டில் வசித்த குடும்பத்தின் தலைவர் கார்காத்தார் சங்கத்துடன் தொடர்பு கொண்டவர். சென்னையில் இருந்து வீரபாகு பிள்ளை என்பவர் நடத்திய 'ஒற்றுமை' என்ற இதழுக்கு சந்தா சேகரித்து அனுப்புவதிலும் அவர் ஈடுபட்டிருந்தார். அவர் அப்பாவிடமும் சந்தாப் பணம் வாங்கி, எங்கள் வீட்டுக்கு 'ஒற்றுமை' இதழ் வரும்படி செய்தார்.

இப்படியாக 1929லேயே எனக்கு சிறுபத்திரிகைகளின் அறிமுகம் ஏற்பட்டுவிட்டது.

மந்திரமூர்த்தி உயர்நிலைப் பள்ளியில் வருடத் தேர்வுகள் முடிவுற்றதும், மேல் கொண்டு படிப்பை பாளையங்கோட்டையில் தொடரவேண்டும் என்று அப்பா தீர்மானித்தார்.

எனவே, அம்மா ஒருநாள் பாளையங்கோட்டை போய், அங்கு வாடகைக்கு வசதியான வீட்டைப் பார்த்து முடிவு செய்து வந்தாள். 1929 மே மாதம் குடும்பம் திருநெல்வேலியை விடுத்து பாளையங் கோட்டை சேர்ந்தது.

# ⌘ 9 ⌘

1929 மே முதல் 1936 ஏப்ரல் வரை நாங்கள் பாளையங்கோட்டையில் வசித்தோம்.

இக்காலகட்டத்தில், நாங்கள் அநேகமுறை வீடு மாற்ற நேரிட்டது. முதலில், ரதவீதியை விட்டு விலகியிருந்த ஒரு சிறிய தெருவில் - உச்சினிமாகாளி அம்மன் கோயில் தெரு என்று அதற்குப் பெயர் - அய்யம்பெருமாள் பிள்ளை வீடு என்ற வீட்டில் குடிபுகுந்தோம்.

அது வசதியான தனிவீடு. கீழே பல கட்டுகளும், விசாலமான மாடியும் கொண்டிருந்தது.

அர்ச். சவேரியார் உயர்நிலைப்பள்ளியில் (செயின்ட் சேவியர்ஸ் ஹைஸ் கூலில்) நாங்கள் சேர்க்கப்பட்டோம். நான் ஐந்தாம் வகுப்பிலும், அண்ணன் கோமதிநாயகம் செகண்ட் பாரத்திலும், கல்யாணி அண்ணன் தேர்ட் பாரத்திலும் சேர்ந்து படிக்கலானோம்.

அப்பாவுக்கு நோய்கள் முற்றி தொல்லை கொடுத்துக் கொண்டிருந்த தால், அவர் வேலையிலிருந்து ஓய்வு பெற்று, வீட்டிலேயே இருந்து சிகிச்சைகள் பெற்று வந்தார்.

அப்பா தொண்டிக்கு மாறுதல் பெற்றதுமே, சொந்தமாக இருந்த வண்டியையும் மாடுகளையும் விற்று விட்டார். இப்போது பாளையங் கோட்டையில் வசிக்க வந்ததும், வண்டி மாடு அவசியம் தேவை என்று அவர் கருதினார்.

கொக்கிரகுளத்தில் தொழில் புரிந்து கொண்டிருந்த பாலகிருஷ்ண நாயக்கர் என்ற வைத்தியரிடம் சிகிச்சைக்காக அப்பா அடிக்கடி அங்கே போக வேண்டியிருந்தது. எப்பவாவது அபூர்வமாக நாயக்கர் வைத்தியர் எங்கள் வீட்டுக்கு வந்து மருந்துகள் தருவார். அவர் தனது சொந்த உபயோகத்துக்கென வில்வண்டி வைத்திருந்தார்.

மேலும், பள்ளிக்கூடம் வீட்டிலிருந்து ஒரு மைலுக்கும் அதிகமான தூரத்தில் இருந்தது. காலையில் 9 மணிக்குப் போய், மதியம் பன்னிரண்டரை மணிக்கு சாப்பாட்டுக்கு வரவேண்டும். பிறகு ஒன்றரை மணிக்கு மீண்டும் பள்ளி செல்ல வேண்டும். சாயங்காலம் நாலரை மணிக்கு பள்ளிவிட்டதும் திரும்பி வரவேண்டும்.

இப்படி தினசரி நான்கு முறை நடந்து போய் நடந்து வருவது எங்களுக்கு சிரமமாக இருக்கும்; அதனால் வண்டி இருந்தால் போய் வர வசதியாக இருக்கும் என்று அப்பா கருதினார். ஆகவே, நல்லதொரு வில்வண்டியும், மாடுகளும் வாங்கப்பட்டன.

ராஜவல்லிபுரத்தை சேர்ந்த இசக்கியா பிள்ளை என்பவர், மாதச் சம்பளத்தில், வண்டிக்காரராக அமர்த்தப்பட்டார்.

காலம் நிம்மதியாகப் போய்க்கொண்டிருந்தது. அந்த வருடம் இறுதிப் பரீட்சை முடிந்து, கோடை விடுமுறை வந்ததும், வீடுமாற்றப் பட்டது.

கோபாலசாமி கோயில் கீழரதவீதியை ஒட்டியிருந்த சிறு சந்தினுள் போனால் தென்படக் கூடிய மிகப் பெரிய வீடு கிடைத்தது. ஏட்டு ஜகநாதபிள்ளை வீடு என்று பெயர். முன்பிருந்த வீட்டைவிட அதிகமான அகன்ற அறைகளையும், பெரிய மச்சினையும் பெற்றிருந்தது. கம்பி அளி போட்ட பெரிய வராந்தா இருந்தது. அதற்கு முன்பக்கத்திலும் புறத்திலும் திறந்த வெளி - மண்தரை. அதை ஒட்டி மேடான விசாலமான வெற்றிடம். அது வேறு யாருக்கோ சொந்தமானது. வீட்டில் புழங்குவதற்கும், வெளியே விளையாடுவதற்கும் ஏகப்பட்ட இடம் இருந்தது.

வீட்டை ஒட்டியே மாடுகள் கட்டுவதற்கான தொழுவம் வசதியானது. வண்டி மாடுகள் இரண்டும், ஒரு பசுவும் தொழுவில் கட்டப் பட்டிருந்தன.

அப்பாவின் நோய் குறையவில்லை. வைத்தியச் செலவுகள் அதிகரித்தன. கொக்கிரகுளம் நாயக்கர் வைத்தியரின் சிகிச்சை நின்றுவிட்டது. அப்பாவுக்கு முன்னரே அறிமுகமாகியிருந்த செல்லம் பண்டிதர் என்ற வைத்தியர் வீட்டுக்கு வந்து மருந்துகள் கொடுக்கலானார்.

செல்லம் பண்டிதர் சுவாரசியமான நபர். நாவிதர் இனம். அந்நாள் களில் நாவித இனத்தைச் சேர்ந்தவர்கள் வைத்திய முறைகள் கற்று, பண்டிதர் என்று பெயர் வைத்துக்கொண்டு, மருத்துவத் தொழில் புரிந்து வந்தார்கள். செல்லம் பண்டிதர் அனுபவசாலி. கைராசி வைத்தியர் என்ற பெயரும் பெற்றிருந்தார். எல்லோரிடமும் இயல்பாகப் பேசிப்பழகக் கூடியவர். எங்களிடம் பிரியமாக இருந்தார். வைத்தியத்துடன், அவர்

சோதிடமும் கற்றிருந்தார். மந்திரமும் அவருக்குத் தெரியும். வெற்றிலையில் மைதடவி, மர்மமான விஷயங்களைக் கண்டறிந்து சொல்லும் திறமை பெற்றிருந்தார். புதையல் எங்கே இருக்கிறது, காணாமல் போன மாடு எங்கு நிற்கிறது, திருடு போன பொருள் எவரால் களவாடப் பட்டுள்ளது - அது திரும்பக் கிடைக்குமா கிடைக்காதா என்பன போன்ற சமாச்சாரங்களை 'மை போட்டுப் பார்த்து'ச் சொல்வதையும் அவர் தொழிலாகக் கொண்டிருந்தார். காக்கி நிறத் துணியில் நீண்ட சட்டை அணிந்து, கழுத்தில் 'வல்லாட்டாக' ஒரு லேஞ்சியைத் தொங்கவிட்டு, சிரித்தமுகத்துடன் அவர் காட்சி தந்தார். எடுப்பான மீசை அவர் முகத்துக்கு அழகு சேர்த்தது.

குடும்பத்தில் வரக்கூடிய காய்ச்சல் மற்றும் நோய்களுக்கும் செல்லம் பண்டிதர், கை பார்த்து, மருந்துகள் கொடுப்பார். எல்லாம் செந்தூரப் பொடிகள் தான். தேனில் குழைத்துச் சாப்பிட வேண்டியிருக்கும். அவருக்கு சமூகத்தில் வைத்தியர் என்ற தன்மையில் மதிப்பும் நல்ல பெயரும் ஏற்பட்டிருந்த போதிலும், பெரியவர்கள் சிறியவர்கள் உள்பட அனைவரும் அவரை 'நீ என்றே விளித்துப் பேசுவர்.

அவருக்கு மச்சினன் உறவு உடைய சொர்ணம் பண்டிதர் என்பவரும் வைத்தியர்தான். செல்லம் பண்டிதர் மாதிரி அவர் பெயர் பெற்றிருக்கவில்லை. அவருடைய தொழில் கிராமங்களிலேயே நடந்து வந்தது. அவரும் வயதானவர்தான். அவர் சட்டை அணிவதில்லை. சிட்டித் துண்டை தோளில் மடித்தவாறு திரிவார். அவரையும் அனைவரும் 'நீ என்றே குறிப்பிட்டு வந்தனர்.

அப்பாவின் நோய் எவருடைய மருந்துக்கும் கட்டுப்படவில்லை. பாளையங்கோட்டையிலேயே பிரசித்தி பெற்ற, கைதேர்ந்த மருத்துவர் ஒருவர் இருக்கிறார் என்று சிலர் சொல்லவும், அவரும் வரவழைக்கப் பட்டார். அவரும் நாவிதர் இனப் 'பண்டிதர்'தான். ஆனால், பணக்காரர். வைத்தியத் தொழில் வெற்றிகரமாக நடந்து வந்தது அவருக்கு. சொந்தமாக நேர்த்தியான வில்வண்டியும் அருமையான ஜோடிக்காளைகளும் அவர் வைத்திருந்தார். கோட்டு அணிந்து, மிடுக்கான தோற்றப் பொலிவுடன், வண்டியில் வந்து இறங்குவார். நோயாளியின் நாடி பார்த்து, மருந்துகள் கொடுப்பார். உடனடியாக அவருக்கு உரிய பணத்தை கொடுத்து விடவேண்டும். அவர் வந்து பார்க்கிற ஒவ்வொரு முறையும், நாற்பது ரூபாய் - ஐம்பது ரூபாய் என்று வசூலித்து விடுவார். அக்காலத்தில் அது பெரும் தொகைதான்.

கைபார்த்து, மருந்து கொடுப்பாரே தவிர, அந்தப் பண்டிதர் நோயாளியின் உடல்நிலை எப்படி இருக்கிறது, முன்னேற்றம் கண்டிருக்கிறதா அல்லது சரிவுதானா என்று எதுவும் சொல்லமாட்டார். மருந்து கொடுத்துப் பணத்தை வாங்கிக் கொண்டு, முகத்தில் எவ்வித பாவமும் காட்டாது, வண்டியில் ஏறிப்போய் விடுவார்.

அன்றும் அப்படித் தான் நடந்தது. பண்டித வைத்தியர் வந்தார். கைபிடித்துப் பார்த்தார். மருந்துகள் கொடுத்தார். நாற்பத்தைந்து ரூபாய் பணம் பெற்றுக்கொண்டு அவர் இயல்புப்படி வண்டியை நோக்கி நடந்தார்.

அப்பாவின் உடல் நிலை மோசமாகி வருவதாகக் கருதியவர்கள் - வைத்தியர் வந்த போது அருகில் நின்றவர்கள் - இப்ப எப்படி இருக்கு என்று கேட்டார்கள். அவர் வாய்திறந்து எதுவும் சொல்லாமலே, தலையை ஆட்டிவிட்டு, வண்டியிலேறி அமர்ந்தார். வண்டி வேகமாகச் சென்று மறைந்தது.

வண்டி போய் சிறிது நேரத்திலேயே அப்பாவின் உயிர்பிரிந்தது.

'இழுத்துக்கிட்டிருக்கு. பிழைக்கிறது கஷ்டம் தான்னு இந்த வைத்தியனுக்குத் தெரியாமலா இருக்கும்? வாய் விட்டுச் சொன்னால், பணம் கிடைக்காதேன்னு எண்ணியிருப்பான். சாவு வந்திட்டுதுன்னு தெரிஞ்சிருந்தும், இரக்கமில்லாமல் நாப்பத்தஞ்சு ரூபாய் கேட்டு வாங்கி, கோட்டுப் பாக்கெட்டில் சொருகிக்கிட்டுப் போறானே! இவன் எல்லாம் என்ன மனிசன்!' என்று வயிற்றெரிச்சலோடு புலம்பித் தீர்த்தார், பண்டிதரிடம் நிலைமை எப்படி இருக்கு என்று விசாரித்த உறவினர்.

இப்படியாக அப்பா இறந்து போனார். 1930ஆம் வருடம் ஆகஸ்ட் மாதத்தில் ஒருநாள். அப்போது எனக்கு வயது பத்து நடந்து கொண்டிருந்தது.

ராஜவல்லிபுரத்திலிருந்து பெரியப்பா மற்றும் உறவினர்கள் பலரும் வந்து சேர்ந்தார்கள். செய்ய வேண்டிய முறைப்படி இறுதிச்சடங்குகள் எல்லாம் நடைபெற்றன. பாளையங்கோட்டை நகரிலிருந்து ஒன்றரைமைல் தொலைவிலிருந்தது வெள்ளக்கோயில் தோப்பு எனும் சுடுகாடு. தாமிரவர்ணி ஆற்றின் கரைமீது அது அமைந்திருந்தது.

அப்பாவின் உடல் அங்கு கொண்டு செல்லப்பெற்று, எரித்துச் சாம்பலாக்கப்பட்டது. பதினாறு நாள்களும் கட்டுப்படி செய்ய

வேண்டியன எல்லாம் செய்யப்படட்டும் என்று அம்மா சொல்லி விட்டாள். பதினாறாம் நாள் விசேடம் (கருமாதி விசேஷம்) வெகு சிறப்பாகச் செய்யப்பட்டது.

பெரும்பணம் செலவாயிற்று. 'பணத்தைப் பத்திக் கவலை இல்லை. செய்ய வேண்டிய சடங்கு எதுவும் குறையக் கூடாது. அவுக சம்பாதித்த பணம் தானே. அவுகளுக்குச் செலவாகாமே பணம் இருந்து எதுக்கு?' என்று அம்மா சொல்லிவிட்டாள்.

ஆகவே 'சாவு செலவுகள்' தாராளமாக நடந்தேறின. பிள்ளைமார் குடும்பங்களில் கல்யாணத்துக்கும் சாவுக்கும் எக்கச்சக்கமா செலவு செய்தே, கடன் வாங்கியாவது செலவு பண்ணியே தீரணும் என்று அடம் பிடித்தே, அநேக குடும்பங்கள் நஷ்டப்பட்டு, பிற்காலத்தில் கஷ்டப் பட்டிருக்கு என்று விஷயம் தெரிந்தவர்கள் சொல்வது உண்டு. எங்கள் குடும்பத்தின் கதையும் அதுவே ஆயிற்று.

ஒருவர் இறந்த திதிப்படி மாதந்தோறும் 'மாசியம்' கொடுக்க வேண்டும். வருட முடிவில் 'ஆட்டத் திதி' என்று ஆண்டுத் திவசம் ஆர்ப்பாட்டமாகச் செய்ய வேண்டும். இது வேளாளக் குடும்பங்களின் நம்பிக்கையும் செயல்முறையாகவும் இருந்தது.

ஒவ்வொரு மாதமும் 'பஞ்சாங்க ஐயர்' முன்னதாகவே வந்து, இன்ன கிழமை திதி வருது; மாசியத்துக்கு எல்லாம் ரெடி பண்ணி வையுங்கோ. நான் காலையிலேயே வந்துவிடுவேன் என்று சொல்லிப் போவார்.

எங்கள் குடும்பத்துப் 'பஞ்சாங்க ஐயர்' ஒரு அய்யங்கார். வஞ்சனை இல்லாமல் வளர்ந்த, உருண்டு திரண்ட, உருவம். முதல் நாளே வந்து 'இன்று ஒதுக்கல். நாளை மாசத் திதி' என்று நினைவுபடுத்திச் சென்றார். திதியன்று சிரித்த முகத்தோடு, என்னா, எப்படி இருக்கிறேள் என்று விசாரித்தபடி வந்து அமர்வார்.

அவர் முன் மூன்று தலைவாழை இலைகள் பரப்பப்படும். ஒவ்வொன்றும் இரட்டை இலையாக. அதாவது ஆறு இலைகள். மூன்று இலைகளிலும் தனித்தனியாக காய்கறி வகைகள், பச்சரிசி, அச்சுவெல்லம், நவதானிய வகைகள் என்று தாராளமாகவே படைக்கப்பட்டிருக்கும். அம்மா இதிலெல்லாம் கஞ்சத்தனம் காட்டியதேயில்லை.

அவர் கும்பாவில் மாவை நீரிட்டுப் பிசைந்து, பிண்டங்கள் பிடித்து, மந்திரங்கள் சொல்லி, செய்யவேண்டியவற்றை இப்படி இப்படிச்

செய்யணும் என்று வழிகாட்டுவார். நாங்கள் நால்வரும் முறைப்படி எல்லாம் செய்வோம். தட்சணையாக பணம் வழங்கிக் கொண்டேயிருக்க வேண்டும்.

முடிவில், மாவுப் பிண்டங்கள், தர்ப்பை மலர்கள் முதலியவற்றை அவை வைக்கப்பட்டிருந்த இலையோடு சுருட்டி மடக்கி, கும்பாவில் வைத்து, பெரிய அண்ணனிடம் கொடுப்பார். இதை கொண்டு போய் வாய்க்காலில் கரைத்து விட்டு வா என்று சொல்லி அனுப்புவார். பச்சரிசி மற்றும் பொருள்கள் நிறைந்த மூன்று இலைகளும் அவருக்கு. அரிசி, காய்கறி வகைகள் மற்றும் பொருள்களை எடுத்துச் செல்வதற்காக அவர் தனித்தனிப் பைகள் கொண்டு வந்திருப்பார். முறைப்படி பிரித்து அவற்றை பைகளில் கொட்டி எடுத்துக் கொண்டு, தட்சணைப் பணத்தை பத்திரமாக இடுப்பு வேட்டியில் சொருகிக் கொண்டு, விடைபெற்றுச் செல்வார்.

இப்படியாக வருடம் முழுவதும் அவருக்கு நல்ல வரும்படி. ஆண்டு நிறைவுற்றதும், 'ஆட்டத் திதி' (முதல் ஆண்டுத் திவசம்) வெகு ஆர்ப்பாட்டமாகச் செய்யப்பட்டது. ஊரிலிருந்து பெரியப்பாவும் முக்கியமான சிலரும் வந்திருந்து கவனித்துக் கொண்டார்கள்.

...ணார்பேட்டை (தாமிரவர்ணி) ஆற்றில், பேராய்ச்சி அம்மன் கோயில் துறையை ஒட்டிய தோப்பில் சடங்குகள் முறைப்படி நடைபெற்றன. மூன்று அய்யர்களுக்கு ஏகப்பட்ட சாமான்கள் (பித்தளைத் தம்ளர், குடை, கைத்தடி இப்படி என்னென்னவோ) இலைகளில் படைக்கப்பட்டு, அரிசி பல படி மற்றும் காய்கறி வகைகள், நவதானியம் ஆகியவற்றோடு தானம் வழங்கப்பட்டன.

அந்த ஒரு திவசத்துக்கே பணம் தண்ணீராக வாரி இறைக்கப்பட்டது என்று தான் சொல்லவேண்டும்.

இறந்துபோன ஆத்மா திருப்தி அடைய வேண்டும்; அப்பதான் குடும்பத்துக்கு நலம் விளையும் என்று சொல்லப்பட்டது. அம்மாவுக்கு இதில் எல்லாம் நம்பிக்கை அதிகம். ஆகவே, கணக்குப் பார்க்காமல் செலவு செய்தாள்.

செலவுகளுக்குப் பணத்துக்காக நகைகள் விற்கப்பட்டன. வண்டியும் மாடுகளும் அப்பா இறப்பதற்கு முன்பே விற்பனையாகியிருந்தன. அவ்வப்போது கடன் வாங்க வேண்டிய அவசியமும் ஏற்பட்டது.

அப்பா இறந்த சமயம் எனக்கு வயத பத்து, முதலாவது பாரம் (ஆறாம் வகுப்பு) படித்துக் கொண்டிருந்தேன். அண்ணன் கோமதி நாயகம் மூன்றாவது பாரம். கல்யாணி அண்ணனும் மூன்றாவது பாரம்தான். ஆனால் வேறு பிரிவு (செக்ஷன்.)

சில மாதங்களிலேயே, நமக்கு இனிமேல் இவ்வளவு பெரிய வீடு வேண்டாம். வாடகை ரூபாய் பதினாலு. மாதாமாதம் இப்படி வாடகை ஏன் கொடுக்க வேண்டும்? குறைந்த வாடகை உள்ள வேறு வீடு பார்த்துப் போகலாம் என்று அம்மா முடிவுசெய்தாள்.

பத்து ரூபாய் வாடகையில் ஒரு வீடு கிடைத்தது. கோபாலசாமி கோயில் வடக்கு ரதவீதியிலேயே இருந்தது அது. சுமாரான வசதிகள் கொண்டது. மதுரையாள் வீடு என்று அதற்குப் பெயர். மதுரையிலிருந்து வந்து பாளையங்கோட்டையில் வசித்த ஒரு பெண்ணுக்குச் சொந்தமான வீடு அது. கணவன் வழியில் வந்த சொத்து. ஒரு வளைவு. (காம்பவுண்ட்). மூன்று வீடுகள் இருந்தன.

முதலாவது வீடு சிறியது. அதில் வீட்டுக்காரி வசித்தாள். அவள் விதவை. வெள்ளை வெறேரெனப் பளிச்சிடும் மல் துணிச்சேலை அணிந்திருப்பாள். நடத்தை மோசமானவள் என்று அவள் பெயர் பெற்றிருந்தாள்.

இரண்டாவது வீடு தான் எங்களுக்கு வாடகைக்கு விடப்பட்டிருந்தது. மூன்றாவது வீட்டில் புகையிலைக் கடை வியாபாரியான படப்பகுறிச்சி இசக்கியா பிள்ளையின் குடும்பம் வசித்து. அமைதியான சூழல் தான். எவராலும் யாருக்கும் தொந்தரவு இருந்ததில்லை.

அந்த வீட்டிலும் ஒரு வருடம் தான் வசித்தோம். அதை விடப் பெரிய, வசதியான வீடு, அதே வாடகையில் கிடைத்ததால், நாங்கள் மறுபடியும் வீடு மாறினோம்.

இவ் வீடு கோபாலசாமி கோயில் கீழ ரதவீதியில் இருந்தது. ‘வளைவு சேர்ந்த வீடு’ தான். முதலாவது சிறிய வீட்டில் சாதாரணக் குடும்பம் ஒன்று குடியிருந்தது. இரண்டாவது, நடுவீட்டில், வியாபாரி வைகுண்டம் பிள்ளை, அவர் மனைவி மற்றும் தாயார், திருமண மாகாத தம்பி ஆகிய நாலு பேர் வசித்தார்கள். மூன்றாவது வீடு எங்களுக்குக் கிடைத்தது.

கீழ்ப்பகுதியில் மூன்று கட்டுகள். இடையில், மூன்று வீட்டுக்கும் பொதுவான திறந்தவெளி முற்றம். செங்கல் தரை. எதிரே ஒரு கூடம்.

மேலே வசதியான மச்சு. சில அறைகளைக் கொண்டது. ஆகவே, புழங்குவதற்கு தாராளமான இடம் கொண்டிருந்தது அந்த வீடு. கால ஓட்டத்தில் பல சுவாரசியமான மனிதர்களையும் வேடிக்கை நிகழ்ச்சிகளையும் அறிமுகப்படுத்தக் கூடிய அரங்கமாகவும் அது அமைந்திருந்தது.

நான் 'இரண்டாவது பாரம்' (ஏழாம் வகுப்பு) வந்திருந்தேன். அண்ணன் கோமதிநாயகம் நான்காவது பாரம். கல்யாணி அண்ணன் மூன்றாவது பாரத்தில் தேர்ச்சி பெறவில்லை. அந்த வருடமும் அதே வகுப்பில் தான் படிக்க வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. அதனால் அண்ணன் படிப்பைத் தொடர விரும்பவில்லை. படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்துவிட்டு, வீட்டிலேயே இருந்தான்.

அந்தத் தெருவில் வசித்த பெரிய பையன்கள் சிலர் பெரிய அண்ணனுக்கு சிநேகிதரானார்கள். சிலர் படித்துக் கொண்டிருந்தார்கள். படிக்காமல் வீட்டோடிருந்து வெட்டிப் பொழுது போக்குவோரும் இருந்தனர். எல்லோருமே நன்கு வளர்ந்தவர்கள். வீட்டுக்கு அடங்காத பிள்ளைகள். தெருத் திண்ணைகளில் - எந்த வீட்டுத் திண்ணையானாலும் சரிதான் - அமர்ந்து வம்பளத்து ஜாலியாகப் பொழுதுபோக்குவதில் சுகம் கண்டவர்கள். சீட்டு ஆடுவதிலும் அவர்களுக்கு ஈடுபாடு இருந்தது.

பெரிய அண்ணன் நண்பனாகச் சேர்ந்ததனால், எங்கள் வீட்டுத் திண்ணையும் அவர்களுக்கு பொழுது போக்கும் இடம் ஆயிற்று. மெதுமெதுவாக எங்கள் வீட்டு மாடி அவர்கள் சீட்டாடுவதற்கும் சோம்பிக்கிடப்பதற்கும் சவுகரியமான இடமாக அமைந்தது.

அவர்களில் குற்றாலம் என்றொரு மாணவன். நான்காவது பாரம் படித்துக் கொண்டிருந்தான். தமாஷாகப் பேசியும், தெருவில் போகிறவர்கள் வருகிறவர்களை கிண்டல் பண்ணியும் எல்லோரையும் சிரிக்க வைத்துக் கொண்டிருப்பான். குற்றாலம் பிள்ளை என்று தான் மற்றவர்கள் அவனை குறிப்பிடுவார்கள்.

ஒருநாள் அவன், இன்னிக்கு ராத்திரி ராப்பாடி வேசம் போட்டு எல்லோரையும் எமாற்றலாம் என்று திட்டம் தீட்டினான். நண்பர்கள் அவனுக்கு தூபம் போட்டார்கள்.

ராப்பாடி என்பவன் ராப்பிச்சைக்காரன். சுடலையிலிருந்து (சுடுகாடு) இரவு பன்னிரண்டு மணிக்கு புறப்பட்டு வருவதாகச்

சொல்வார்கள். புரத வண்ணான் என்ற (வண்ணார்களுக்கு உடை வெளுத்து, ஏவல்கள் செய்யும்) மிகத் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவன் தான் ராப்பாடியாக, பாட்டை நீட்டி முழக்கியபடி, பிச்சை எடுக்க வருவது வழக்கம். அவன் முகத்தில் யாரும் விழிக்கக் கூடாது; விழித்தால் கேடு வரும் என்று ஜனங்கள் நம்பினார்கள். அதனால் அவன் பகல் நேரத்தில் வெளியே வருவதில்லை. வரக்கூடாது என்று சமூகக் கட்டுப்பாடு இருந்தது.

இரவில் கூட அவனை யாரும் பார்க்க விரும்புவதில்லை. அவன் தீப்பந்தம் ஒன்றை எரியவிட்டபடி, மணியை அடித்துக் கொண்டு, பயமுறுத்தும் பாடல்களைப் பாடியவாறு தெருவோடு வருவான். அவனோடு துணைக்கு ஒருவன் வருவான். அய்யா... சாமி, அம்மா - தாயே! ராப்பாடிக்கு பிச்சை போடுங்கோ! ராப்பாடி தர்மம் தாயே என்று கூவியபடி அந்த ஆள் வருவான். பெரிய பெட்டி ஒன்றும், சாக்கும் வைத்திருப்பான்.

ஒவ்வொரு வீட்டிலும், ராப்பாடியின் பாட்டுச் சத்தத்தையும் மணியோசையையும் கேட்டதுமே, பெண்கள் எழுந்து ஒரு சொளகில் (சுளகு - முறம்) கொஞ்சம் அரிசி எடுத்து வந்து, தலைவாசல் கதவை சிறிதே திறந்து, தெருப்படியில் அதை வைத்துவிட்டு உள்ளே மறைந்துவிடுவார்கள். ராப்பாடியின் துணை ஆள் வீடுதோறும் வந்து, சொளகில் இருக்கிற அரிசியை பெட்டியில் தட்டிக்கொள்வான். பதிலுக்கு திருநீறு (சாம்பல்) எடுத்து சொளகில் வைத்துவிட்டு நகர்வான். ராப்பாடி இரண்டு வீடுகள் கடந்து சென்றதும், வீட்டுக்காரி சொளகை எடுத்துக் கொண்டு கதவை சாத்தி தாளிட்டுவிட்டு உள்ளே போய் விடுவாள்.

இந்த வழக்கம் இருந்ததனால், எளிதில் அரிசி சேகரித்து விடலாம் என்று குற்றாலம் கூறினான். அவன் ராப்பாடியாகவும், நண்பன் ஒருவன் துணையாள் ஆகவும் செல்வது என்று முடிவாயிற்று.

அதே போல அன்று இரவு பதினோரு மணிக்குமேல் குற்றாலமும் துணைவனும் கிளம்பினார்கள். மற்றும் சில நண்பர்கள் ஒதுங்கி நின்று, நடப்பதை கவனிக்கச் சித்தமானார்கள்.

குற்றாலம் இடுப்பு வேட்டியை அவிழ்த்து உயர்த்தி, லாட சந்நியாசி மாதிரி தூக்கிக்கட்டி, வேட்டியின் முனைகளை கழுத்தைச் சுற்றி நன்றாக முடிச்சுப் போட்டுக்கொண்டான். அந்தத் தெரு அம்மன் கோயில்

பூசாரியிடம் கெஞ்சிக் கேட்டு பெரிதான கைமணி ஒன்றை இரவல் பெற்றிருந்தான். துணைவன் பெரிய பெட்டி வைத்திருந்தான். நமக்கு பெட்டியிலே முக்கால்வாசி அரிசி கிடைத்தாலே போதும். அதை கொட்டிவைக்க சாக்குத் தேவையில்லை. ராப்பாடி பலதெருக்களில் பிச்சை கேட்பதனாலே, அவனுக்கு அரிசி அதிகம் சேரும். அவ்வப்போது பெட்டியிலிருப்பதை கொட்டி வைக்க அவனுக்கு சாக்கு தேவை தான். நமக்கு வேண்டாம் என்று குற்றாலம் தீர்மானித்துச் செயலாற்றினான்.

திருநீற்றைக் குழைத்து நெற்றியில் பட்டை பட்டையாகப் பூசிக் கொண்டு, அதன் மேல் அகலப்பொட்டு ஆகக் குங்குமத்தை அப்பி வைத்தான். இன்னொரு வேட்டி கொண்டு தலை மீது பெரிய முண்டாசு கட்டிக் கொண்டான்.

வேசம் பிரமாதம் என்று நண்பர்கள் பாராட்டினார்கள். துணை ஆளும் தகுந்த வேடம் தரித்து பெட்டியை எடுத்துக் கொண்டான். சிறிதாக ஒரு துணிப்பந்தம் செய்து, எண்ணெயில் முக்கி எடுத்து அதில் தீயைக் கொளுத்தினார்கள். துணைவன் அதையும் பிடித்துக் கொண்டான்.

தெருவின் ஒரு முனையிலிருந்து தொடங்கினார்கள் அவர்கள். குற்றாலம் ராப்பாடி பிச்சைக்காரன் போலவே ஓங்கிய குரலில் பாடியபடி மணியை ஆட்டியவாறு மெதுவாக நடந்தான்.

*சுடுகாடு இடுகாடு சுற்றி வந்தேன்*
*நான்*
*சுடலையிலே நின்று ஆடி வந்தேன்;*
*நான்*
*சூனியங்கள் வைத்திடுவேன்*
*வைத்த சூனியம் எடுத்திடுவேன்*
*நான்*
*புதைச்ச பிள்ளையின் மூளையை*
*உருகிடுவேன்*
*எரியிற பிணத்தின் குடலை*
*எடுத்திடுவேன்*
*நான்*
*இடுகாடு சுடுகாடு சுற்றிவாறேன்!*

இதை திரும்பத் திரும்பப் பாடியவாறு நடந்தான் குற்றாலம்.

துணையாள், அம்மா தாயே, ராப்பாடி பிச்சை போடுங்கோ என்று கத்தினான்.

வீடுகளில் கதவுகள் மெது மெதுவாகத் திறக்கப்பட்டன. ஒருக்களித்த கதவின் இடைவெளி வழியாக, சொளகுகள் தலை காட்டின. கதவுகள் சாத்திக் கொண்டன.

துணைவன் ஒவ்வொரு வீட்டின் வாசல்படியிலும் வைக்கப்பட்ட சொளகில் இருந்த அரிசியை பெட்டியில் தட்டிக் கொண்டு, சொளகில் திருநீறு வைத்து விட்டு நகர்ந்தான்.

இவ்வாறாக இரண்டு பேரும் வெற்றிகரமாக அந்த வீதியில் நடந்து, கணிசமான அளவு அரிசி சேகரம் செய்துவிட்டார்கள்.

அந்தத் தெரு முடிவுற்றதும், இது போதும் என்று குற்றாலம் சொல்லவும், தீப்பந்தம் அணைக்கப்பட்டது. அவரவர் வேசத்தை கலைத்து, வேட்டியை சரியாக உடுத்திக் கொண்டு, வேறு தெரு வழியாக வேகமாக நடந்து சென்றார்கள். ஒரு இடத்தில் இதர நண்பர்களும் வந்து சேர்ந்து கொண்டார்கள்.

இவ்வளவு அரிசி சேர்ந்திட்டுதே! இதை என்ன செய்யலாம் என்று கேட்டான் துணை ஆள்.

கடையிலே கொடுத்து காசு வாங்குவோம். அந்தப் பணத்துக்கு ஏதாவது வாங்கிச் சாப்பிடலாம் என்றான் ஒருவன்.

அதை காலையிலே யோசிக்கலாம். இப்ப அவரவர் வீட்டுக்குப் போவோம். அரிசிப் பெட்டி என்கிட்டேயே இருக்கட்டும் என்று குற்றாலம் சொல்லவும், அனைவரும் அதை ஏற்றுக் கொண்டார்கள்.

மறுநாள் காலையில் குற்றாலம் வந்து, அரிசிப்பெட்டி கல்யாணி வீட்டில் இருக்கட்டும். நல்ல பாதுகாப்பாக இருக்கும். வருகிற ஞாயிற்றுக் கிழமை நாம் எல்லோரும் ஆற்றங்கரைத் தோப்புக்கு 'பிக்னிக்' போவோம். அங்கே போய், சர்க்கரைப் பொங்கல், வெண்பொங்கல் தயாரித்து சாப்பிடுவோம். வடை செய்வதற்கு வேண்டிய சாமான்கள் சேகரிக்க முடிந்தால், வடையும் செய்வோம் என்று கூறினான்.

நல்ல ஐடியா! வனபோஜனம் உல்லாசமான பொழுது போக்காக அமையும் என்று இதர நண்பர்கள் அங்கீகரித்தார்கள்.

ஒவ்வொருவரும் அவரவர் வீட்டிலிருந்து, தேவையான சாமான்

களில் எதுஎதைக் கொண்டு வரமுடியுமோ அதை கொண்டு வரவேண்டும். சர்க்கரை வீட்டில் கிடைக்காது. காசு கொடுத்துக் கடையில் வாங்குவோம். ஒவ்வொருவரும் முடிந்தவரை காசும் தரவேண்டும் என்றும் நண்பர்கள் பேசி முடிவெடுத்தார்கள்.

அப்படியே செய்தும் தீர்த்தார்கள். ஞாயிற்றுக் கிழமை காலையிலேயே எல்லோரும் உரிய சாமான்கள், பாத்திரங்களுடன் கிளம்பினார்கள். என் அண்ணன்கள் இருவரோடு என்னையும் கூட்டிக் கொண்டார்கள்.

வண்ணார்பேட்டை பேராய்ச்சி கோயில் படித்துறைக்குப் போய் அனைவரும் ஆற்றில் நீராடிக் களித்தோம். பிறகு, அருகில் உள்ள மாந்தோப்பில் முகாமிட்டோம். அங்கே கிடந்த கற்கள் அடுப்புக்கு பயன்படுத்தப்பட்டன. விறகுக்கு மரங்களிலிருந்து, குச்சிகளும் காய்ந்த கிளைகளும், தோப்பில் பரவிக்கிடந்த சுள்ளிகளும் உலர்ந்த சருகுகளும் சேகரிக்கப்பட்டன.

குற்றாலமும் மற்றும் இரண்டு பேர்களும் சமையல் வேலையிலும் தேர்ச்சி பெற்றவர்களாக இருந்தார்கள். முதலில் காப்பி தயாரிக்கப் பட்டது. எல்லோரும் பருகி மகிழ்ந்தனர். அனைவரும் ஒத்துழைக்க, பொங்கல், சர்க்கரைப் பொங்கல் தயாராயின. பஜ்ஜி செய்வது தான் சுலபம் என்று தீர்மானித்து, உரிய முறைப்படி வாழைக்காய் பஜ்ஜியும் வெங்காய பஜ்ஜியும் செய்து முடித்தார்கள்.

உரிய நேரத்தில், இலைகள் போட்டு, எல்லோருக்கும் எல்லாம் பரிமாறப்பட்டன. சந்தோஷமாகப் பேசியும், தயாரிப்புகளைப் பாராட்டியும், தங்களைத் தாங்களே மெச்சிப்புகழ்ந்தும் சாப்பிட்டு மகிழ்ந்தனர். அங்கேயே படுத்தும், சீட்டாடியும் பொழுது போக்கினர். மாலையில் உல்லாசமாக வீடுதிரும்பினர்.

இந்த வனபோஜன நிகழ்ச்சி பல நாள்கள் நினைவு கூர்ந்து பேசிப்பொழுது போக்குவதற்கு ஏற்ற வீரசாகச விளையாட்டாக அமைந்துவிட்டது.

குற்றாலம் பிள்ளையும் நண்பர்களும், பள்ளிப் பாடநூல்களைப் படிப்பதைவிட சுவாரசியமான நாவல்கள் படிப்பதில் மிகுந்த ஆர்வம் உடையவர்களாக இருந்தார்கள். இம் மாணவர்களில் ஒருவருக்கு உறவினரான ஒரு அன்பர் பாளையங்கோட்டை முனிசிபல் ஆபீசில்

பணிபுரிந்து கொண்டிருந்தார். அந் நகரசபையில் நல்ல லைபிரரி ஒன்றும் இருந்தது. அதில் தமிழ் நூல்களும் ஆங்கிலக் கதைப் புத்தகங்களும் நிறைந்திருந்தன. அந்த நூலகத்திலிருந்து உறவினர் தமிழ் நாவல்கள் எடுத்து வந்து கொடுத்தார்.

அந்நாள்களில் தமிழ் படிக்கத் தெரிந்தவர்களில் நாவல் வாசிப்பதில் ஈடுபாடு கொண்டவர்கள் படிக்கத் தவறாத புத்தகங்கள் வடுவூர் துரைசுவாமி ஐயங்கார், ஆரணி குப்புசாமி முதலியார், வை.மு. கோதை நாயகி அம்மாள், ஜே. ஆர். ரங்கராஜு ஆகியோர் எழுதிய நாவல்கள் அனைத்தும் நகரசபை நூலகத்தில் இருந்தன. அவை எல்லாவற்றையும், ஒவ்வொன்றாக எடுத்துப் படித்து முடித்திட வேண்டும் என்று நண்பர்கள் தீர்மானித்தார்கள்.

வடுவூர் துரைசுவாமி ஐயங்காரின் துப்பறியும் நாவல்கள் 'கும்ப கோணம் வக்கீல் அல்லது திகம்பரசாமியாரின் துப்பறியும் லீலைகள்' 'திவான் பகதூர் லொடபட சிங்', 'காளிங்க ராயன் கோட்டை ரகசியங்கள்' 'வெண்கலச் சிலை அல்லது கன்னியின் முத்தம்' போன்றவை கதைச் சுவையுடன் விறுவிறுப்பாக அமைந்திருந்தன. வடுவூராரின் ரசமான வர்ணனைகளும் விவரிப்புகளும் படிப்பவர்களுக்கு கிளுகிளுப்பு ஊட்டும்.

ஆகவே நண்பர்கள் நேரம் கிடைத்த போதெல்லாம் நாவல்களை படித்தார்கள். ராத்திரியில் வெகுநேரம் வரையிலும் ஞாயிற்றுக் கிழமைகளில் பகலில் கூடியிருந்தும் தொடர்ந்து படித்தார்கள். புத்தகத்தை சீக்கிரம் படித்து முடிக்க வேண்டும் என்பதற்காக, ஒருவர் உட்கார்ந்து நாவலைப் படிப்பார். மற்றவர்கள் சுவரில் சாய்ந்தபடியும், தரைமீது படுத்தவாறும் கேட்டு ரசிப்பார்கள். சற்று நேரம் சென்றதும் இன்னொருவர் வாசிப்பார். இப்படி முறைவைத்துப் படித்து நாவல் முழுவதையும் விரைவில் முடித்துவிடுவார்கள்.

அவர்கள் இவ்விதம் வாசித்த போது நானும் கதைகேட்டு ரசித்தேன். அவர்கள் படிக்காத வேளைகளில் புத்தகம் சும்மா கிடக்கும். அது போன்ற சமயங்களில் அதை எடுத்துப் படிக்கக் கூடிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இப்படி அந்தக் காலத்துப் பிரபல நாவல்கள் பலவற்றையும் நான் படித்து மகிழ முடிந்தது.

நாவல் படிக்கிற விஷயத்தில் சுவையான சமாச்சாரம் ஒன்றும் கலந்திருந்தது. இரவு நேரங்களில் படிப்பதற்கு விளக்கு வேண்டும்.

அதற்கு அதிகப்படியான மண்ணெண்ணெய் தேவைப்படுமே. அதை சமாளிப்பதற்கு குற்றாலம் பிள்ளை ஒரு வழி கண்டு பிடித்தார்.

அக்காலத்தில் நகரங்களில் கூட மின்சார விளக்குகள் பரவியிருக்க வில்லை. தெருக்களில் முனிசிபல் லாந்தர்கள் விடியவிடிய எரியும். தெருவில் சற்று தூரத்துக்கு ஒன்றாகக் கல் தூண்கள் நிறுத்தப் பட்டிருந்தன. அவற்றின் மீது, சதுர வடிவத்தில், கண்ணாடிச் சுவர்கள் கொண்ட, விசேஷ அமைப்பு உடைய கூண்டினுள் மண்ணெண்ணெய் விளக்குகள் வைக்கப் பட்டிருக்கும். காலையில் முனிசிபாலிட்டி ஆள் ஒருவன் வந்து விளக்குகளை எடுத்துப் போவான். ஆபீசில் அவை துடைத்து சுத்தம் செய்யப்பெற்று, தேவையான அளவு எண்ணெய் ஊற்றி நிரப்பப்படும்.

மாலையில் ஒரு ஆள் விளக்குகளை எடுத்துக் கொண்டு ஏணியோடு வருவான். ஒவ்வொரு கம்பத்திலும் ஏணியைச் சாற்றி ஏறி, கூண்டுக்குள் விளக்கை வைத்து நெருப்பு கொளுத்திவிட்டுப் போவான்.

முக்கியமான இடங்களில், இரண்டு மூன்று வீதிகள் சந்திக்கும் இடங்களில், உயரமான கம்பங்கள் அமைத்து, 'கியாஸ் லைட்'டுகள் தொங்கவிடப்பட்டிருக்கும். அதில் காற்றடைத்து விளக்கேற்றிச் செல்வதற்கு தனியாக ஒரு ஆள் இருந்தான்.

பாளையங்கோட்டை நகரமாயினும் பரபரப்பு இல்லாத ஊர் தான். பகலிலேயே தெருக்களில் ஆள்நடமாட்டம் அதிகம் இராது. இரவு நேரத்தில் ஒன்பது மணிக்குள் ஊர் அடங்கிவிடும். கோபாலசாமி கோயில் வீதிகள் வெறிச்சிட்டுக் கிடக்கும்.

ஆள் நடமாடாத தெருவிலே விளக்கு ஏன் வீணாக எரியுது? அது நமக்கு நாவல் படிக்க உபயோகப் படட்டுமே என்று சொல்லி, குற்றாலம் பிள்ளை தெரு விளக்கு ஒன்றை வீட்டுக்குக் கொண்டு வந்து விடுவார். அதன் வெளிச்சத்தில் நண்பர்கள் நாவல் படிப்பார்கள். படித்தது போதும் என்று தோன்றியதும், குற்றாலம் அந்த விளக்கை எடுத்த இடத்தில் கொண்டுபோய் வைத்து விடுவார்.

'நீதிபதியாகப் பதவி வகித்த முத்துசாமி அய்யர், மாணவப் பருவத்தில் வறுமை காரணமாக, தெருவிளக்கின் கீழ் அமர்ந்து பாடங்களைப் படித்தார். பிற்காலத்தில் அவர் மிக உயர்ந்த நிலையை அடைந்தார் என்று படித்திருக்கிறோம் அல்லவா? நாமும் அவரைப் போலவே தெருவிளக்கில் படிக்கிறோம். ஆனால் ஒரு வித்தியாசம். அய்யர்

தெருவுக்குப் போய் விளக்கடியில் உட்கார்ந்து படித்தார். நாமோ தெருவிளக்கை வீட்டுக்குக் கொண்டு வந்து வைத்துப் படிக்கிறோம். எப்படியானாலும், எங்கே இருந்தாலும், தெருவிளக்கு தெருவிளக்குத் தானே! அதனாலே பிற்காலத்தில் நாமும் உயர்ந்த நிலை அடையலாம்' என்று குற்றாலம் பிள்ளை பெரும்பேச்சுப் பேசுவார்.

இந்த விதமாக இரண்டு வருடங்களில் அதிகமான நாவல்களை படிக்கமுடிந்தது. பள்ளிக்கூடப் பாடங்கள் படித்து, எழுத வேண்டிய 'வீட்டு வேலை' (ஹோம் ஒர்க்கு)களை எழுதி முடித்த பிறகு நான் பலரகமான புத்தகங்களையும் படிப்பதில் ஆர்வம் உடையவனாக இருந்தேன். மேல் வகுப்புத் தமிழ்ப் பாடநூல்கள், துணைப் பாடங்களாக அமையும் கதைப் புத்தங்கள், கல்லூரி மாணவர்கள் படிக்க வேண்டியிருந்த தமிழ் நாடகங்கள் மற்றும் துணை நூல்கள் எல்லாம் எனக்கு படிக்கக் கிடைத்தன. கிடைத்ததை எல்லாம் நான் உற்சாகத்துடன் படித்தேன்.

விளையாட்டில் எனக்கு ஆர்வமோ நாட்டமோ இருந்ததில்லை. மேலும், நான் உயர்நிலைப் பள்ளி மாணவனாக இருந்தபோதும், நன்கு உடல் வளர்த்தி இன்றி, சின்னப் பையன் மாதிரியே தான் இருந்தேன். இருப்பினும், விளையாடும் தெருச் சிறுவர்கள் என்னை வயதில் மூத்திருந்ததால், பெரியபையன் என்று தங்களோடு சேர்த்துக் கொள்ளாது ஒதுக்கினார்கள். பெரியவர்களோ என்னை சின்னப் பையன் என்று கருதி விலக்கினார்கள். நான் நோஞ்சான் ஆகவும், இயல்பால் மிகுந்த கூச்சம் உடையவனாகவும் இருந்தேன். பிறருடன் சேர்ந்து பழகாது தனியாக ஒதுங்கி இருப்பதே எனக்கு வெகுவாகப் பிடித்திருந்தது. அதனால் புத்தகங்களை விடாது படிப்பதே எனக்கு நல்ல பொழுதுபோக்கு ஆயிற்று. புத்தகங்களையே எனது நண்பர்கள் என மதித்தேன்.

'ஆனந்த விகடன்' பத்திரிகை படிக்கக் கிடைத்தது. அண்ணன் கோமதிநாயகத்துடன் படித்த மாணவன் ஒருவன் வீட்டில் விகடன் வாங்கிக் கொண்டிருந்தார்கள். வீட்டில் எல்லோரும் அதைப் படித்து முடித்த பிறகு அந்த நண்பன் அந்த இதழை அண்ணனுக்குப் படிக்கத் தருவதை வழக்கமாக்கிக் கொண்டான். சில சமயம் இரண்டு மூன்று வாரத்திய இதழ்கள் சேர்ந்து கிடைக்கும். அவற்றை படித்து விட்டு நாங்கள் அவற்றை திருப்பிக் கொடுத்துவிடுவோம். இவ்வாறு பல வருடங்கள் நிகழ்ந்தது.

நாங்கள் வசித்த தெருவில் ஒரு வீட்டில் குடியிருந்த ஒருவர் - ரங்கூன் பிள்ளை என்று பெயர் பெற்றிருந்தார் - 'ஆனந்த விகடன்' இதழ்களை ஆரம்ப காலத்திலிருந்து சேகரித்து, வருடவாரியாக 'பைண்டு செய்து' பாதுகாத்து வந்தார். படிப்பதில் எங்களுக்கு இருந்த ஆர்வத்தைக் கண்டு மகிழ்ந்த அவர், விகடன் தொகுதிகளை படிக்கத் தந்தார்.

1930களில், இந்திய தேசிய விடுதலைப் போராட்டம் இயக்க வேகம் பெற்றிருந்தது. நாடு நெடுகிலும் ஊர்வலங்களும், சொற்பொழிவுகளும், ஜவுளிக் கடை மறியல்களும் மும்முரமாக நடந்து வந்தன. மகாத்மா காந்தியின் கட்டளையை ஏற்று வக்கீல்களும் டாக்டர்களும் இதர பல உத்தியோகஸ்தர்களும் அவரவர் வேலைகளை துறந்துவிட்டு, சுதந்திரப் போராட்டத்தில் உற்சாகத்தோடு ஈடுபட்டார்கள். பெண்களும் துணிச்ச லோடு வெளியே வந்து மறியல்களில் கலந்து கொண்டார்கள். மேடை ஏறிப் பேசினார்கள்.

ஊர்வலங்களில் கவி பாரதியாரின் தேசியப் பாடல்கள் உணர்ச்சி வேகத்தோடு பாடப்பட்டன. சாதாரணத் தொழிலாளிகளும், பெட்டிக் கடை வைத்துப் பிழைக்கிறவர்களும், மற்றும் பல தரத்தினரும் பாட்டுப் பாடிக் கொண்டு ஊர்வலமாக வந்து, முடிவில் கோபாலசாமி கோயில் முன்பக்கம் உள்ள மைதானத்தில் நடைபெறும் பொதுக்கூட்டத்தில் கலந்துகொள்வார்கள்.

நானும் சிலசமயம் ஊர்வலத்தில் சிறிது தூரம் கலந்து செல்வேன். பொதுக்கூட்டப் பேச்சுகளைக் கேட்கக் கூடும் ஜனத்திரளுடன் சேர்ந்து கொள்வேன். காந்திக்குல்லாய் அணிந்த தொண்டர்களில் ஒருவர், கூம்பு வடிவத்தில் அமைந்த தகரக் குழாயை வாயருகே பிடித்தபடி உரத்துக் கூச்சலிடுவார்: 'போலோ பாரத் மாதா கி' - என்பார். (சொல்லுங்கள், பாரத மாதாவுக்கு என்பது பொருள்.) 'ஜே' என்று மக்கள் கத்துவார்கள்.

அக்காலத்தில் மேடைப் பேச்சில் பெரும்பெயர் பெற்றிருந்த சோமயாஜுலு, பொ. திரிகூடசுந்தரம் பிள்ளை, போன்றவர்கள் உணர்ச்சிகரமாகப் பேசுவார்கள். சிலசமயம் சென்னையிலிருந்து சிறந்த பேச்சாளர்களும் வருவது உண்டு. சத்தியமூர்த்தி வந்து சொற்பொழிவாற்றியதையும் கேட்டிருக்கிறேன்.

பெரும் தலைவர்கள் வந்து பேசுவதாக இருந்தால், தாமிரவர்ணி ஆற்றங்கரையில், கொக்கிரகுளம் பகுதியில் விரிந்து பரந்து கிடந்த மணல் வெளியில், தைப்பூச மண்டபத்தின் அருகே கூட்டம் ஏற்பாடு செய்யப்

பட்டிருக்கும். அப்படிப்பட்ட கூட்டங்களிலும் என் அண்ணன்கள் அவர்களது நண்பர்களுடன் நானும் கலந்து கொண்டிருக்கிறேன்.

ஒரு வருடம் - 1932 அல்லது 1933ஆக இருக்கலாம் - இலங்கைச் சுற்றுப்பயணத்தை முடித்து விட்டு வந்த பண்டித ஜவகர்லால் நேரு, அவர் மனைவி கமலா நேரு, மகள் இந்திரா ஆகிய மூவரும் தமிழ்நாட்டிலும் சுற்றுப்பயணம் செய்தனர். மூவரும் திருநெல்வேலி வந்தபோது, மாலையில் ஆற்று மணலில் கூட்டம் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. பெரும் ஜனத்திரள் கூடியது. நாங்களும் போயிருந்தோம். நேருஜியையும் அவர் மனைவியையும் மகளையும் நன்கு பார்க்க முடிந்தது.

தினந்தோறும் நாங்கள், சகோதரர்களும் மற்றும் நண்பர்களும் ஒரு குழுவாகச் சேர்ந்து பள்ளிக்கூடம் போவோம். கோபாலசாமி கோயில் ரதவீதியில் நடந்து, தெற்கு பஜார்வழியாகப் போய், மேலும் சில தெருக்களைக் கடந்து செல்ல வேண்டும்.

சுதந்திரப் போராட்டம் தீவிரநிலை அடைந்த காலத்தில், தெற்கு பஜாரில் உள்ள துணிக்கடைகளின் முன்பாகக் காங்கிரஸ் தொண்டர்கள் – ஆண்களும் பெண்களும் – நின்றுகொண்டு அமைதியான முறையில் ('சாத்வீக') மறியல் செய்வார்கள். கடைகளுக்கு துணிவாங்க வருகிறவர்களின் முன்னே நின்று வழிமறித்து, அந்நியத் துணியை வாங்காதீர்கள்! அயல்நாட்டு மில் துணிகளை பகிஷ்கரியுங்கள்! கதர் துணிகளை உபயோகியுங்கள் என்று பணிவுடன் கேட்டுக் கொள்வார்கள். அச்சிட்ட நோட்டீஸ்கள் கொடுப்பார்கள்.

சிலபேர் துணிவாங்காது திரும்பிப் போய்விடுவார்கள். சிலர் துணிந்து, தொண்டர்களை விலக்கிவிட்டு, கடைக்குள் சென்று தங்களுக்குத் தேவையான துணிகளை வாங்கிக்கொண்டு செல்வார்கள். தொண்டர்கள் தங்கள் பணியை தொடர்ந்து நாள் முழுதும் செய்து கொண்டு நிற்பார்கள்.

பள்ளிக்கூடத்துக்கு போகிற போதும், பள்ளிவிட்டு வருகிற போதும் நாங்கள் இக் காட்சிகளை பார்த்தவாறு நடப்போம்.

மறியல் போராட்டம் தொடர்ந்து நடைபெறவும், அரசு பலாத்காரத்தை உபயோகித்து தொண்டர்கள் கலைந்துசொல்வதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டது. போலீசார் தொண்டர்களை

கலைந்து போகும்படி சொல்வார்கள். தொடர்ந்து நின்று மறியல் செய்யும் தொண்டர்களை - ஆணென்றும் பெண் என்றும் பாராது - போலீசார் முரட்டுத்தனமாகத் தடிகொண்டு தாக்கி அடித்து நொறுக்குவார்கள். பிறகு அவர்களை கைது செய்து 'போலீஸ்வேன்'களில் ஏற்றிக் கொண்டு போவார்கள்.

இவற்றை எல்லாம் காண நேர்ந்த மாணவர்கள் உணர்ச்சிவசப்பட்டு தங்களுக்குள் இஷ்டம் போல் பேசியபடி போவார்கள். மிகு உணர்ச்சி வசப்படும் ஒருசிலர் துணிந்து ஏதாவது செய்துவிடுவதும் உண்டு.

அப்படித்தான், அண்ணன் உடன் படித்த நடராஜன் என்கிற மாணவன் திடீரென்று காணாமல் போய்விட்டான். மூன்று, நான்கு நாள்கள் அவன் பள்ளிக்கூடத்துக்கு வரவில்லை. அப்புறம் ஒரு நாள் வந்து நின்றான். தனது வீரசாகசச் செயலை பெருமையாகப் பேசினான்.

தொண்டர்கள் மறியல் செய்வதையும், அடிபடுவதையும், அந்நிலையிலும் அவர்கள் 'மகாத்மா காந்திக்கு ஜே' 'வந்தேமாதரம்' என்று சொல்லிக்கொண்டு அமைதியாக நிற்பதையும் தொடர்ந்து பார்த்த நடராஜன் மிகு உணர்ச்சிவசப்பட்டான். அவனும் மறியல் செய்ய வேண்டும் என்று நினைத்தான். தெற்கு பஜாரிலோ, பாளையங்கோட்டையின் வேறு பகுதியிலோ கடைமுன் நின்று மறியலி ல் ஈடுபட்டால், இதர மாணவர்களும் மற்றும் அவனை தெரிந்தவர்களும் கண்டு கொண்டு தடுக்கக்கூடும் என்று அவன் எண்ணினான். அதனால் அவன் திருநெல்வேலிக்குப் போய், அங்கே மறியல் செய்த தொண்டர் களுடன் சேர்ந்து செயலாற்றினான். வழக்கம் போல் போலீசார் வந்து, தொண்டர்களை அடித்து இழுத்துச் சென்ற போது அவனையும் 'வேனில்' ஏற்றிப் போயினர். பல மைல் தூரம் போய், வெம்பரப்பான அத்துவானக்காடு மாதிரியான இடத்தில் எல்லோரையும் இறக்கி விட்டுவிட்டு, வண்டியோடு போய்விட்டார்கள் காவலர்கள்.

தொண்டர்களோடு சேர்ந்து அந்த மாணவனும் பசி பட்டினியோடு நெடுந்தொலை நடந்து அவரவர் இடம் சேர்ந்தனர். இந்த நிகழ்ச்சியைக் கூறிய மாணவன் உடம்பில் அடிபட்டு ஏற்பட்டிருந்த காயங்களைக் காட்டினான்.

இவ்விதம் உணர்ச்சிவசப்பட்டு செயல் புரிந்தவர்கள் பலராவர். தேசபக்தி உணர்வு நாடு நெடுகிலும் பரவி இருந்தது. அந்த உணர்வைத் தூண்டி விடும் தன்மையில் பிரிட்டிஷ் ஆட்சியினரின் செயல்பாடுகளும்

இருந்தன. பகவத் சிங், ராஜகுரு, சுகதேவ் ஆகிய மூன்று இளைஞர்களும் ராஜத்து ரோகக் குற்றம் சாட்டப்பெற்று, சிறையில் அடைக்கப் பட்டார்கள். விசாரணை என்று பெயருக்கு நடத்தி அரசு அவர்களைத் தூக்கிலிட்டுக் கொன்றது.

இச்செயல் இந்தியா முழுவதும் மக்களிடையே எழுச்சியை ஏற்படுத்தியது. பகவத் சிங் முதலானோர் பற்றிய பாடல்களும், வரலாற்றுப் பிரசுரங்களும் வெளிவந்தன. பகவத் சிங்கின் படங்கள், அவர் படம் பொறித்த 'பேட்ஜுகள்' விற்பனைக்கு வந்து விரைவில் விலை போயின. அந்த 'பேட்ஜு'களை மாணவர்கள் வாங்கி தங்கள் சட்டை களில் குத்திக்கொண்டு பெருமையாகத் திரிந்தார்கள். சட்டைகளுக்கு 'பகவத்சிங் காலர்' என்று, அந்த வீரர் அணிந்திருந்த சட்டையில் உள்ள காலர் மாதிரியான கழுத்து அமைப்பு தைப்பதில் தையல்காரர்கள் ஆர்வம் காட்டினார்கள்.

தேசத்துக்காகப் போராடிய தியாகிகள், வீரர்கள், தலைவர்களின் வரலாறுகள், விறுவிறுப்பான தமிழ்நடையில் எழுதப்பட்டு, சிறுசிறு வெளியீடுகளாக வந்து எங்கும் பரவின. அவை ஒரு அணா, இரண்டணா விலையில் விற்கப்பட்டதால் மாணவர்கள் வாங்கிப் படிப்பதற்கு வசதியாக இருந்தது.

ஒரு ரூபாய்க்கு பதினாறு அணா. ஒரு அணாவுக்கு நான்கு காலணா. பன்னிரண்டு பைசா. (தம்பிடி). மூன்று பைசா கொண்டது ஒரு காலணா. நான்கு பைசாக்கள் ஒரு 'துட்டு'. ஆறு பைசாக்கள் கொண்ட அரையணா 'ஒன்றரைத் துட்டு' என்று வழங்கப்பட்டது. ஒரு அணா, வளைவுகள் அடங்கிய விளிம்பு கொண்டவட்ட நாணயம், சதுர வடிவமான இரண்டணா, சிறு வட்டவடிவ வெள்ளிக்காசு அரைக்கால் ரூபாய், அதனினும் பெரிய வட்ட வெள்ளி 'கால் ரூபாய்', வெள்ளியினால் ஆன அரை ரூபாய், ஒரு ரூபாய் நாணயங்கள் புழக்கத்தில் இருந்தன. ஒரு பைசா, காலணா, பெரிய வட்ட 'ஒன்றரைத் துட்டு' (அரையணா) ஆகியவை செப்புக் காசுகள். சதுர இரண்டனா நிக்கல் நாணயம். ஒரு ரூபாய் தாள் எல்லாம் அப்போது கிடையாது. தாளில் ஐந்துரூபாய் நோட்டு, பத்து ரூபாய் நோட்டு பெரிதாக இருந்தன. ரூபாய் நாணயத்தில் வெள்ளி அதிக எடையில் கலக்கப்பட்டிருந்தது.

காலணா, அரையணாப் பத்திரிகைகள் தோன்றி, தேச பக்தியை மிகுதியாகப் பரப்பிவந்த காலம் அது. சங்கு சுப்பிரமணியன் ஆசிரியராக

இருந்து நடத்திய 'சுதந்திரச் சங்கு', பிற்காலத்தில் 'தினமணி' நாளிதழ் ஆசிரியராகப் பணிபுரிந்த டி.எஸ். சொக்கலிங்கம் நடத்திய 'காந்தி', மற்றும் 'மணிக்கொடி' 'ஜெயபாரதி' ஆகிய வார இதழ்கள் காலணா விலையில் எங்கும் பரவின. இவற்றில் சுதந்திரச் சங்கு' வேகமான நடையில், உணர்ச்சிகரமாக விஷயங்களை எழுதி, நன்கு கவனிப்புப் பெற்றது.

நாங்களும் இவ் இதழ்களையும், சிறு பிரசுரங்களையும் வாங்கிப் படித்தோம்.

நாங்கள் பள்ளி செல்லும் பாதையில், தெற்கு பஜாரில், எடுப்பாக கிராமபோன் கடை ஒன்று இருந்தது. அந்தக் கடையில் சதா பிளேட்டு களை ஓடவிட்டு பாடல்களை ஒலிக்கச் செய்தவாறு இருப்பார்கள். கிராமபோன் பெரிய வடிவில், ஊமத்தம் பூ வடிவப் பெரிய குழாய் பொருத்தப்பட்டதாக, அமைந்திருக்கும். ஆரம்பகாலத்தில் போனோ கிராம் என்று அப்பெட்டிகள் பெயர்பெற்றிருந்தன. படிப்பறிவு பெற்றிராதவர்களும், கிராமவாசிகளும் அதை 'பூனக்கிராப் பெட்டி' என்றே குறிப்பிட்டு வந்தார்கள்.

கொலம்பியா கம்பெனி ரிக்கார்டுகள், ஓடியன் ரிக்கார்டுகள் அந்நாள்களில் பிரபலமாக இருந்தன. கொலம்பியா கம்பெனி, நீண்ட நேரம் ஓடக் கூடிய பெரிய அளவு இசைத் தட்டுகளைத் தயாரித்து விற்பனைக்கு அனுப்பிய புதுசு. அதில் கே.பி. சுந்தராம்பாள் பாடிய பாடல்கள் அதிகம் இடம்பெற்றிருந்தன. பக்திப் பாடல்களுடன் தேசபக்திப் பாடல்களும் இசைத்தட்டுகளாக வந்தன. 'ஆடு ராட்டே - சுழன்றாடு ராட்டே', 'காந்தியோ பரம ஏழை சந்நியாசி' போன்ற பாடல்கள் மிகுந்த கவனிப்பைப் பெற்றிருந்தன.

ஜவகர்லால் நேருவின் தந்தை பண்டித மோதிலால் நேரு மரணமடைந்த போது, கொலம்பியா ஒரு ரிக்கார்டு வெளியிட்டது. 'பறிகொடுத்தோமே' - மோதிலால் நேருவைப் பறிகொடுத்தோமே!' என்று கே.பி. சுந்தராம்பாள் பாடியது. பாடல் எழுதியவர் உருக்கமாக, உணர்ச்சிகரமாக எழுதியிருந்தார். அத்துடன் சாதாரண ஜனங்களுக்குப் புரியாத தன்மையிலும் சில வரிகள் அதில் இடம்பெறச் செய்திருந்தார். 'பிரபுடீக உமது தேகம் - வியோகமானதே!' என்ற வரி ஆழமாக என் நினைவில் பதிந்திருக்கிறது.

பள்ளிக்கூடம் போகிறபோதும், பள்ளி விட்டு வருகிற போதும்

நாங்கள் கிராமபோன் கடையருகே சற்று நின்று பாடல்களை ரசிப்பது வழக்கம்.

தேசபக்திப் பாடல்களைப் பற்றிச் சொல்கிறபோது, சிறப்பாகக் குறிப்பிடத் தகுந்த ஒரு நிகழ்ச்சி நினைவில் எழுகிறது. விடுதலைப் போராட்ட இயக்கக் கூட்டங்களிலும், ஊர்வலங்களிலும் ஒருவர் அருமையாகப் பாடிக்கொண்டு வருவார். திருநெல்வேலி காங்கிரஸ் தொண்டர் சுப்பிரமணியம் நல்ல பாடகர். அவரே பாடல்களை இட்டுக் கட்டியும் பாடுவார். எப்பவும் கதர் வேட்டி, கதர் ஜிப்பா, காந்திக் குல்லாவுடனேயே காட்சி தரும் ஒல்லியான உருவம். கண்களில் 'கூலிங் கிளாஸ்' அணிந்திருப்பார். கையில் சதா சிங்கி (ஜால்ரா) வைத்திருப்பார். சிங்கியை இசைக்குத்தக்கபடி தட்டியவாறு எடுப்பான குரலில் பாடுவார்.

அவர் தேசவிரோதமான பாடல்களை எடுப்பான குரலில் பாடுவார். அந்த வட்டாரத்தில் அவருக்கு நல்ல கவனிப்பும் பெயரும் கிடைத் திருந்தது. அதனால் பால்குடம் எடுத்தல் போன்ற பக்தி நிகழ்வுகளுக்கும் சம்பந்தப்பட்டவர்கள் அவரை பாடும்படி ஏற்பாடு செய்து கவுரவிப் பார்கள்.

தேசவிரோதமான, பிரிட்டிஷ் ஆட்சியினருக்கு எதிரான, பாடல் களை அவர் பாடினார் என்று குற்றம் சாட்டப்பெற்று, தொண்டர் சுப்பிரமணியம் கைது செய்யப்பட்டார். உரிய நாளில் அவர் கொக்கிரகுளம் கோர்ட்டில் ஆஜர் படுத்தப்பட்டார். மாஜிஸ்ட்ரேட், 'நீ குற்றம் செய்தாயா?' என்று கேட்டார். 'நான் தேசபக்திப் பாடல்கள் தான் பாடினேன்' எனப் பதிலளித்தார் தொண்டர்.

'தேசவிரோதமான, ஆள்வோருக்கு எதிரான பாடல்களை இனி பாடமாட்டேன் என்று உறுதிமொழி கொடுத்தால், உனக்கு விடுதலை அளிப்பேன்' என்றார் மாஜிஸ்ட்ரேட்.

தொண்டர் சுப்பிரமணியம் தன் தலை மீதிருந்த காந்திக் குல்லாவை நீக்கினார். அதனுள் அவருடைய சிங்கி இருந்தது. அதைக் கையில் எடுத்து, கணீர் என ஒலி எழுப்பியபடி, 'ஆகா என்றோடுது பார் அந்நியப் பேய்களெல்லாம்! - இந்திய நாட்டை விட்டே ஓடுது பார்!' என்று கம்பீரமாகப் பாடலானார்.

ஆத்திரமடைந்த மாஜிஸ்ட்ரேட் 'சைலன்ஸ்!' என்று கத்தினார். போலீசார் பாய்ந்து தொண்டரின் கைத்தாளத்தை (சிங்கியை)

பறித்தார்கள். தொண்டருக்குக் கடுமையான சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. அவர் சிரித்தவாறே 'கதர் கப்பல் கொடி தோணுதே!' என்று பாடியபடி போலீசாருடன் தலை நிமிர்ந்து நடந்தார்.

இவ்விதம் தேசபக்த உணர்வு சாதாரணர்களை வீர சாகசம் புரியக்கூடிய 'ஹீரோ'க்களாக மாற்றிக் கொண்டிருந்த காலம் அது. சிறிய பெட்டிக்கடை வைத்துப் பிழைப்பு நடத்தியவர்களும், சாதாரணக் கொத்து வேலை கூலி வேலை செய்து வாழ்க்கை ஓட்டியவர்களும் தேசபக்தி மீதுறப் பெற்று, துணிந்து செயலில் இறங்கி நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் கலந்து கொண்டார்கள். தங்கள் குடும்பத்தின் நிலை பற்றியோ, தங்களது எதிர்காலம் குறித்தோ அவர்கள் எண்ணியதில்லை. நாடு விடுதலை பெற வேண்டும்; அதற்காக நாமும் நம்மாலானதைச் செய்ய வேண்டும் என்ற உந்துதலே நாட்டுமக்களின் உள்ளத்தில் கிளர்ச்சியூட்டியது.

சிறுசிறு செயல்கள் மூலமும் அவர்கள் அந்நியர் ஆட்சியின் மீதான தங்கள் எதிர்ப்பைக் காட்டத் துடித்தார்கள். ராஜா தலை பொறிக்கப் பட்ட ரூபாய் நாணயத்தில், தலை மீது ஓட்டை போட்டு சாவிக் கொத்தில் தொங்கவிட்டு தங்கள் எதிர்ப்பை வெளிப்படுத்திய தொண்டர்கள் இருந்தார்கள். ராஜா தலை அச்சிடப்பட்டிருந்த அகலமான காலணா, அதனினும் பெரிய அரையணா செப்புக் காசுகளில் துளையிட்டு 'தக்ளி' செய்து, அதில் நூல் நூற்று பெருமைப் பட்டவர்களும் உண்டு.

அரசாங்கத்துக்கு எந்த விதத்தாலும் நஷ்டம் ஏற்படுத்த வேண்டும் என்று சொல்லிக் கொண்டே ஒரு தொண்டர், அநாவசியமாக, தபாலாபீசில் அடிக்கடி மணியார்டர் பாரம் பெற்று அதை கிழித்தெறிந்து காற்றில் பறக்கவிட்டு மகிழ்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அந்தக் காலத்தில் மணியார்டர் பாரத்துக்கு விலை கிடையாது. இலவசமாகவே வழங்கப்பட்டு வந்தது.

பக்கிள் ஆயான் என்றொரு தொண்டர் இருந்தார். திருநெல்வேலி யில் சிறு பெட்டிக்கடை நடத்தி வாழ்ந்தார். கடையை கவனிப்பதை விட பொது நிகழ்ச்சிகள், கூட்டங்களிலேயே அதிக அக்கறை காட்டிக் கொண்டிருந்தார். விசேஷக் கூட்டம் நடக்கிற நாளில், பகலில் முன்னதாகவே தண்டோரா அடித்தபடி தெருத் தெருவாகத் திரிந்து, அன்றையக் கூட்டத்துக்கு அவர் தான் விளம்பரம் செய்வார்.

கூட்டத்திலும் தேவைப்படுகிற பணிகளை ஆர்வத்தோடு செய்யும் தொண்டர் அவர். வீரச் செயல்கள் புரிவதிலும் அவர் நாட்டம் கொண்டிருந்தார்.

1933இல் தாமிரவர்ணி ஆற்றில் பெரும் வெள்ளம் புரண்டோடியது. திருநெல்வேலி ஜங்ஷன் கடைத்தெருவில் கூட தண்ணீர் புகுந்துவிட்டது. சௌக்கிரகுளம் சுலோச்சன முதலியார் பாலத்தில் கமான் வளைவு ('ஆர்ச்')களை மறைத்து மூடிவிட்டது தண்ணீர்.

அந்நிலையில், தைப்பூசம் மண்டபத்தின் தட்டட்டியில் (மொட்டை மாடி) நாலைந்து பரதேசிகள் சிக்கிக்கொண்டார்கள். பொதுவாக எந்நேரமும் பண்டாரம் பரதேசிகள் பிச்சைக்காரர்கள் தங்கும் இடமாக அமைந்திருந்தது அந்த மண்டபம். அவர்களில் பலர் இரவிலும் அங்கேயே படுத்துத் தூங்குவார்கள்.

ஆற்றில் திடீரென்று வெள்ளம் வந்துவிட்டால், மண்டபத்தில் தங்கியிருப்பவர்கள் தப்பி ஓடிக் கரைசேர முடியாத நிலைமை ஏற்பட்டால், ஆள்கள் மண்டபத்தின் மேலே ஏறி தட்டட்டியில் தங்குவதற்கு வசதியாக, இரும்பு ஏணி அங்கு நிலையாக, அழுத்தமாக பதிக்கப்பட்டிருந்தது.

இம்முறை திடீரென்று இரவு நேரத்தில் பெரும் வெள்ளம் வந்துவிட்டதால், மண்டபத்தில் தங்கியிருந்த பரதேசிகள் பதறி அடித்து ஏணியில் ஏறி மண்டபத்தின் உயர் தளத்தை அடைத்து விழித்தபடி இருந்தார்கள்.

தண்ணீர் குறைவதாகயில்லை. வெள்ளம் மேலும் மேலும் பெருகி வந்தது. மண்டபத்தின் மேல் தளத்தை நீர்ப்பெருக்கு தொட்டுவிடும் போல் தோன்றியது. எந்த நேரத்திலும் மண்டபத்தை மூழ்கடிக்கக் கூடிய அளவுக்கு தண்ணீர் அதிகரிக்கக்கூடும் என்ற அச்சம் நிலவியது.

விடிந்ததும், ஆற்றின் பெரிய வெள்ளம் பற்றிய செய்தி திருநெல்வேலி பாளையங்கோட்டை எங்கும் பரவியது. வேடிக்கை பார்ப்பதற்காக மக்கள் கும்பல் கும்பலாக வந்து கூடினார்கள். யாரும் பாலத்தின் மீது போகக்கூடாது, அது ஆபத்து என்ற எச்சரிக்கைக் குரல் கொடுக்கப்பட்டவாறு இருந்தது.

மண்டபத்தின் மீது பயந்தபடி நடுங்கிக்கொண்டிருந்த பரதேசிகள் பரிதாபத்துக்குரியவர்களாகத் தென்பட்டார்கள். நம்மபாடு அவ்வளவு

தான்; வெள்ளம் வந்து நம்மை அடித்துக்கொண்டு போய்விடும் என்று அவர்கள் அஞ்சினார்கள். கரைகளில் நின்று வேடிக்கை பார்த்தவர்களும் அப்படித்தான் நினைத்தார்கள்.

இவர்களை அப்படிச் சாகவிடக்கூடாது. எப்படியும் இவர்களைக் காப்பாற்றியே ஆக வேண்டும் என்று உறுதியாகச் சொன்னார் டவுண் காங்கிரஸ் கமிட்டித் தலைவரான சாவடி கூத்தநயினார். அவர் செயல்துடிப்பும் ஊக்கமும் உற்சாகமும் நிறைந்த இளைஞர்.

எப்படி பரதேசிகளை காப்பாற்றுவது என்று அவரும் அவருடன் நின்ற தொண்டர்களும் யோசித்தார்கள்.

வலுவான கயிற்றை எடுத்துப் போய் மண்டபத்தில் பலமாகக் கட்ட வேண்டும். இன்னொரு முனையை இந்தக் கரைமீதுள்ள பனை மரத்தில் கட்ட வேணும். சகடை பொருத்திய தொட்டில் அல்லது சிறு ஊஞ்சலை கயிற்றில் ஓடும்படி கோர்க்கணும். மண்டபத்தின் மேலே நிற்கிற ஆள்களை ஒவ்வொருவராக அதில் உட்காரவைத்து, ஊஞ்சலை கரையில் நிற்பவர்கள் இழுத்து கரைசேர்க்க வேண்டும். இப்படி ஒரு யோசனையை சொன்னார் தொண்டர் பக்கிள் பிள்ளை. அவர் கார்காத்தார் ஆனதால், மற்றவர்கள் 'பக்கிள் ஆயான்' என்று அவரை அன்புடன் குறிப்பிடுவார்கள்.

நல்ல யோசனை தான். ஆனால் நடைமுறைப்படுத்துவது கஷ்டம் என்றார் சாவடி கூத்தநயினார். முதலில் யார் இந்த வெள்ளத்தில் நீந்திப் போய் மண்டபத்தில் கயிற்றைக் கட்டமுடியும்? அது சாத்தியப்படும் என்று தோணலை என்றும் சொன்னார்.

நான் போய் கட்டுகிறேன் என்று உறுதியான குரலில் அறிவித்தார் பக்கிள் பிள்ளை.

முடியுமா? உம்மாலே முடியுமா? என்று வியப்புடன் கேட்டார் தலைவர்.

ஓ! கயிறு மற்ற தளவாடங்கள் எல்லாம் சேகரியுங்கள். நான் மண்டபத்துக்குப் போவேன். அவர்களை காப்பாற்றுவேன் என்று நம்பிக்கை ஊட்டினார் பக்கிள்.

உடனடியாக ஆள்கள் விரைந்தார்கள். வலுவான நீளமான வடக்கயிறுகள், சகடை, தொட்டில் முதலிய அத்தியாவசியப் பொருள்களை விரைவிலேயே கொண்டு சேர்த்தார்கள்.

பக்கிள் பிள்ளை கயிற்றின் ஒரு நுனியை இடுப்பில் கட்டிக் கொண்டார். நான் போய்ச் சேர்ந்து, கையை ஆட்டுவேன். நீங்கள் கயிற்றின் மறுமுனையை பனைமரத்தில் இறுக்கி பலமாகக் கட்ட வேண்டும். சகடையில் தொட்டிலை மாட்டி, அதை இழுப்பதற்கு ஏற்றபடியாக இன்னொரு பொச்சக் கயிறை அதில் கட்டிவிட்டு, சகடையை கயிற்றில் ஓடவிட்டு என்பக்கம் அனுப்ப வேண்டும் என்று சொன்னார். எல்லோரையும் பார்த்துக் கும்பிட்டார்.

வேய் நீரு இந்த வெள்ளத்திலே நீச்சலடித்து மண்டபத்துக்கு போயிருவேரா வே? என்று தலைவர் கேட்டார்.

இதெல்லாம் எனக்குப் பழக்கம் தான். நான் ராஜவல்லிபுரத்தில் இருந்தபோது, செப்பறை ஆற்று வெள்ளத்திலே எத்தனை தடவை நீந்திப் போய் நீந்தி வந்திருக்கிறேன்! பெரியபெரிய வெள்ளத்தின் போதெல்லாம், பந்தயம் கட்டிக்கொண்டு, நான் ஆற்றில் குதித்து நீந்தி ஆற்று நடுவில் உள்ள மண்டபத்தைத் தொட்டுவிட்டு திரும்பவும் வந்திருக்கிறேனே என்றார். வந்தே மாதரம் என்று சொல்லி விட்டு, கரையோரமாகவே முன்னே மேற்கு நோக்கி சிறிது தொலைவு நடந்தார்.

வசதியான இடம் என்று அவருக்குப் பட்டதும், பக்கிள் பிள்ளை வெள்ளத்தில் குதித்தார். நீரோட்டத்துக்கு ஏற்றபடி நீந்தி விரைவில் தைப்பூச மண்டபத்தின் உச்சியை அடைந்தார். கரை மீது நின்ற அனைவரும் பலமாகக் கைகொட்டி, 'பக்கிள் ஆயானுக்கு ஜே!' என்று முழக்கமிட்டார்கள்.

மண்டபத்தின் மேலே நின்றவர்கள் அவரைக் கும்பிட்டு வணங்கினார்கள். அவர் வசம் பார்த்து, வடக்கயிற்றை தகுந்த முறையில் இறுக்கிக் கட்டினார். சைகை செய்தார்.

கரைமீது நின்றவர்கள் சகடையோடு தொட்டிலை முறைப்படி அனுப்பிவைத்தார்கள்.

பக்கிள் ஆயான் மண்டபத்தில் நின்றவர்களில் ஒருவரை தொட்டிலில் அமரவைத்து, தள்ளி விட்டார். கரை நோக்கி அது மெதுமெதுவாக இழுக்கப்பட்டது.

முதலாவது ஆள் கரை சேர்ந்ததும் பலத்த ஆரவாரமும் கைதட்டலும் அமர்க்களப்பட்டன.

இந்த விதமாக அனைத்துப் பரதேசிகளும் கரைசேர்க்கப்

பட்டார்கள். தாங்கள் தப்பிப்பிழைப்பது சிரமம் என்று அஞ்சிக் கொண்டிருந்தவர்கள் தங்களுக்கு மறுபிறப்பு கிடைத்தது போல் சந்தோஷம் கொண்டார்கள்.

பெரிய சாதனையை எளிதில் செய்து முடித்த பக்கிள் ஆயான் மீண்டும் வெள்ளப்பெருக்கை எதிர்த்து நீந்தி எப்படிக் கரைவந்து சேர்கிறார் என்று பார்க்க ஆவலுடன் நின்றார்கள் ஜனங்கள்.

பக்கிள் பிள்ளை ஆற்றில் குதித்தார். இப்போது கிழக்கு திசையில் நீரோட்டத்துடன் லாகவமாக நீந்தி, சிந்துபூந்துறைப் பக்கமாகச் சேர்ந்து அவர் கரையேறினார். அவருக்குப் பெரும் வரவேற்பும் பாராட்டும் கிட்டின.

அக் காலகட்டத்தில் திருநெல்வேலி மக்கள் மற்றொரு சாதனை யையும் செய்துமுடித்தார்கள். பெருமைப் பட்டார்கள்.

திருநெல்வேலி சுவாமி நெல்லையப்பர் கோயிலில் திருவிழாவின் போது தேரோட்டம் நடைபெறும் சுவாமி தேர் மிகப் பெரியது. அம்மன் தேரும் பெரிது தான். ஆனால் சுவாமி தேரைவிடக் கொஞ்சம் சிறியது. தேரோட்டம் கோலாகலமாக நாள் கணக்கில் நடைபெறும். ஒரே நாளில் தேர்கள் இழுக்கப்பட்டு நிலைக்கு வந்ததாக அதுவரை வரலாறு இல்லை.

தேர்கள் இரண்டும் எட்டு நாள். பத்து நாள் என்று தெருவில் நிற்கும். நாள் தோறும் சிறிது தூரமே இழுக்கப்பட்டிருக்கும். இதனால் எவ்வளவோ இடைஞ்சல்கள் என்று எண்ணுவோர் இருந்தார்கள். ஆனாலும் தேர்களை இழுத்து ஒன்றிருநாள்களிலேயே நிலைக்குக் கொண்டு வந்து சேர்க்க முடிந்ததில்லை.

அந்த வருடம் காங்கிரஸ் தலைவர் கூத்தநயினார் முடிவு செய்தார், தேர்களை ஒரே நாளில் இழுத்து நிலை சேர்க்கவேண்டும் என்று. எல்லோரிடமும் தனது எண்ணத்தை தெரிவித்தார்.

தேரில் கதர்க்கொடி கட்டி, காந்திபடத்தையும் வைத்தால், தேர்களை ஒரே நாளில் இழுத்து நிலைக்குக் கொண்டு வருவோம் என்று பலரும் அறிவித்தார்கள்.

கூத்தநயினார் கோயில் நிர்வாகிகளைக் கண்டு பேசி ஆவன செய்தார். சுவாமி தேரிலும், அம்மன் தேரிலும் கதர்க்கொடிகள் கட்டப் பெற்றன. காந்தி படமும் வைக்கப்பட்டது.

மக்கள் உற்சாகம் அடைந்தார்கள். வந்தே மாதரம், மகாத்மா காந்திக்கு ஜே என்று முழக்கமிட்டபடி முதலில் சுவாமி தேரை இழுக்கலானார்கள். வேகம் காட்டி தேரை ஒரு ரதவீதியைக் கடக்கச் செய்தார்கள். அடுத்து அம்மன் தேரை இழுத்தார்கள். இப்படி மாறி மாறி இழுத்து, இரண்டு தேர்களையும் ஒரே நாளில் நிலைக்குக் கொண்டு சேர்த்தார்கள்.

இப்படியாக, திருநெல்வேலித் தேர்கள் ஒரே நாளில் இழுக்கப்பட்டு நிலைவந்து சேர்ந்தது இது தான் முதல் தடவை என்ற வரலாற்றுச் சிறப்பு அந்த வருடம் ஏற்பட்டது. அதன் பின்னர் அநேக ஆண்டு களுக்குப் பிறகு தான் தேரோட்டத்தில் இத்தகைய சாதனை நிகழ்த்தப்பட்டது.

திருநெல்வேலிக்கு நாடகக் கம்பெனிகள் அவ்வப்போது வருவது உண்டு. சர்க்கஸ் கம்பெனி வந்தால் பாளையங்கோட்டையில் முகாமிடும்.

பாளையங்கோட்டையில் கர்சன் கிரவுண்ட் என்ற பெரிய மைதானம் இருந்தது. அந்தப் பரந்த திறந்த வெளியில் 'டென்ட் அமைத்து' (கூடாரம் போட்டு) சர்க்கஸ்காரர்கள் தங்கி வித்தைகள் காட்டுவார்கள். சர்க்கஸ் என்றால் மிருகங்கள் அதிகம் இருக்கும். அவை பலவிதமான வித்தைகளும் செய்து காட்டும்.

அப்பா உயிரோடிருந்த போது, 1929இல் டேவாள் சர்க்ஸ் என்ற கம்பெனி பாளையங்கோட்டையில் முகாமிட்டது. ஒருநாள் அப்பா எங்களை சர்க்கஸ் பார்க்க அழைத்துச் சென்றார். ஆண்கள் பெண் களின் சாகசச் செயல்கள், யானைகள், குதிரைகள், சிங்கம் புலிகள் முதலிய மிருகங்களின் விளையாட்டுகள் பிரமிப்பு தந்தன. உயரத்தில் கட்டப்பட்டிருந்த 'டிரப்பீசியம் பார்'களில் பெண்கள் ஆடிக் காட்டிய விளையாட்டுகள் திகிலூட்டுவனவாகத் தோன்றின. பபூன்களின் கோமாளித்தனக் கூத்துகளும் இருந்தன.

பின்னர் ஐந்து வருடங்களுக்குப் பிறகு, 'ஒயிட்வே சர்க்கஸ்' என்ற குழு வந்து தங்கி வித்தைகள் காட்டின. இந்தக் கம்பெனியில் மிருகங்கள் அதிகம் இல்லை.

அதன் பிறகு, மிருகங்களே இல்லாத 'பாம்பே ஷோ' என்ற சர்க்கஸ் வந்தது. இதில் ஆண்கள் பெண்களின் விளையாட்டுகளோடு, பார்க்க வருகிறவர்களிடமிருந்து பணம் பறிக்கும் சூதாட்ட விளையாடல்கள் அதிகம் இடம்பெற்றிருந்தன.

அப்புறம் வந்த 'பாம்பே ஷோ'க்கள் திருநெல்வேலி டவுனுக்கும் ஜங்ஷனுக்கும் இடைப்பட்ட வெளியில் - வயல்புறத்தில் மைதானம் அமைத்து காட்சிகள் நடத்தின. ராட்டினங்கள், ராட்சசச் சக்கரங்கள் (ஜயன்ட் வீல்) என்று மேலேறிச் சென்று கீழிறங்கும் சுழல் ராட்டினம் போன்றவற்றோடு, பணம் பிடுங்கும் சூதாட்டக் காட்சிகளும் மிகுதியாக இருந்தன. கிராமங்களில் இருந்தெல்லாம் காட்சி பார்க்க வந்து, ஆசைப்பட்டு சூதாட்ட விளையாடல்களில் ஆழ்ந்து அதிகமாகப் பணத்தை இழந்து சென்றவர்களின் எண்ணிக்கை மிகுதியாயிற்று.

திருநெல்வேலியில் கணபதி விலாஸ் தியேட்டர், மனோரமா தியேட்டர் என்று இரண்டு நாடகக் கொட்டகைகள் இருந்தன. அவ்வப்போது நாடகக் குழுவினர் வந்து இவற்றில் தங்கி நாடகங்கள் நடத்துவர். நிரந்தரமான நாடகக் குழுவினர் - 'பாய்ஸ் கம்பெனி' - அல்லாத தனிப்பட்டவர்களின் ஸ்பெஷல் அமைப்புகளும் நாடகங்கள் நடித்துக் காட்ட வந்து சேரும்.

இத்தகைய அமைப்புகளில், எஸ்.ஜி. கிட்டப்பா, கே.பி. சுந்தராம்பாள், எஸ்.வி. சுப்பையா பாகவதர், கே.எஸ். செல்லப்பா, கே.எஸ். அனந்த நாராயணன், சி. எஸ். சாமண்ணா போன்ற கீர்த்தி பெற்ற நடிகர்கள் வந்து நாடகங்கள் நடித்து ரசிகர்களைக் கவர்ந்தார்கள்.

நடிகர்களிடையே போட்டி ஏற்படுவதும் உண்டு. சிதம்பரம் சிங்கக்கூட்டி சி.எஸ். ஜெயராமனுக்கும், புளியமாநகர் புலிக்குட்டி பி.எஸ். கோவிந்தனுக்குமிடையே போட்டி நிலவியது. யார் பாட்டுப் பாடுவதில் தேர்ந்தவர்கள் என்று காட்டிப் பெயர் பெறுவதில் இவர்கள் நாட்டம் செலுத்தினார்கள்.

நாடகக் குழுக்களில், ஆர்மோனியம் வாசித்து சங்கீதம் பாடுவதில் கே. எஸ். தேவுடு அய்யருக்கும், காதர் பாட்சாவுக்கும் போட்டி ஏற்படும். மிருதங்கம் வாசிப்பதில், கோடையிடி கொச்சி ஸ்ரீதர ராவ் என்பவர் பெயர் பெற்றிருந்தார்.

முறையான நாடகக் கம்பெனிகளாக வந்தவை - 'பாய்ஸ் கம்பெனி' எனப் பெயர் பெற்றவை - பலவும் மதுரையைச் சேர்ந்தவை என்றே காட்டிக்கொண்டன. மதுரையைத் தலைப்பாகக் கொண்டு நீளம் நீளமான பெயர்களை அவை வைத்திருந்தன. இப்படி நீளப் பெயர் வைப்பது நாடக உலகில் ஒரு மரபாகவே இருந்தது என்று சொல்ல வேண்டும். மதுரை தத்துவ வித்தக ஸ்ரீ மீனலோசனி சங்கீத நாடக சபை,

மதுரை ஸ்ரீ தேவிபால விநோத சங்கீத நாடக சபை, மதுரை முத்தமிழ் கலாவித்வரத்ன ஸ்ரீ ரஞ்சனி நாடக சபை - இப்படி இருந்தன நாடகக் குழுக்களின் பெயர்கள்.

அந் நாள்களில் ஸ்ரீ கன்னையா நாடகக் கம்பெனி மிகுந்த புகழ் பெற்றிருந்தது. கன்னையாவின் நாடகங்கள் புராணக்கதைகளை ஒட்டிய பெரிய பெரிய நாடகங்களாக இருக்கும். கண்ணையும் கருத்தையும் கவரும் காட்சி அமைப்புகள்; சட்சட்டென மாறி பிரமிக்க வைக்கும் 'டர்னிங் சீன்கள்', மின் விளக்கு ஜோடனைகள் என்று தடபுடல் படுத்துவார்கள், நாடக மேடையில். சினிமா வந்திரதாத காலம். அதனால் இத்தகைய ஜாலங்கள் மக்களைப் பெரிதும் ஈர்த்தன.

கன்னையா ஒரு புது நாடகம் தயாரித்ததும், அதை சென்னையில் பல மாதங்கள் நடித்துக் காட்டுவார். அங்கிருந்து புறப்பட்டு, ஒவ்வொரு பெரிய நகரத்திலும் முகாமிட்டு நாடகங்கள் நடத்துவார். கடைசியாக திருநெல்வேலிக்கு வருவார். ஒவ்வொரு நகரத்திலும் கன்னையா கம்பெனி மாதக் கணக்கில் முகாமிட்டு நாடகங்கள் நடத்தும். ஒரே நாடகத்தை வாரக் கணக்கில் மேடையேற்றுவார். ஜனங்கள் அலுக்காமல் பார்த்து மகிழ்ந்தார்கள். மின்சார வசதி இல்லாத ஊர்தியேட்டர்களில், அவரே தனி ஜெனரேட்டர் வைத்து மின்வசதி செய்துகொள்வார்.

பிரமாண்டமான, அற்புதமான, காட்சி ஜோடனைகள், விரைவில் சீன்கள் மாறுவது போன்றவற்றினால் கன்னையா கம்பெனி நாடகங்கள் புகழ் பெற்றிருந்தன.

'தசாவதாரம்' நாடகத்தில் வைகுண்டத்தில் மகாவிஷ்ணு பள்ளி கொண்டிருக்கும் காட்சி காட்டப்படும். முதலில் சொர்க்கத்தின் கதவுகள் காட்டப்படும். கோயில் கதவுகள் போன்று பெரியன. அதன் ஒவ்வொரு சதுரத்திலும், விளிம்புகளிலும் பிரகாசமான விளக்குகள் ஒளிரும். சட்டென ஒரு வெடிச் சத்தம் கேட்கும். கதவுகள் தாமே திறக்கும். அப்படித் திறக்கும்போது கதவுகளில் பொருத்தப்பட்டுள்ள மணிகள் கணகண ஒலி எழுப்பும். திறந்த கதவுகளுக்கு அப்பால், ஒளி நிறைந்த சூழலில், பாம்பணையில், பட்டுபீதாம்பர தாரியாக, டாலடிக்கும் நகைகள் அணிந்த, மகாவிஷ்ணு ஒய்யாரமாகப் பள்ளி கொண்டிருப்பார். இந்தக் காட்சி யாரைத் தான் வசீகரிக்காது?

கன்னையா பகவத் கீதையை நாடகமாக்கி, மேடையேற்றினார். உண்மையான குதிரைகள் பூட்டிய சிறு ரதத்தையே மேடையில்

கொண்டு வந்து நிறுத்தினார். அவர். ரதத்தில் அமர்ந்து கண்ணன் அர்ச்சுனனுக்கு உபதேசிப்பது தத்ரூபமாகக் காட்டப்படும்.

கன்னையா கம்பெனி பெற்ற பெரும் வெற்றிகளைக் கண்ட இதர நாடகக் குழுவினரும், தங்கள் நாடகங்களிலும் பிரமாதமான காட்சி ஜோடனைகள், மாயா ஜாலங்கள் எல்லாம் செய்து காட்ட முற்பட்டனர். முக்கியமாக நவாப் டிஎஸ். ராஜமாணிக்கத்தின் ஸ்ரீ தேவிபால விநோத சங்கீத நாடக சபை இவ் உத்திகளைப் பெரும் அளவில் கையாண்டது.

நாடகக் கம்பெனிகளின் நாடகங்களால் வசீகரிக்கப்பட்ட பல தனிநபர்கள் தாங்களும் நாடகம் போட வேண்டும் என்று ஆசைப்பட்டு, குழுசேர்ந்து, விசேஷ சந்தர்ப்பங்களில் நாடகம் நடித்து மகிழ்வார்கள். ஊர்தோறும் இப்படி நடந்தது. பாளையங்கோட்டையிலும் இத்தகையவர்கள் இருந்தார்கள்.

கடை வைத்திருந்தவர்கள், வெவ்வேறு தொழில் துறையில் ஈடுபட்டவர்கள், இவ்விதம் ஆசை காரணமாக, ஒன்று சேர்ந்து, பல நாள்கள் பயிற்சி பெற்று, கோயில் திருவிழாவின் போது, அல்லது சிவராத்திரி, வைகுண்ட ஏகாதசி போன்ற விசேஷ நாள்களில் நாடகம் நடத்திக் காட்டி மகிழ்ச்சி அடைந்தார்கள்.

பாளையங்கோட்டையில் சங்கரன் பிள்ளை என்ற சிறு கடை வியாபாரி, பிச்சையா தாஸ் என்கிற தொழிலாளி ஒருவர், மற்றும் நண்பர்கள் சேர்ந்து பயின்று மார்க்கண்டேயா, ஞான சௌந்தரி, சத்தியவான் சாவித்திரி போன்ற நாடகங்களை, திறந்தவெளி அரங்கில் உற்சாகமாக நடித்துக் காட்டினார்கள்.

ஒவ்வொரு நடிகரும் சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி சுயமாகவே வசனம் படைத்து ஒப்புவிப்பதும் நடக்கும். மார்க்கண்டேயர் நாடகத்தில் ஒருவர் 'முன்குறத்தி' 'பின்எமன்' என்று இரு வேடங்களில் நடித்தார். இத்தகைய நாடகங்களில் ஆண்களே பெண்வேடம் தரித்து நடிப்பார்கள். முக்கிய நடிகர் 'ராஜபார்ட்' எனவும், பெண் வேடத்தர் 'ஸ்த்ரீ பார்ட்' என்றும் குறிப்பிடப்படுவர்.

முன்பகுதியில் குறத்திவேடம் பூண்டு குறிசொல்லி அட்டகாசம் செய்த நடிகர், தொடர்ந்து 'பிறகு நான் ஆர்ப்பாட்ட எமனாக வருவேன்; படாடோப எமனின் பிரமாத நடிப்பை காணத் தவறாதீர்கள்; நடுவில் எழுந்து போய் விடாமல் கடைசிவரை இருந்து பார்த்துச் செல்லுங்கள்'

என்று அவரே சுயவிளம்பரம் செய்து சபையோரிடையே கலகலப்பை ஏற்படுத்தினார்.

உற்சாகிகள் நடத்துகிற நாடகங்களில் இப்படிப்பட்ட தமாஷ்கள் தாமாகவே தோன்றும்; பார்க்கிறவர்களுக்கு மகிழ்ச்சியளிக்கும்.

1932இல் பாளையங்கோட்டையில் அதிவிசேஷ நிகழ்ச்சி ஒன்று நடந்தது. அந்த நகரத்துக்கு மட்டுமின்றி, திருநெல்வேலி மற்றும் சுற்று வட்டாரத்து ஊர்கள் அனைத்துக்குமே முக்கியத்துவம் வாய்த்த நிகழ்ச்சியாக இருந்தது அது.

பாளையங்கோட்டைக்கு ஏரோப்ளேன் வந்தது. ஹைகிரவுண்ட் பரப்பில் தங்கி நின்றது. பல ஊர்களிலிருந்தும் திருவிழாக் கூட்டம் போல் ஜனங்கள் வந்து பார்த்து மகிழ்ந்தார்கள்.

ஆகாய விமானம் சர்வசாதாரணமாகியிராத காலம் அது. இப்போது கூட பாளையங்கோட்டை - திருநெல்வேலி ஆகாய வெளியில் ஒரு விமானம் பறந்து செல்வது அபூர்வ நிகழ்ச்சி தான். அதிசயம் போல் எப்போதாவது விமானம் தென்படும். அவ்வளவுதான்.

ஹைகிரவுண்ட் என்பது பாளையங்கோட்டைக்குக் கிழக்கே இரண்டு மைல் தூரம் தள்ளியிருந்த மேட்டுநிலப்பரப்பு. பொட்டல் பெருவெளியாய் பரந்து கிடந்தது. புல் வகைகள், தும்பை, கொழிஞ்சி போன்ற செடிகள் முளைத்து, பார்வை படும் தூரமெல்லாம் வெம் பரப்பாய் தோன்றிய நிலம். கடல்காற்று, திருச்செந்தூர் பகுதி யிலிருந்து, வரும். சுத்தமும் சுகாதாரமும் நிறைந்த இடம் எனப்பெயர் பெற்றிருந்தது.

அதனால் ஓய்வு பெற விரும்பும் நோயாளிகளும், வசதிகள் படைத்த முதியவர்களும் குடும்பத்தோடு வசிக்கும் பங்களாக்கள் அங்கே இருந்தன. ஜில்லாவின் பெரிய பெரிய அதிகாரிகளும் - டிஸ்ட்ரிக்ட் மெடிக்கல் ஆபீசர், டிஸ்ட்ரிக்ட் சூப்பிரன்டென்ட் ஆஃப் போலீஸ், கலெக்டர் போன்றவர்கள். பெரிய பெரிய பங்களாக்களில் வசித்தார்கள். பெரும்பாலும் அவர்கள் வெள்ளையர்களாகவே இருந்தார்கள்.

இரவு நேரங்களிலும், சனி ஞாயிறுகளிலும் அவர்கள் உல்லாசமாகப் பொழுதுபோக்குவதற்காக 'இங்கிலீஷ் க்ளப்' என்ற சங்கம் ஒரு தனிக் கட்டிடத்தில் செயல்பட்டது. அங்கே சனி, ஞாயிறு இரவுகளில் வெகுநேரம் வரை வெள்ளைத் துரைமார்களும் துரைசானிகளும்

குடிப்பதும் டான்ஸ் ஆடிக் களிப்பதுமாக ஜாலியாக இருப்பார்கள் என்று சொல்லப்படுவது உண்டு.

அதே போல, ஓய்வு பெற்ற இந்திய முதியவர்கள் பொழுது போக்குவதற்காக 'இண்டியன் க்ளப்' அமைக்கப்பட்டிருந்தது. இது ஒரு சிறு கட்டிடத்தில் இருந்தது. இச் சங்கம் எப்போதுமே ஆரவாரமற்று, அமைதியாகத் தூங்கி வழியும் தோற்றம் கொண்டிருந்தது. சாய்வு நாற்காலிகளில் பெரியவர்கள் சுகமாகச் சாய்ந்து கண்மூடிக் கிடப்பார்கள். சிலர் அமைதியாக சீட்டாடிக் கொண்டிருப்பார்கள். அவ்வப்போது வம்பளந்து பேசி மகிழ்வார்கள். 'இண்டியன் க்ளப் மெம்பர்'களின் நடவடிக்கைகள் இப்படி எல்லைக்குட்பட்டதாகவே இருந்தன.

ஊர்ப்புறமிருந்து சிலர் நடந்து உலாவருவார்கள். தினசரி நடப்போரும் உண்டு. சனி, ஞாயிறு, மற்றும் விடுமுறை நாடுகளில் வந்து போவோரும் உண்டு. பங்களாக்களில் வசிக்கும் பெரிய மனிதர்கள் வெளியே தலைகாட்டுவதில்லை. ஆகவே, ஹைகிரவுண்ட் மிக அமைதியான மேட்டுநிலமாக, சுத்தமும் காற்றோட்டமும் கொண்ட வெம்பரப்பாகவே விரிந்து கிடந்தது. அது ஒரு காலம்.

காலஓட்டத்தில் அந்தப் பிரதேசம் எல்லாம் அரக்கத் தனமான மாறுதல்களைப் பெற்றுவிட்டது. பெரிய பெரிய கட்டிடங்கள் மண்டிய நாகரிகக் காங்க்ரீட் காடு ஆகப் பரிணாமம் பெற்றுள்ளது. மிகப் பெரிய ஆஸ்பத்திரி, மெடிக்கல் காலேஜ், மற்றும் ஜனங்கள் குடியிருக்கும் பகுதிகளாகப் பலபல 'நகர்'கள் 'புரம்'கள் என்று வளர்ந்து, பரபரப்பும் நெருக்கடியும் மிகுந்த இடம் ஆகிவிட்டது.

தற்காலத்தில் அந்தப் பகுதியைக் காண நேரிடுகிறவர்கள், இதற்கு ஏன் ஹைகிரவுண்ட் என்ற பெயரோ எனத் திகைக்கவே செய்வர். அந்த இடம் 'முன்னொரு காலத்தில்' இருந்த நிலையை இன்றுள்ள எவரும் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது.

அந்தப் பரந்து விரிந்து கிடந்த மேட்டு நிலத்தில், சில சதுர அளவு நிலப்பரப்பு பண்படுத்தப்பட்டு, விளையாட்டு மைதானமாக ஆக்கப் பட்டிருந்தது. போலீஸ் ஸ்போர்ட்ஸ், விசேஷமாக ஏற்பாடு செய்யப்படும் ஹாக்கி போட்டி விளையாட்டுகள் அந்த மைதானத்தில் நடைபெற்றன.

அந்நாள்களில் கிரிக்கெட் ஆட்டம் தற்காலம் போல மிகுந்த கவனிப்புக்குரியதாக இருந்ததில்லை. பாளையங்கோட்டை ஹாக்கி

விளையாட்டுக்குப் பெயர்பெற்றதாக விளங்கியது. ஒவ்வொரு கல்லூரியிலும் ஹாக்கி ஆட்டத்தில் தேர்ந்த 'சேம்பியன்'கள் பலர் இருந்தார்கள்.

ஹைகிரவுண்டின் பண்படுத்தப்பட்ட பரந்த மைதானத்தில் தான் ஏரோப்ளேன் வந்து நின்றது. பழைய மாடல் விமானம். அதன் இறகுகளின் அமைப்பே மிகப் பெரியதாக, விநோதமாக, இருந்தது. விமானத்தின் முன் பகுதியில் 'புரொப்பெல்லர்' என்கிற காற்றாடியும் பெரிதாகவே அமைந்திருந்தது. தனியார் விமானம் அது. அதன் இறக்கையின் அடிப்பகுதியில் 'விடிஏஏகே' என்ற பெயர் பெரிய எழுத்துக்களில், பளிச்சிடும் வர்ணத்தில், ஆங்கிலத்தில் பொறிக்கப் பட்டிருந்தது. விமானம் உயரப் போய் பறந்தாலும், கீழே நிற்கிறவர்கள் அந்த எழுத்துக்களைப் படிப்பது சாத்தியமாக இருந்தது.

விமானம் - அப்போது 'ஆகாயக் கப்பல்' என்ற பெயரே அதிகம் அடிபட்டது - அவ்வப்போது மேலெழுந்து, சிறிது தொலைவு பறந்து விட்டு வந்து கீழிறங்கி நிற்கும். அது வேடிக்கை பார்ப்பதற்குக் கூடி நின்ற ஜனங்களுக்கு உற்சாகம் அளித்தது.

பாளையங்கோட்டை, திருநெல்வேலி நகரங்களைச் சேர்ந்தவர்கள் மட்டுமல்லாது, அண்டை அயல் மற்றும் தூரத்துக் கிராமங்களில் இருந்தெல்லாம் ஜனங்கள் வண்டி கட்டிக் கொண்டு வந்து விமானத்தைப் பார்த்து அதிசயித்தார்கள்.

கும்பல் சாடுவதையும், அவர்கள் அடைகிற பிரமிப்பையும் கண்ட விமானச் சொந்தக்காரர்கள் அதை பணம் பண்ணுவதற்குச் சாதகமான வழியாக ஆக்கிக் கொண்டார்கள். விமானம் வந்து இறங்கிய மூன்றாவது நாளிலிருந்து, அவர்கள் கட்டணம் வசூலிக்கத் தொடங்கினார்கள்.

விமானம் நிற்பதற்கும், ஓடிப் பறப்பதற்கும் கணிசமான இடம் ஒதுக்கிவிட்டு, எட்டத்தில் சதுரமாக நான்கு பக்கங்களிலும் கம்பங்கள் நட்டு, முள்கம்பி வேலி போட்டார்கள். வேலிக்கு வெளியே நின்று யார் வேண்டுமாயினும், எவ்வளவு நேரம் வேண்டுமானாலும், பார்க்கலாம். உள்ளே போய் அருகில் நின்றும், சுற்றி வந்தும் விமானத்தைப் பார்ப்பதற்கு ஒரு ரூபாய் கட்டணம் என்று நிர்ணயித்து பணம் வசூலித்தார்கள்.

ஐந்து ரூபாய் கொடுத்தால், விமானத்தினுள் ஏறிச் சென்று உள்புறத் தோற்றங்களைக் கண்டு களிக்கலாம். உட்காரும் ஆசனத்தில் அமர்ந்தும் மகிழலாம். பத்து ரூபாய் கொடுத்தால், ஒரு ட்ரிப் விமானத்தில் பறந்து

அனுபவம் பெறலாம். ஹைகிரவுண்டிலிருந்து கிளம்பி விமானம் பாளையங்கோட்டை, ஜங்ஷன், திருநெல்வேலிக்கு மேலே வானத்தில் பறந்து, பேட்டை வரை போய் திரும்பி வந்து சேரும்.

அவ்வாறு பணம் கொடுத்து அனுபவித்தவர்கள் மிக அதிகமாகவே இருந்தார்கள். கிராமங்களிலிருந்து, தேர்த் திருவிழா பார்க்க வருவது போல அலங்காரம் செய்து கொண்டு வந்த பெண்கள் அநேகர் பத்து ரூபாய் கொடுத்து, விமானத்தில் அமர்ந்து பறக்கும் அனுபவம் பெற்று மகிழ்ந்தார்கள். பிறகு வெகுநாள்கள் வரை, நான் ஏரோப்ளானிலே ஏறிப் பறந்து பார்த்தேனே என்று பெருமையாகப் பேசி ஆனந்தித்தார்கள்.

அந்த விமானம் ஒரு வார காலம் ஹைகிரவுண்டில் முகாமிட்டிருந்தது. பின்னர் அது வேறு இடத்துக்குப் பறந்து போயிற்று. மீண்டும் ஹைகிரவுண்ட் வெறிச்சோடிய வெம்பரப்பு மேட்டு நிலமாக அமைதியில் ஆழ்ந்து விட்டது.

திருநெல்வேலி பாளையங்கோட்டைக்கு இடையே பஸ் போக்குவரத்து சர்வ சாதாரண நிகழ்வாக வளர்ந்திராத காலம். இரண்டே இரண்டு 'மோட்டார் கார்'கள் தான் திரும்பத் திரும்ப ஓடிக் கொண்டிருக்கும். அவற்றை ஜனங்கள் 'கார்' என்று தான் குறிப்பிட்டு வந்தார்கள். 'பஸ்' எனும் சொல் வழக்கத்துக்கு வந்திருக்கவில்லை.

இரண்டு பஸ்களும் வெவ்வேறு கம்பெனியை சேர்ந்தவை. ஒரு கம்பெனி 'மோட்டார்' பழைய மாடலில், கவர்ச்சியின்றி இருந்தது. அதன் மேல் முகப்பில் 'எம். எஸ். எம். சர்வீஸ்' என்று பெரிய எழுத்தில் எழுதப்பட்டிருந்தது. மற்றது 'செல்வன் மோட்டார் சர்வீஸ்.' அந்தக் கம்பெனி பஸ் நேர்த்தியாகவும் வசீகர அமைப்பைக் கொண்டும் இருந்தது.

மாணவர்களும் மற்றவர்களும் செல்வன் மோட்டாரைப் பெரிதும் விரும்பினார்கள். பாராட்டிப் புகழ்ந்தார்கள். 'எம்.எஸ்.எம்' சர்வீஸ் மோட்டாரை, 'முறுக்கு சுண்டல் மசால் வடை சர்வீஸ்' என்று நையாண்டி பண்ணிக் களித்தார்கள். மண்டபத்தைச் சுற்றும் மோட்டார் சர்வீஸ் என்றும் 'எம்.எஸ்.எம்' எனும் சொற்களுக்கு விரிவுரை கண்டு மகிழ்ந்தார்கள்.

அந்த மோட்டார், பாளையங்கோட்டை தெற்கு பஜார் வழியாக கோபாலசாமி கோயில் வரை வரும். அங்கிருந்த தேரடி மண்டபத்தைச் சுற்றித் திரும்பி ஓட்டத்தைத் தொடரும். செல்வன் பஸ் அவ்வாறு

செய்வதில்லை. அதனாலேயே அந்த மோட்டாரை 'மண்டபத்தைச் சுற்றும் மோட்டார்' என்று ஜனங்கள் குறிப்பிட்டார்கள்.

மோட்டார் ட்ரைவர்களும் ரகம் ரகமானவர்கள் தான். அருணாசலம் என்று ஒரு காரோட்டி இருந்தார். அவர் திருநெல்வேலி சந்திப்பிள்ளையார் கோயில் முக்கிலிருந்து காரை ஓட்டத் தொடங் கியதும் ஹார்னில் ஒலி எழுப்பத் தொடங்குவார். விடாது ஹார்னை அமுக்கி அமுக்கி ஓசைப்படுத்தியபடியே பயணம் செய்வார். அதில் பாட்டுகள் ஒலிக்கும்படி செய்வார்.

ஜாலியான பாட்டுக்களாக இருக்கும் அவை. 'சாலையிலே ரெண்டு மரம் - சர்க்காரு வச்சமரம் - உனக்கேத்த தூக்கு மரம் - தங்கமத் தில்லாலே' என்ற பாட்டும், 'தண்ணிக்குப் போ மகளே தலைகுனிந்து வா மகளே! மோட்டாரு ட்ரைவரைக் கண்டா முகம் கொடுத்துப் பேசாதடி தங்கரத்தினமே! அடி என் பொன்னு ரத்தினமே!' போன்ற பாடல்களும் அவருக்கு வெகுவாகப் பிடித்திருந்தன.

போகும் போதும், வரும்போதும், ஒவ்வொரு 'ட்ரிப்'பிலும் அருணாசலம் இப் பாடல்களை ரசித்து ஹாரனில் ஓசைப்படுத்தியபடி செல்வார். எனவே, மற்றவர்கள் அவரைப் பாராட்டும் விதத்தில் 'ஆரன் சக்கிரவர்த்தி அருணாசலம்' என்று பட்டம் அளித்து பெருமைப் படுத்தினார்கள்.

இதை போலீஸ் இன்ஸ்பெக்டர் சவுக்கடி சாந்தப்ப பிள்ளை கவனித்திருக்கிறார். ஒருமுறை, இப்படி இடைவிடாது ஹாரனை ஓசைப்படுத்தியபடி காரை ஓட்டக் கூடாது என்று அவர் அந்த ட்ரைவரை எச்சரித்தார். ஆனால் அருணாசலம் அவரது இயல்புப்படி ஹாரனில் பாட்டை ஒலித்தபடி தான் இருந்தார்.

சாந்தப்ப பிள்ளை கண்டிப்பான இன்ஸ்பெக்டர் என்று பெயர் பெற்றிருந்தார். சவுக்கும் கையுமாக சதா மோட்டார் பைக்கில் சுற்றிக் கொண்டே இருப்பார். பொது இடங்களில் தவறாக நடந்து கொள் கிறவர்களை, போக்கிரித்தனம் செய்கிறவர்களை, அந்த இடத்திலேயே சவுக்கால் அடித்து புத்திபுகட்டுவார். வாய்க்கால் பக்கம், ஆற்றங்கரை யோரம் அவ்வப்போது அவர் பைக்கில் காட்சி தருவார். பெண்கள் குளிக்கிற இடத்தில் ஆண்கள் வெறும் கோவணம் மட்டுமே கட்டிக்கொண்டு குளித்தால், சவுக்காலடித்து, 'ஏய், பொம்பிளைகள்

குளிக்கிற இடத்தில் இப்படியா நிற்பது? துண்டு கட்டிக்கொண்டு குளி என்று அறிவுறுத்துவார்.

தெரு ஓரங்களில் பையன்களோ பெரியவர்களோ அசிங்கப் படுத்தினால், சாந்தப்ப பிள்ளை அவர்களை சவுக்கால் அடிக்கத் தயங்க மாட்டார். தெருக்களை அசுத்தம் செய்யக் கூடாது என்று அறிவுறுத்துவார். சில பையன்கள் ரோடில் ஜாலியாக சைக்கிள் டயரை குச்சியால் அடித்து உருட்டியபடி விளையாடிச் செல்வார்கள்.

அதைக் கண்டால், சாந்தப்ப பிள்ளை சவுக்கைச் சுண்டுவார். அது சைக்கிள் டயரைச் சுருட்டி இழுக்கும். அதை அருகில் செல்கிற குப்பை வண்டியில் வீசிவிடுவார். ஏய், ரோடில் இது மாதிரி எல்லாம் விளையாடுவது ஆபத்து. ஜாக்கிரதையா, ஒழுங்காப் போ என்று பையனை எச்சரித்து அனுப்புவார்.

சாந்தப்ப பிள்ளை எந்த நேரத்தில், எந்தப் பக்கமிருந்து, எந்த ரோடில் வருவார் என்று எவருக்கும் தெரியாது. அவருடைய முரட்டுத்தனத்தையும், கூசாது சவுக்கடி கொடுக்கிற போக்கையும் கண்டு சகலரும் அஞ்சினார்கள். குற்றங்கள் குறைந்தன. சவுக்கடி சாந்தப்ப பிள்ளை என்றே ஊரார் அவரைக் குறிப்பிட்டார்கள்.

அவர் அருணாசலத்தை கண்காணித்தார். தான் சொல்லியும் அந்த ட்ரைவர் தன் போக்கை மாற்றிக் கொள்ளவில்லை என்று கண்டதும், அவர் அவனுக்குப் பாடம் கற்பிக்கத் தீர்மானித்தார். அடுத்த முறை அருணாசலம் ஹாரனை அமுத்தி ஓசை எழுப்பியபடி மோட்டாரை ஓட்டி வந்த போது, சாந்தப்ப பிள்ளையின் மோட்டார் சைக்கிள் பஸ் அருகே சென்றது. அவரது கைச்சவுக்கு பளீர் என மேலெழுந்தது. ட்ரைவர் கைமீது சுளீர் அடி பட்டதுடன், ஹாரனின் ரப்பர் உருண்டை பிய்ந்து வெளியே வந்து ரோடில் விழுந்தது. இன்ஸ்பெக்டர் எதுவும் நடவாதது போல் தனது வழியில் முன்சென்றார்.

அதிலிருந்து அந்த ட்ரைவர் ஒழுங்காக மோட்டாரை இயக்கிச் சென்றார்.

நான் நல்லவனுக்கு நல்லவன்; துஷ்டனுக்குத் துஷ்டனாகி சரியானபடி பாடம் கற்பிக்கக் கூடியவன் என்று சாந்தப்ப பிள்ளை சொன்னதாக ஜனங்கள் பேசிக்கொள்வார்கள்.

சவுக்கடி சாந்தப்ப பிள்ளையின் கீர்த்தி ஜில்லா முழுவதும் பரவி

யிருந்தது. அவரைப் பிடிக்காதவர்கள் சிலர் அவரைப் பற்றி மேலதிகாரி களுக்குப் புகார் செய்தார்கள். அவர் தவறான முறைகளில் பணம் சேர்த்திருக்கிறார் என்று சாந்தப்ப பிள்ளை மீது 'பெட்டிஷன்கள்' போயின.

அவரிடம் விசாரணை நடத்துவதற்காக மேலதிகாரி ஒருவர் சென்னையிலிருந்து வந்தார்.

சாந்தப்ப பிள்ளை பயப்படவில்லை. நீர் அதிகமாக சொத்து சேர்த்திருப்பதாக சொல்லப்படுகிறதே? நீர் என்ன சொல்கிறீர் என்று அதிகாரி கேட்டார்.

என் வாழ்க்கையில் நான் பதினாலு லட்சங்கள் சேர்த்திருக்கிறேன் என்று சாந்தப்பர் அமைதியாக பதில் அளித்தார்.

அவரது பதில் அதிகாரியை திகைக்க வைத்தது. இப்படி ஒரு பதிலை அவர் எதிர்பார்க்கவில்லை. அடுத்து, எப்படிப்பட்ட சொத்துக்கள் அவை என்று கேட்டார்.

'மூவபிள் பிராப்பர்ட்டீஸ்' (அசையும் சொத்துக்கள்) தான் என் பிள்ளை கூறினார்.

நான் அவற்றை பார்க்க முடியுமா என்று அதிகாரி

என் வீட்டுக்கு வந்து எந்நேர[illegible] சொத்துக்களை பார்வையிடலாம் என்றார் சாந்தப்பர்.

அதிகாரியும் அவரது உதவியாளரும் உடனே சாந்தப்ப பிள்ளையுடன் புறப்பட்டார்கள். வீடு சேர்ந்ததும், அவர்களை உரிய மரியாதையுடன் வரவேற்று நாற்காலிகளில் அமர வைத்துவிட்டு உள்ளே போனார் பிள்ளை.

சிறிது நேரத்தில் அவர் மிடுக்காக வெளியே வந்து அதிகாரி முன் நின்றார். அவரைத் தொடர்ந்து, சுத்தமாக எளிய ஆடைகள் அணிந்து, மலர்ந்த முகத்துடன் தோன்றிய பிள்ளைகள் - ஆண்களும் பெண் களுமாக - பதினான்கு பேர் வரிசையாக வந்து நின்றார்கள். அவர்களின் தாயும் வெளியே வந்தார். அனைவரும் அதிகாரியை வணங்கி நின்றார்கள்.

எனக்கு பதினான்கு பிள்ளைகள். ஒவ்வொரு பிள்ளையும் எனக்கு லட்ச ரூபாய் சொத்து மாதிரி. வேறு சொத்து எதுவும் என் வாழ்வில் நான் சேர்க்கவில்லை என்று சாந்தப்பர் உறுதியான குரலில் சொன்னார்.

அதிகாரி நெகிழ்ச்சி அடைந்தார். ஆண்டவன் உம்மையும் உமது குழந்தைகளையும் ஆசிர்வதிப்பாராக என்று ஆங்கிலத்தில் வாழ்த்தினார். மனநிறைவுடன் அங்கிருந்து வெளியேறினார்.

சாந்தப்ப பிள்ளையின் நேர்மையையும் நாணயத்தையும் கண்டிப்பையும், நிர்வாகத் திறனையும் மெச்சி 'ரிப்போர்ட்' எழுதினார் அதிகாரி. விரைவிலேயே பிள்ளைக்கு உத்தியோக உயர்வு கிடைத்தது. வேறு ஜில்லாவுக்கு மாறுதலும் பெற்றார் அவர்.

இப்படி நேர்மைக்குணமும் நியாய உணர்வும் பெற்ற அதிகாரிகள் அபூர்வ மனிதர்கள் தான்.

வெள்ளைக்கார அதிகாரிகள் 'அள்ளிச் சுருட்டிக் கொண்டு போவதில்' ஆர்வம் உடையவர்களாக இருந்தார்கள் என்பதும் அவ்வப்போது வெளிப்பட்டு வந்தது. கவர்னர் துரை அல்லது வைசிராய் பிரபு ஓய்வு பெற்று இந்தியாவை விட்டுப் புறப்படுவதற்கு முன்னதாக, நாடு பூராவும் சுற்றிப்பார்க்க என்று உத்தியோக ரீதியில் பவனி கிளம்புவார்கள். அவர்கள் போகிற இடங்களில் எல்லாம், அவரது ஆளுகைக்கு உட்பட்ட அலுவலர்கள் அதிகாரிகள் வகையரா, துரைக்கு அன்பளிப்பு வழங்கவேண்டும் என்று பணமும் மதிப்பு மிகு பொருள் களும் வசூல் செய்து அளிப்பதை கடமையாகக் கொண்டிருந்தார்கள்.

நான் பள்ளிக்கூடத்தில் படித்த காலத்தில், வைசிராயாக இருந்த இர்வின் பிரபு நகரம் நகரமாக பவனி வந்தார். பாளையங்கோட்டை வழியாக அவர் திருவனந்தபுரம் செல்ல ஏற்பாடாகியிருந்தது. பள்ளி மாணவர்கள் அனைவரையும் அணிவகுப்பாக நடத்திச் சென்று திருவனந்தபுரம் சாலையில் வரிசையாக நிற்கவைத்தார்கள் ஆசிரியர்கள். உரிய நேரத்தில் கார்களின் அணிவகுப்பு மெதுவாகச் சென்றது. இர்வின் பிரபுவும் அவரது சீமாட்டியும் புன்முறுவல் பூத்தபடி காட்சி தந்தார்கள். அவர்களுக்குப் பின்னால், அந்த ஜில்லாவில் வசூலான பரிசுப் பொருள்கள் நிறைந்த வாகனங்கள் சென்றன.

திருவனந்தபுரத்தில் மன்னர் வைசிராய்க்கு ராஜமரியாதை செய்து அன்பளிப்புகள் தாராளமாகவே வழங்குவார் என்று ஆசிரியர்கள் பேசிக் கொண்டார்கள். ஆள்வோர் எப்போதும் மக்களையும் நாட்டை யும் சுரண்டிச் செல்வம் சேர்ப்பவர்களாகவே இருக்கிறார்கள்.

நாங்கள் பள்ளிக்கூடம் போய் வருகிற வழியில், ஒரு சந்தர்ப்பத்தில், ஒரு அதிசய நிகழ்வு தலைகாட்டியது.

பையன்கள், சிறுமியர், சில பெரிய ஆள்கள் கூடிய கும்பல் ஒன்று அங்குமிங்கும் ஓடியது. அங்கே ஒரு பெண் குதித்துக் குதித்து தாவிச் சென்றாள். அடிக்கடி நின்றாள். பன்னிரண்டு பதின்மூன்று வயதிருக்கும். கட்டுகுட்டென்று - கழுக்கு மொழுக்கென செக்குலக்கை மாதிரி உருண்டு திரண்ட உருவம். சாதாரணச் சீட்டித் துணியாலான கவுன் அணிந்திருந்தாள். அது முழங்காலுக்குக் கீழே சிறிதளவுதான் நீண்டிருந்தது. மொட்டைச்சி என்று சொல்லப்பட வேண்டிய அளவுக்கு தலைமுடி ஒட்ட வெட்டப்பட்டிருந்தது.

அந்தப் பெண் சட்டென நின்று, கவுனின் பைக்குள் கைவிட்டு, காசுகளை அள்ளி எடுத்து, கும்பல் மீது விட்டெறிந்தாள். சிதறி விழுந்த காசுகளைப் பொறுக்குவதற்காகக் கும்பல் ஜனங்கள் முட்டி மோதினர். அவள் வேடிக்கை பார்த்துக் கை கொட்டிச் சிரித்தாள்.

'லட்சுமி! லட்சுமி! காசு போடு!' என்று பலரும் கத்தினார்கள். அவள் குதித்துக் குதித்து ஓடினாள். கடைத்தெருவிலிருந்த ஒரு ஓட்டலுக்குள் புகுந்தாள். அங்கு முன்னடியில் மேஜை போட்டு உட்கார்ந்து, வாடிக்கையாளர்களிடம் பில்படி காசு வசூலித்துக் கொண்டிருப்பவர் அருகே சென்றாள். மேஜையில் பல கிண்ணங்களில் ஒரு ரூபாய், எட்டணா, நாலணா, இரண்டனா, ஓரணா என்ற ரீதியில் காசுகள் நிறைந்திருந்தன. அந்தப் பெண் சுதந்திரமாகக் கைநீட்டி காசுகளை அள்ளிக் கொண்டு தெருவுக்கு வந்தாள். ஹோட்டல்காரர் அதட்டாமல், கண்டிக்காமல், கோபித்துக் கூச்சலிடாமல் சிரித்த முகத்தோடு பார்த்தவாறு இருந்தார்.

அவள் வெளியே வந்து, ஓட்டலின் வாசலில் மேல்படியில் நின்றபடி கும்பலை நோக்கிக் காசுகளை விட்டெறிந்தாள். அவற்றைப் பிடிக்கவும், சிதறி விழுந்தவற்றைப் பொறுக்கவும் கும்பல் மோதிச் சாடுவதைக் கண்ட அந்தப் பெண் கைகொட்டிக் களித்தாள். உடனே பக்கத்திலிருந்த ஒரு பெரிய கடைக்குள் புகுந்தாள். மிடுக்காக வீற்றிருந்த முதலாளிக்கு முன்னிருந்த 'கல்லா'விலிருந்த காசுகளை அள்ளினாள். வெளியேறினாள். ஜனங்கள் மத்தியில் வீசி எறிந்தாள்.

இப்படி ஓட்டல்கள், கடைகள் பலவற்றினுள்ளும் சென்று அவள் தாராளமாகக் காசுகளை அள்ளி வந்து கும்பலை நோக்கி வீசி மகிழ்ந்தாள். கும்பல் அதிகரித்தவாறே இருந்தது. அங்கே வந்த போலீஸ்காரர்களும் சிரித்தபடி வேடிக்கை பார்த்து நின்றார்களே தவிர, ஆக்கினை எதுவும் செய்யவில்லை.

அப்போது மோட்டார் கார் வந்தது. கூட்டத்தைக் கண்டதும் காரின் வேகம் குறைக்கப்பட்டது. 'லட்சுமி, டவுனுக்குவாறியா?' என்று கண்டக்டர் குரல் கொடுக்கவும் அந்தப்பெண் குதித்து ஓடி காரில் ஏறிக்கொண்டாள். மோட்டார் வேகம் எடுத்து ஓடியது. கும்பலும் மெதுமெதுவாகக் கரைந்தது.

இது தினசரி நிகழ்ச்சியாயிற்று. அது திருநெல்வேலிப் பெரிய தெருவைச் சேர்ந்த நெசவுத் தொழிலாளர் ('கைக்காள முதலியார்' - கைக்கோளர்) குடும்பம் ஒன்றைச் சேர்ந்தபெண். ஒருதினுசுப் பைத்தியம். ஆனால் லட்சுமி கடாட்சம் பெற்றது. அது கைவைத்துக் காசு எடுத்தால், அந்தக் கடையில் அல்லது ஒட்டலில், அன்று வியாபாரம் 'பிய்ச்சக் கிட்டுப் போகும்!' காசுகள் கல்லாவிலே பெருகி வழியும். அதனால் தான் ஓட்டல்காரர்களும் கடைமுதலாளிகளும் அந்தப் பெண்ணை அதட்டி விரட்டுவது மில்லை; போலீசாரிடம் புகார் செய்வதும் இல்லை என்று விஷயம் தெரிந்தவர்கள் சொன்னார்கள்.

தினந்தோறும் இந்தப் பிள்ளை, பேட்டை, திருநெல்வேலி டவுன், ஜங்ஷன், பாளையங்கோட்டை என்று எல்லா இடங்களிலும் கடைகளில் புகுந்து காசுகளை அள்ளிவந்து தாராளமாகத் தானம் செய்து வருது. மோட்டார் ட்ரைவர்கள், கண்டக்டர்களின் ஆதரவு இந்த லட்சுமிக்கு அதிகமாகக் கிடைக்குது. இந்தப் பெண் தங்கள் காரில் வந்தால், அன்று பூராவும் பண வசூல் (கலெக்ஷன்) அதிகமாக இருக்கிறது என்று அவர்கள் சொல்கிறார்கள். அதுவாக் கைவிட்டு கண்டக்டர் பைக்குள்ளிருந்து காசுகள் எடுத்தால், அன்று வசூல் எக்கச்சக்கமாக இருக்கும் என்று கார் கண்டக்டர்கள் நம்புகிறார்கள். அதனால் தான், லட்சுமி லட்சுமி என்று உபசரிக்கிறார்கள். பெரியவர்கள் இவ்விதம் விவரித்தார்கள்.

இதிலே முக்கியமான ஒரு விஷயம் உண்டு. அந்தப் பெண்தானாக மனசு வச்சு வந்து கைபோட்டுக் காசு எடுத்துச் சென்றால் தான் கடைக்காரருக்கு அதிர்ஷ்டம் அடிக்கும். அதில்லாமல் கடைக்காரராகக் கூப்பிட்டு அவள் கையில் காசுகள் கொடுத்தாலோ, அல்லது அவரே அந்தப் பெண்ணின் கையைப் பற்றி கல்லாவில் வைத்து காசுகளை எடுக்கும்படி செய்தாலோ புண்ணியமில்லை. அப்படிச் செய்கிற போது காசுகள் தாராளமாக வந்து சேர்வதில்லை. கடைக்காரர்கள் அனுபவ பூர்வமாக அறிந்த உண்மை இது. அதனாலே தான், கடைக்காரர்களும் ஓட்டல்காரர்களும் அந்தப் பெண்ணாக பிரியப்பட்டு நுழைந்து,

காசுகளை அள்ளிச் செல்கிறபோது சந்தோஷமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும் 'தெரிந்தவர்கள்' விளக்கம் அளித்தார்கள்.

எப்படியோ அந்தப் பெண்ணின் திருவிளையாடல் பல தினங்கள் ஆனந்தகரமாக நிகழ்ந்து வந்தது. சுமார் ஒருமாத காலம் அது நடந்தது. அப்புறம் அந்தப் பெண் பாளையங்கோட்டைப் பக்கம் தலைகாட்டவேயில்லை.

திருநெல்வேலி பேட்டை வட்டாரத்திலும் அந்தப் பெண்ணின் நடமாட்டம் இல்லை. தூத்துக்குடி - மதுரை என்று எங்காவது போயிருக்கும் என்று ஜனங்கள் பேசிக் கொண்டார்கள். அதன் பிறகு அவளை மறந்துவிட்டார்கள்.

எனது பள்ளிவாழ்க்கை சந்தோஷமாக வளர்ந்தது. ஒவ்வொரு வருடமும் 'நல்ல மாணவன்' என்று நன்னடத்தைக்கான பரிசு எனக்கு வழங்கப்பட்டு வந்தது. தமிழ்ப்பாடத்தில் முதல் பரிசும் எனக்குக் கிடைத்தது. சில வகுப்புகளில் சில சமயம் ஆங்கிலத்துக்கான முதல் பரிசும், சில வருடம் இரண்டாம் பரிசும் எனக்கு அளிக்கப்பட்டன. எல்லாம் புத்தகங்களே. தமிழ்ப் பாடத்துக்கான பரிசுக்கு தமிழ் நூல்கள் கிடைத்தன. நன்னடத்தைக்கான பரிசு, மற்றும் ஆங்கிலத்துக்கான பரிசுக்கு ஆங்கிலக் கதை நூல்கள் தரப்பட்டன.

ஆகவே படிப்பதற்குப் புதியபுதிய புத்தகங்கள் கிடைத்துக் கொண்டேயிருந்தன.

அர்ச் சவேரியார் உயர்நிலைப் பள்ளி ரோமன்கத்தோலிக்கப் பள்ளி ஆகும். கல்விப் பயிற்சி, ஒழுக்கம், கட்டுப்பாடு முதலியவற்றின் கண்டிப்பான நடைமுறைக்குப் பெயர் பெற்ற பள்ளி அது. தலைமை ஆசிரியர் கத்தோலிக்கப் பாதிரியார் தான்.

மேல்வகுப்புகளுக்கு, ஆங்கிலம், சரித்திரம் போன்ற சில பாடங்களை 'சாமியார்கள்' சிலர் நடத்துவர். பாதிரிமாரை 'சாமியார்கள்' என்றே ஜனங்கள் குறிப்பிட்டு வந்தார்கள். பள்ளிக்கூடம் 'சாமியார் பள்ளிக் கூடம்' என்று பெயர் பெற்றிருந்தது.

சாமியார்கள் தவிர, கிறிஸ்தவ ஆசிரியர்கள் சிலர் இருந்தார்கள். மற்றப்படி பெரும்பாலான ஆசிரியர்கள் பிராமணர்கள் தான். ஒன்றிரண்டு பிள்ளைமார் ஆசிரியர்களும் இருந்தார்கள்.

பிராமண ஆசிரியர்கள் அனைவரும் தலைமுடியை நீளமாக

வளர்த்திருந்தார்கள். முடியைச் சீவிப்பதப்படுத்தி கொண்டை போட்ட வாறு தான் பள்ளிக்கு வருவர்.

1932க்கு அப்புறம் பிராமண ஆசிரியர்களிடம் மெது மெதுவாக 'கிராப் நாகரிகம்' புகுந்தது. இரண்டு, மூன்றாவது பாரங்களுக்கு 'சயன்ஸ் டீச்சர்' ஆக இருந்த சீதாராம ராவ்தான் முதன்முதலாகத் துணிந்து முடியை வெட்டிவிட்டு, கிராப் தலையராக மாறி வழிகாட்டினார். 1932 கோடை விடுமுறைக்குப் பிறகு பள்ளி திறந்ததும் புதிய தோற்றத்துடன் வந்த அவரைப் பார்த்து இதர ஆசிரியர்களே வியந்தார்கள். மாணவர்கள் பேராச்சரியம் கொண்டார்கள்.

பிறகு, ஒவ்வொரு வருடமும் 'பெரிய லீவு' முடிந்து, பள்ளி திறந்த போது ஒன்றிருவராய் ஆசிரியன்மார்கள் தலைமுடியைத் துறந்து, கிராப் வைத்தவர்களாய் வருவது வழக்கமாயிற்று. ஒரு சில வருடங்களில் நீண்ட தலைமுடி அழகர் ஆசிரியர்களில் எவரும் இலர் என்ற நிலை ஏற்பட்டது.

நான் கூட 'தேர்டு பார்ம்' (எட்டாம் வகுப்பு) படித்துக் கொண் டிருந்த போது தான், நீண்டு வளர்ந்த கூந்தலைத் துறந்து, கிராப் தலையன் ஆனேன்.

வாத்தியார்கள் பலரகம். கண்டிப்பும் கறாருமாக நடந்து கொள்ளக் கூடியவர்களும் இருந்தார்கள். அன்பாகப் பேசிப்பழகி, பாடங்களோடு கதைகள் சொல்லி மாணவர்களின் நன்மதிப்பைப் பெற்றவர்களும் இருந்தார்கள். ஒரு உபாத்தியாயர் தேசபக்தி அதிகம் கொண்டிருந்தார். வெள்ளையர்களை நாட்டை விட்டு விரட்ட வேண்டும் என்று ஆர்வ மாகப் பேசுவார். பிரிட்டிஷாருக்குப் புத்தி புகட்ட நெப்போலியன் மாதிரி ஒருவன் தேவை என்பார்.

அவர் சதா நெப்போலியன் - நெப்போலியன் என்று உற்சாகமாகப் பேசுவது வழக்கம். அவர் நெப்போலியன் என்று கூறுவது நெய்ப்போளி என்று சொல்வது போல் தொனிக்கிறது என்று ஒரு பையன் சொன்னான். அது முதல் அந்த வாத்தியாரை நெய்ப்போளி என்று பையன்கள் குறிப்பிடலாயினர்.

வைத்திலிங்கய்யர் என்றொரு கணக்கு வாத்தியார் இருந்தார். அவர் பையன்களுக்கு 'நிமிட்டாம்பழம்' (சதையைவிரல்களால் இறுகப் பற்றிக் கிள்ளுதல்) கொடுப்பதில் பெயர்பெற்றவர். பிரம்பினால் அடிக்கவும் செய்வார். அதனால் பையன்களுக்கு அந்த வாத்தியாரைப் பிடிக்காது.

வைத்திலிங்கய்யர் சாகாரா எங்கள் வயிற்றெரிச்சல் தீராதா என்று பையன்கள் கத்துவது உண்டு. அவர் இல்லாத போது தான்.

சங்கரய்யர் என்று ஒரு சயன்ஸ் வாத்தியார். எப்போதும் தூங்கி வழியும் தோற்றத்துடனேயே காணப்படுவார். அவரை சோம்பேறிச் சங்கரய்யர் என்று மாணவர்கள் குறிப்பிட்டார்கள். நெடுநெடு என்று உயரமாய் ஒல்லியாய் காட்சி தந்த சுப்பய்யர் 'நெட்டைக் கொக்கு' என்று பெயர்பெற்றார். ஆங்கில ஆசிரியர் ஒருவருக்கு உயர்நிலை மாணவர்கள் 'ஜப்பான் லேடி' என்று பெயர் வைத்திருந்தார்கள். பொருத்தம் இல்லாமலே சும்மா ஜாலியாக வைத்த பெயராகத் தான் இருக்க வேண்டும் அது.

பால் பூபால் ராயர் என்று ஒரு ஆசிரியர். அவர் சந்தை நாளில் பாளையங்கோட்டைச் சந்தையில் கடைபோட்டு உப்பு வியாபாரம் செய்வார். பையன்கள் வாத்தியார் இருக்கிறாரே என்று பயந்து அந்தக் கடைப்பக்கமாகப் போகாமல் ஒதுங்கிப் போவார்கள். அதை அவர் கவனித்து விடுவார். மறுநாள் அந்தப் பையன்களை காணநேர்கிற போது, சந்தைக்கு வந்தால் என் கடையில் ஏன் உப்புவாங்குவதில்லை? வேறு கடைக்குப் போய் உப்பு வாங்குகிறாயே? வாத்தியாருக்கு காசு சேரப் படாதுன்னு நினைக்கிறாயா? என்று கோபிப்பார். சந்தையில் அவரைப் பார்த்து சலாம் போட்டு, அவர் கடைக்குப் போய் உப்பு வாங்குகிற பையன்களைப் பார்த்து சந்தோஷப்படுவார். பாராட்டாக ஏதாவது சொல்லி மகிழ்விப்பார்.

வாத்தியார்களும் சராசரி மனிதர்கள் தான் என்பதை அவர்களது சொல்லும் செயல்களும் எடுத்துக்காட்டும்.

பாதிரியார்களில் ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்த வெள்ளைக்காரப் பாதிரிகளும் இருந்தார்கள். அவர்கள் மேல்வகுப்புகளுக்கு ஆங்கிலம் அல்லது வரலாற்றுப் பாடம் கற்பித்தார்கள். இங்கிலாந்தில் இருந்து வந்திருந்த ஃபாதர் க்ளேட்டன் ஐந்தாவது பாரத்துக்கு இங்கிலீஷ் கற்றுக்கொடுத்தார். டென்மார்க்கைச் சேர்ந்த ஃபாதர் ஃப்ளெமிங் என்பவர் நான்காவது பாரத்திற்கு ஹிஸ்டரி (சரித்திரம் - வரலாறு) வகுப்பு எடுத்தார். அவர் பேச்சு தெளிவாகப் புரியவில்லை என்று மாணவர்கள் குறை கூறுவர்.

ஐந்தாவது பாரம் படித்தவர்களில் மகாராஜன் என்றொரு மாணவன் இருந்தான். படிப்பதில், அவனுக்கு அதிகம் ஆர்வம்

கிடையாது. வகுப்புக்கு 'நீட்டாக ட்ரெஸ்' செய்து கொண்டு ஸ்டைலாக வருவான். மகாராஜன் படிக்கவா ஸ்கூலுக்கு வாறான்! சும்மா கல்யாணப் படிப்பு படிக்கத்தான் இங்கே சேர்ந்திருக்கான். அதுதான் ஜம்னு மாப்பிளை மாதிரி கிளாசுக்கு வாறான் என்று தமிழ் வாத்தியார் வீரபாகு பிள்ளை கிண்டல் பண்ணுவார். அவன் சிரித்துக் கொள்வான். எதுவும் சொல்லமாட்டான்.

மகாராஜன் கணக்கு வாத்தியாரை கலாட்டா பண்ண வேண்டும் என்று தீர்மானித்தான். ஒருநாள் வாத்தியார் கண்ணபிரான் (அய்யர்) பெரிய கணக்கு ஒன்றை, சிரத்தையெடுத்து, கரும்பலகையில் எழுதிக் காட்டி செய்யும் வழியை விளக்கினார். முடிவில் எல்லோருக்கும் புரிந்ததா என்று கேட்டார். மகாராஜன் எழுந்து நின்று அமைதியாக, எனக்குப் புரியலே சார் என்றான்.

என்ன புரியலே? எந்த இடம் புரியலே என்று ஆசிரியர் கேட்டார்.

ஒண்ணுமே புரியலே சார். கணக்கு ஆரம்பத்திலேயிருந்து எனக்கு எதுவுமே புரியலே சார் என்று அவன் பதிலளித்தான்.

அவர் அவனை நோக்கியவாறு நின்றார். அவனும் அமைதியாக நின்று கொண்டிருந்தான்.

சரி இப்ப அடுத்த கணக்கை பார்க்கணும். உனக்கு தனியாச் சொல்லித் தர நேரமில்லே. ஸ்கூல் விட்டதும், டீச்சர்ஸ் ரூமிலே வந்து என்னைப் பார். உனக்கு இன்னும் விளக்கமாகச் சொல்லித் தாரேன். இப்ப நீ உட்கார் என்று கூறி, ஆசிரியர் அடுத்த கணக்கை விளக்கலானார்.

அவன் மவுனப் புன்னகையுடன் இடத்தில் அமர்ந்தான். அன்று மாலையிலோ, அதற்குப் பிறகோ, மகாராஜன் கணக்கு சார் கண்ணபிரானைக் காண்பதற்காக ஆசிரியர்கள் அறையின் பக்கம் போகவேயில்லை. கணக்கு வாத்தியாரும் அவனை கண்டுகொள்ள வில்லை.

சில வாரங்களுக்குப் பிறகு, கண்ணபிரானுக்குப் பதிலாக லோகாச்சாரி என்ற இளைஞர் கணக்குப் பாடம் கற்பிக்க வந்து சேர்ந்தார். கண்ணபிரான் வேறு வகுப்புக்குப் போய்விட்டார்.

லோகாச்சாரி வேலைக்குப் புதுசு. உயர்நிலை வகுப்பு மாணவர் களுக்கு கணக்குப் பாடம் சொல்லிக்கொடுத்து அனுபவம் பெற்றிருக்க

வில்லை. நல்ல பெயர் பெறவேண்டும் என்ற நோக்கத்தோடு அவர் மிகுந்த சிரத்தை எடுத்துக் கற்பித்தார். மாணவர்களுக்கு சந்தேகம் ஏற்பட்டால், கேட்டுத் தெளிவுபெறும்படி தூண்டினார்.

ஒருநாள் பெரிய கணக்கொன்றை விளக்கி, கரும்பலகை முழுவதும் எண்களை எழுதி நிரப்பி, பாடம் நடத்தினார். இந்தக் கணக்கு எல்லோருக்கும் புரிந்திருக்கும்னு நினைக்கிறேன் என்று லோகாச்சாரி திருப்தியுடன் சொன்னார்.

மகாராஜன் எழுந்து நின்று, எனக்குப் புரியலே சார் என்றான்.

ஏன் புரியலே, தெளிவா விளக்கமாகச் சொல்லி கணக்கைப் போட்டுக் காட்டினேனே!... பரவால்லே, இப்ப கவனி என்று கூறி ஆசிரியர் மீண்டும் ஆரம்பம் முதல் கணக்கை, அதை செய்ய வேண்டிய வழிமுறையை, நிதானமாக எடுத்துச் சொன்னார். இப்ப புரியுதா என்று அவனைக் கேட்டார்.

இப்பவும் புரியலே சார். இந்தக் கணக்கு எனக்கு விளங்கலே சார் என்று மகாராஜன் சொன்னான்.

லோகாச்சாரி கரும்பலகையை நிரப்பிஇருந்த எண்களையே பார்த்தபடி நின்றார். அவரது கண்கள் கலங்கின. கண்களிலிருந்து நீர் வடியத் தொடங்கியது.

மாணவர்களுக்கு அந்த இளம் புதிய கணக்கு வாத்தியாரைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. மகாராஜனுக்கும் அவர் மீது அனுதாபம் ஏற்பட்டிருக்க வேண்டும்.

ஸாரி சார் என்று கூறியபடி அவன் தன் இடத்தில் அமர்ந்தான். லோகாச்சாரி தலை கவிழ்ந்தவாறே நின்றார். அந்தப் 'பீரியட்' முடிந்ததற்கான மணி ஒசையிட்டது. அவர் வேகமாக வெளியேறினார்.

அதன் பிறகும் லோகாச்சாரி தான் கணக்கு வகுப்பு எடுத்தார். பொறுப்புடனும் திறமையோடும் பாடம் கற்பித்தார். மகாராஜன் மறுபடி தன் குணத்தைக் காட்டவேயில்லை.

இவ்வாறு வாத்தியாரை மட்டம் தட்ட வேண்டும், ஆசிரியருக்கே பாடம் கற்பிக்க வேண்டும், 'கோட்டா பண்ணணும்' என்று தீர்மானித்துத் திட்டமிட்டு செயல்புரிந்து, தங்கள் செயலில் மிகுந்த மகிழ்ச்சி கொள்ளும் மாணவர்கள் வேறு வகுப்புகளிலும் இருந்தார்கள்.

நாங்கள் வசித்த தெருவைச் சேர்ந்த மாணவர் குற்றாலமும் அவருடைய நண்பர்கள் சிலரும் அப்பேர்ப்பட்ட இனத்தினர் தான். அவர்கள் 'பத்தாவது' (ஆறாம் பாரம்) படித்துக் கொண்டிருந்தார்கள். 'சிக்ஸ்த் பார்ம்' பையன்கள் பெரியவர்கள். லூட்டி அடிப்பதில் பேர்போனவர்கள்; ஒவ்வொரு வகுப்பு நேரத்திலும் (பீரியட்) கூச்சலி ட்டுக் கலாட்டா செய்து மகிழ்வது அவர்களது பொழுது போக்காக இருந்தது.

இதனால் எல்லாம், மாடியிலிருந்த அவர்கள் வகுப்பை தலைமை ஆசிரியரின் அறைக்கு எதிராக, தனித்துக் கட்டப்பட்டிருந்த ஒரு அறைக்கு மாற்ற ஏற்பாடாயிற்று. ஹெட்மாஸ்டர் பார்வை அங்கு சதா படும் ஆதலால் பையன்கள் அடக்க ஒடுக்கமாக இருப்பார்கள் என்ற எண்ணமே இதற்குக் காரணம்.

அந்த அறை காம்பவுண்டுச் சுவரை ஒட்டி தனித்திருந்தது. அதன் இருபக்கங்களிலும் வேப்பமரங்கள் நின்றன. காற்று சுகமாக அறைக்குள் வந்து குளுமைப்படுத்தியது.

தமிழ்ப்பாடம் நடத்திக் கொண்டிருந்த வீரபாகு பிள்ளை, கடைசி பெஞ்சில் அமர்ந்திருந்த குற்றாலமும் நண்பர்களும் பாடத்தை கவனிக்காமல், கண்களை மூடியவாறு சாய்ந்திருந்ததைப் பார்த்தார். அவர் கிண்டலும் கேலியுமாக, நக்கலும் நையாண்டியுமாகப் பேசி மாணவர்களைப் பரிகாசம் செய்து மகிழ்கிறவர்.

'காலையிலே வீட்டிலே பொதுவா பழையச் சோறுதான் சாப்பிடு றாங்க. மண்பானையிலே நீத்தண்ணியிலே ஊறி ஜில்லுனு இருக்கிற பழையச் சோற்றை திருகப் பிழிஞ்சு, மலையாள மரவையிலே போட்டு, முன்னீர்ப்பள்ளம் கட்டித் தயிறை ஊத்திப் பிசைஞ்சு, தொட்டுக்கிடுற துக்கு சுண்டக்கறிவும் மோர்மிளகா வத்தலும் வச்சுக்கிட்டு சாப்பிட்டா, வயிறு முட்ட ஒரு புடி புடிக்கத்தான் தோணும். அப்படி உண்டுட்டு வந்தா படிக்கவா தோணும்? சுகமா சாய்ந்து தூங்கத் தான் தோணும். வேப்பமரத்துக் காத்து வேறே குளுகுளுன்னு இருக்குதா! கேட்பானேன்? குற்றாலம் அன்ட் கம்பெனி மாதிரி சுகநித்திரையை அனுபவிக்க கொடுத்து வைத்திருக்கணும்!' என்றார்.

பையன்கள் ரசித்துச் சிரித்தார்கள். 'என்ன குற்றாலம்! உட்கார்ந்து தூங்குறதை விட படுத்துக்கிட்டுத் தூங்கினால் சுகமாக இருக்கும்னு நினைக்கீரா?' என்று வீரபாகு பிள்ளை கிண்டலாகப் பேசினார். 'ஏய்,

நீயெல்லாம் ஏன் பள்ளிக்கூடம் வாறே? தெண்டப் படிப்பு!' என்று தொடர்ந்தார்.

அப்போது யாருமே எதிர்பாராத - எதிர்பார்க்க முடியாத - காரியத்தை செய்தான் குற்றாலம். தனது இடத்தில் எழுந்து நின்றான். தமிழ்ப் பாடப்புத்தகத்தை கையில் பற்றியவாறு வாத்தி யாரை நோக்கி வந்தான். வீரபாகுபிள்ளை பேரில் அவனுக்கு ஏற்கனவே கடுப்பு. அடிக்கடி அவனை அவர் குத்தலாகப் பேசி கிண்டல் பண்ணி வந்தார். இப்போது அது அளவுமீறிவிட்டது என்று அவன் எண்ணியிருக்க வேண்டும். அவன் மேஜை அருகில் வந்து, புத்தகத்தை ஓங்கி வாத்தியாரின் தலை மீது ஒரு அறை அறைந்தான். அடுத்து மூஞ்சியில் ஒரு அடி கொடுத்து, புத்தகத்தை அவர் மீது வீசிவிட்டு வெளியேறினான். வேகமாகப் போய், காம்பவுண்டுச் சுவர் மீது தாவிஏறி மறுபக்கம் குதித்து ஓடிவிட்டான்.

அவன் பின்னாடியே வந்த அவனது நண்பன் ஒருவன் பாடநூலை பலம்கொண்டமட்டும் கிழித்து, கிழிந்த தாள்களை பூ தூவுவது போல் வாத்தியார் தலை மீது சிதறிவிட்டு, வேகமாக வெளியே ஓடி, சுவரேறிக் குதித்து, குற்றாலத்தைப் பின்பற்றினான்.

வகுப்பில் பரபரப்பு ஏற்பட்டது. அதிர்ச்சி அடைந்த வாத்தியார் சிறிது நேரத்துக்குப் பிறகு, 'பியூன்! பியூன்!' என்று கத்தினார்.

அவர் கூவுவதைக் கேட்டு, ஹெட்மாஸ்டர் அறை முன் காவலிருந்த சேவகன் வருவதற்குள் குற்றாலமும் நண்பனும் போன திசை தெரியாமல் ஓடி மறைந்தனர். பிறகு தலைமை ஆசிரியர் வந்தார். விசாரித்தார். போனார்.

என்ன செய்ய முடியும் அவர்களால்? குற்றாலமும் சினேகிதனும் அதன் பிறகு பள்ளிக்கூடம் பக்கம் அடி எடுத்து வைக்கவேயில்லை.

இப்படி முரட்டுத்தனம் பண்ணுகிற, குறும்புகள் செய்கிற மாணவர்கள் எல்லாக் காலங்களிலும், எல்லா ஊர்களிலும் இருந்தார்கள் - இருப்பார்கள்! என் அப்பா படித்த போது அவரும் நண்பர்களும் பள்ளியில் செய்த அட்டகாசங்கள் பற்றி பெருமையாக, வீர சாகசக் கதை மாதிரி, சொன்னது உண்டு. பிற்காலத்திலும், மாணவர்கள் வாத்தியார்கள் போக்குகள் பற்றி அவ்வப்போது அநேகர் சொல்லியிருக்கிறார்கள்.

நான் படித்துக் கொண்டிருந்த வருடங்களில் தான் பாளையங் கோட்டை திருநெல்வேலிக்கு வீதிகள் தோறும் மின்விளக்குகள் வந்தன. 1933இல் வேலை ஆரம்பித்து 1934இல் நிறைவு பெற்று, தெரு விளக்குகள் மின்மயம் ஆயின.

தூத்துக்குடி திருநெல்வேலி எலெக்ட்ரிக் சப்ளைகம்பெனி என்றொரு தனியார் நிறுவனம் அந்தப் பணியை ஏற்றுச் செய்துமுடித்தது. நெடுக பள்ளங்கள் தோண்டியது, இரும்புக் கம்பங்கள் கொண்டு வந்து குழிகளில் நாட்டியது, வயர் இழுத்தது, மங்கிய காவி வர்ணத்திலிருந்த கம்பங்களுக்கு முதலில் ஆரஞ்சு வர்ணம் அடித்து, அது உலர்ந்ததும் அதன் மேலே 'சில்வர் பெயின்ட்' பூசியது, கம்பங்கள் வெள்ளிமயமாய் பிரகாசித்தது, உரிய காலத்தில் விளக்குகள் எரியத் தொடங்கியது எல்லாம் அனைவருக்கும் வேடிக்கைக் காட்சிகளாய்பட்டன.

தெரு விளக்குகள் மின்மயமானதைத் தொடர்ந்து, கட்டிடங்கள் கடைகள் வீடுகள் பலவற்றிலும் மெதுமெதுவாக மின்சாரம் புகுந்தது. இப்படியாக பாளையங்கோட்டை திருநெல்வேலி நகரங்கள் நாகரிக வளர்ச்சி பெற்றதை என் மாணவப் பருவத்தில் நான் கண்டறிய மடிந்தது.

அடுத்து அந்த வட்டாரத்துக்கு சினிமா வந்தது.

வீரராகவபுரத்துக்கும் (திருநெல்வேலி ஜங்ஷன்) டவுணுக்கும் இடையேயுள்ள சுவாமி நெல்லையப்பா ஹைரோடில், ஒரு இடத்தில், நெல்லை அரிசியாக அரைத்துக் கொடுக்கும் 'ரைஸ் மில்' ஒன்று இருந்தது. நீளமும் அகலமும் கொண்ட பெரிய கட்டிடம். அதன் சொந்தக்காரர் மில்லை மூடிவிட்டு, கட்டிடத்தை சினிமா தியேட்டராக மாற்றினார். உரிய ஏற்பாடுகள் பலவும் செய்து, 'லில்லி சினிமா' எனப் பெயரிட்டு, படங்கள் திரையிடலானார்.

நல்ல வரவேற்பும் பண வசூலும் கிட்டியது. படங்கள் ஆடுது ஓடுது, சண்டைபோடுது என்னவெல்லாமோ செய்து என்று ஜனங்கள் அதிசயித்து, பார்த்து மகிழக் குழுமினார்கள். பேசாப் படங்கள் தான் காட்டப்பட்டன. நகரங்களைச் சேர்ந்தவர்களும், பக்கத்து கிராமங் களிலிருந்து வந்தவர்களும் தியேட்டரை மொய்த்தார்கள். அமெரிக்கப் படங்களும் இந்திப் படங்களும் தான் ஓடின. தமிழில் படம் பிடிக்கும் முயற்சிகள் அப்போது தான் மேற்கொள்ளப்பட்டிருந்தன.

ஊரெல்லாம் சினிமாப் படம் பார்த்து ஆச்சர்யப்பட்டுக் கொண்

டிருந்த போது, எனக்கும் என் சகோதரர்களுக்கும் அந்த ஆசை ஏற்படாமல் இருக்குமா? இருந்தாலும் நீண்டநாள் வரை எங்கள் எண்ணம் நிறைவேற வில்லை.

அப்பா இறந்ததற்குப் பிறகு எங்கள் குடும்பத்தில் பொருளாதார சிரமம் தலைகாட்டியது. அப்பாவுக்கு இறுதிக்கால வைத்தியச் செலவுகள் செய்தது, சாவு செலவுகள், மற்றும் முதல் ஆண்டுத் திவசம் கொடுத்த செலவு முதலிய வகைக்காகக் கடன் வாங்க வேண்டியிருந்தது. அந்தக் கடன்களை அடைப்பதற்காக, ராஜவல்லிபுரத்தில் இருந்த வயல்களில் ஒன்றை விற்க நேரிட்டது. நகரத்தில் வசித்து, நான்கு பேர் படித்துக் கொண்டிருந்த செலவு இருக்கவே இருந்தது. வயலில் விளைந்து வந்த நெல்லை வைத்துத் தான் செலவுகளை சரிக்கட்ட வேண்டும். சில 'பூ'வில் நெல் விளையாமல் போய்விடும். அப்படி வறட்சி ஏற்பட்ட காலத்தில், வீட்டுச் செலவுகளை சரிக்கட்ட மிகவும் சிரமப்பட நேரிடும்.

இதனால் எல்லாம் அம்மா கண்டிப்பாக இருந்தாள். அநாவசிய மான செலவுகளை அங்கீகரிப்பதில்லை. சினிமா பார்க்கப் போவது வீண் செலவு என்று கருதினாள். எனவே படம் பார்க்கப் போவதற்கான வாய்ப்பு எங்களுக்குக் கிட்டவேயில்லை.

எனினும், ஊர்நெடுக சினிமா பற்றிய பேச்சாக இருந்ததாலும், ஆண்களும் பெண்களும் ஆடி ஓடும் படங்கள் பற்றி அதிசயமாகப் பேசி மகிழ்ந்ததாலும், அந்த அதிசயத்தை நாங்களும் பார்க்க வேண்டியது தான் என்று அம்மா மனம் இரங்கினாள். ஒரு படம் பார்க்கப் போகலாம் என அனுமதித்தாள்.

அமெரிக்கப்படம் ஒன்று திரையிடப் பட்ட நாளில் நாங்கள் போய்ப் பார்த்தோம். 'குதிரை வீரன்' என்று தமிழில் பெயர் சொல்லப்பட்டது. அதன் இங்கிலீஷ் பெயர் என்னவோ தெரியாது. ரிச்சர்ட் டால்மேஜ் என்பவர் முக்கியநடிகர். குதிரை சவாரி, சண்டைகள், வீர சாகசங்கள், நிலாக் காட்சிகள் என்று பார்ப்பதற்கு சுவாரசியமாக இருந்தது.

பேசாப் படங்கள் (ஊமைப் படங்கள் என்று ஜனங்கள் குறிப்பிட்டார்கள்) என்பதால், படத்தின் கதை பார்ப்பவர்களுக்குப் புரிய வேண்டும் என்ற நோக்கத்தோடு, திரையருகே ஒரு ஆள் அமர்ந்து, கதை ஓட்டத்தை, நிகழ்ச்சிகளை, பாத்திரங்கள் பேசுவதை எல்லாம், தன் மனம் போக்கில் உரத்த குரலில் விவரித்துக் கொண்டிருப்பான். அந்தக் கதை சொல்லி திருநெல்வேலி வட்டாரத்தில் 'ட்ரான்ஸ்லேட்டர்'

என்று குறிப்பிடப்பட்டான். படத்தை முன்னதாகவே பார்த்து அவன் கதை, பேச்சு முதலியவற்றைப் புரிந்து வைத்திருப்பான். படம் பார்ப்போருக்காக அவன் விவரிக்கும் போது, அவன் தனது கற்பனைத் திறத்தையும் கலந்து சுவையாகப் பேசுவான்.

அதோ வாறான் பார் மொட்டைக்கத்தி வீரன்!, இப்ப குண்டுப் பெருச்சாளி ஓடுறான்... என்டா நிற்கிறே ஏய் அமாவாசை!... புளி மூட்டை நடக்க முடியாமல் நடக்கிறான்... அடேய், திருப்பூர் பருப்பு மூட்டை, ஏன்டா முழிச்சுக்கிட்டு நிக்கிறே? ஓடு ஓடு! இப்படி இஷ்டத்துக்கு 'அடித்து விடுவான்' அந்தக் கதைசொல்லி.

அவன் சிறிது நேரம் பேசாமல் ஓய்ந்திருந்தால், படம் பார்க்கிறவர் கள் கத்துவார்கள். ஏய் ட்ரான்ஸ்லேட்டர்! கதையை சொல்லு என்று கூச்சலிடுவார்கள். அவன் பேச்சை தொடர்ந்தால் தான் அமைதியாக இருப்பார்கள்.

'குதிரை வீரன்' படம் பார்த்ததற்குப் பிறகு, சில வாரங்கள் கழிந்த பின், இந்திப் படம் ஒன்றும் நாங்கள் கண்டுகளித்தோம். படத்தின் பெயர் நினைவில்லை. அந்நாள்களில் இந்தி பேசாப் படங்களில் பெரும்பெயர் பெற்றிருந்த நடிகர்களில் ஒருவரான மாஸ்டர் விட்டல் என்பவரும், நகைச் சுவை நடிகர் கோரியும் நடித்த படம்.

படங்கள் தொடர்ந்து வந்தன, ஓடின, போயின. ஆயினும் அவற்றில் எதையும் பார்க்கக் கூடிய வாய்ப்பு எங்களுக்குக் கிட்டவில்லை.

கால ஓட்டத்தில் படம் பேசலாயிற்று. பேசும் படங்கள் தொடர்ந்து வரலாயின. தமிழிலும் பேசும் படங்கள் தயாரிக்கப் பட்டு வெளிவந்தன. முதல் படம் 'காளிதாஸ்' கூட திருநெல்வேலிக்கு வந்தது.

பாளையங்கோட்டையில் 'டூரிங் டாக்கீஸ்' தலைகாட்டியது. கர்சான் மைதானத்தில், டென்ட் அமைத்து, படம் காட்டினார்கள். அங்கு ஒரே ஒரு தடவை, 'சீனிவாச கல்யாணம்' என்ற படம் பார்க்க முடிந்தது.

திருநெல்வேலியில் நாடகங்கள் முகாமிட்ட போதும், பாளையங் கோட்டைக்கு சர்க்கஸ் வந்த போதும், பின்னர் சினிமாக்கள் காட்டத் தொடங்கிய போதும், அவற்றை எல்லாம் பற்றி ஜனங்களுக்கு எடுத்துச் சொல்வதற்கு 'நோட்டீஸ்கள்' கொடுக்கப்படுகிற வழக்கம் இருந்தது.

குதிரை வண்டியில் சிலர் இருப்பர். பாண்டு வாத்தியத்தை ஒலி எழுப்பிய படி - ட்ரம்மில் தட்டி ஓசைப்படுத்தியும், ஊது குழலில் ஒலி

கொடுத்தும் - கவனத்தைக் கவர்வர். ஒரு ஆள் விதம் விதமான கலர் தாள்களில் அச்சிடப்பட்ட நோட்டீஸ்களை கொடுத்தபடி இருப்பான்.

வண்டியின் பின்னே சிறுவர் சிறுமிகள், 'சார், சார்! எனக்கு நோட்டீஸ்' என்று குரல் கொடுத்துக் கொண்டே ஓடுவர். சில சமயம் ஒவ்வொருவர் கையிலும் அந்த ஆள் நோட்டீஸ் கொடுப்பான். சில வேளை அஞ்சாறு தாள்களை கத்தையாக அள்ளி ரோடில் வீசுவான். சிதறி விழும் அவற்றைப் பிடிக்க பிள்ளைகள் போட்டிபோடுவார்கள்.

இப்படி நோட்டீஸ் வாங்குவதற்காக வண்டி பின்னேயே ஓடும் சிறுவர் கூட்டத்தில் நானும் என் தம்பியும் சேர்ந்து கொள்வோம். வெகுதூரம் ஓடி, நிறைய நோட்டீஸ்கள் சேர்த்துக் கொண்டுதான் வீடு திரும்புவோம்.

இவ்விதம் சேகரிக்கப்பட்ட பல வர்ணத் தாள்களை பிறகு அளவாக வெட்டி, வளையங்களாக ஒட்டி, பல வளையங்களைக் கோர்த்து நீண்ட சங்கிலியாக அமைப்போம். அண்ணன்களும் சங்கிலி செய்வதில் ஒத்துழைப்பார்கள். அப்படிச் செய்த பல வர்ணக் காகித வளையச் சங்கிலியை அறைச் சுவர்களில் அலங்காரமாக மாட்டி வைப்போம்.

பொருள்கள் எல்லாம் மலிவாகக் கிடைத்த காலம் அது. ஒரு பவுன் விலை பதிமூன்று ரூபாய் தான். நெல்லும் மலிவு தான். ஒரு கோட்டை நெல் பதிமூன்று ரூபாய்க்கு விற்றது. அரிசி ரூபாய்க்கு எட்டுப்படி, பத்துப்படி என்று விற்ற காலம்.

நாட்டில் நெல் விளையாமல் போன காலங்களில், பிரிட்டிஷ் அரசு பர்மாவிலிருந்து அரிசியை இறக்குமதி செய்து உதவியது. அருமையான அரிசி ரூபாய்க்கு பத்துப்படி கிடைக்கும். பர்மா அப்போது தனியாகப் பிரிக்கப்படவில்லை. இந்தியாவுடன் இணைந்தே இருந்தது. இந்தியாவை அரசாண்ட பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்ட பிரதேசம் அது.

நான் ஆறாவது பாரம் (எஸ்.எஸ்.எல்.சி) படித்துக்கொண்டிருந்த வருடம் தான் உலகில் யுத்தமேகங்கள் திரள ஆரம்பித்திருந்தன. முசோலினி இத்தாலிய சர்வாதிகாரியாக வளர்ந்திருந்தான். ஜெர்மனியில் ஹிட்லர் சர்வாதிகாரம் பெற்றுக்கொண்டிருந்தான்.

இத்தாலி ஆப்பிரிக்காவில் உள்ள அபீசினிய நாட்டின் மீது பாய்ந்தது. அங்கு ஹெய்லி சலாசி என்ற ஆப்பிரிக்க மன்னனின் ஆட்சி நடந்தது. முசோலினி, ஹிட்லர், ஹெய்லி சலாசி பற்றி எல்லாம்

பத்திரிகைகளில் செய்திகளும் கட்டுரைகளும் படங்களும் மிகுதியாக இடம் பெற்று வந்தன.

நான் நான்காவது பாரம் படித்துக் கொண்டிருந்தபோது, மீண்டும் வீடு மாற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டது. நாங்கள் குடியிருந்த வீட்டின் அடுப்படிப் பகுதி பழுதுபட்டது. அந்த அறையை இடித்து விட்டுப் பெரிதாகக் கட்டினார்கள். வேறு சில பூச்சுமான வேலைகளும் நடந்தன. ஆகவே, அந்த வீட்டின் வாடகை அதிகமாக்கப்பட்டது.

அவ்வளவு வாடகை கொடுக்க இயலாது என்பதாலும், அவ்வளவு பெரிய வீடு எங்களுக்குத் தேவையில்லை என்ற எண்ணத்தாலும், வேறு சிறிய வீடு பார்க்கப்பட்டது. இந்த வீடு ரோடை ஒட்டியதாக எடுப்பாக இருந்தது. அதை ஒட்டிய சிறு முடுக்கு (சந்து) ஒன்றில், மூன்று வீடுகள் கொண்ட ஒரு வளைவு ('வளவு' - காம்பவுண்ட்) இருந்தது. அவற்றில் சிறிதாக இருந்த வீடு எங்களுக்காகத் தேர்வு செய்யப்பட்டது.

இதுவரை வசித்த காம்பவுண்டிலும் மூன்று வீடுகள் தான். தெற்கு ஓரத்து வீட்டில் நாங்கள் குடியிருந்தோம். அதற்கு முந்திய நடுவீட்டில் முதலில் வசித்த குடும்பம் - கடை வியாபாரி வைகுண்டம் பிள்ளை குடும்பம் - சிறிது காலத்தில் வீட்டைக் காலி செய்துவிட்டுப் போயிற்று.

அந்தக் குடும்பம் மனித இயல்புகளை எடுத்துக்காட்டும் காட்சி சாலை போல் தோன்றியது எனக்கு. வைகுண்டம் பிள்ளை மனைவி செல்லம்மாள் இளவயதுப் பெண். கொஞ்சம் நாகரிகமானவள். கணவன் அவளை கட்டுப்படுத்தி வைத்ததில்லை. அவளுக்கு ஒரு சிநேகிதி, முடுக்கு வீடுகளில் ஒன்றில் வசித்தாள். சிவகாமி என்று பெயர்.

இரண்டு பேரும் வாய்க்காலுக்குத் தண்ணீர் எடுக்கப் போனால், சீக்கிரம் வீடு திரும்பமாட்டார்கள். வேடிக்கையும் விளையாட்டுமாகப் பேசிச் சிரித்துப் பொழுது போக்கி மகிழ்வார்கள். இரண்டு பேருமே நல்ல 'ஜாலி டைப்.' ரப்பர் பாம்பு ஒன்றை குடத்துள் மறைத்து எடுத்துச் செல்வர். வாய்க்காலில் குனிந்து குடத்தில் தண்ணீர் நிரப்பும் போது, பாம்பு பொம்மையை எடுத்து தண்ணீரில் போடுவார்கள். ஐயோ, பாம்பு பாம்பு என்று ஒருத்தி கூச்சலிடுவாள். மற்றவளும் இதோ பாம்பு, இந்தா வருது, அந்தா போகுது என்று கலவரப்படுத்துவாள். அண்டை அயலில் நிற்கிற பெண்கள் பயந்தடித்து படிகளில் ஏறிப் பரபரப்பார்கள்.

இப்படி 'காபுராப்படுத்தி' களிப்படைந்தபிறகு, ஒருத்தி துணிச்சலாக 'தண்ணிப் பாம்பு தான். பயம் எதுக்கு!' என்று சொல்லி அதைப்

பிடிப்பாள். அட, வெறும் ரப்பர் பாம்பு என்று மற்றவள் சொல்லிச் சிரிப்பாள். இந்த விளையாட்டு ஒரு சில நாள்களுக்கு அவர்களுக்கு மகிழ்வளித்தது.

இவ்விதம் அவ் இருவரும் ஏதாவது குறும்புத்தனம் செய்து சந்தோஷம் அடைந்தார்கள். கால ஓட்டத்தில், ஏதோ மனபேதத்தால், இரு தோழிகளுக்குமிடையே பிணக்கு ஏற்பட்டது. அதனால் அவர்கள் நட்பும் முறிந்து போயிற்று.

செல்லம்மாள் குடும்பத்திலும் பெரும் பிணக்கு தலைகாட்டியது. வைகுண்டம் பிள்ளை, மனைவி செல்லம்மாள் இருவருடன் பிள்ளையின் தாயும் தம்பியும் உடன் வசித்தார்கள். முதியதாய் நோய்வாய்ப்பட்டு இறந்துபோனாள். தாய் இறந்த மறுநாளே அண்ணனுக்கும் தம்பிக்கும் சொத்துத் தகராறு எழுந்தது. பாகப் பிரிவினை பண்ண வேண்டும் என்ற சண்டை பெரிதாயிற்று. தம்பிக்கு கல்யாணம் ஆகியிருக்கவில்லை. இருப்பினும் அவன் பிடிவாதமாக தாயின் உடைமைகளில் அது இது வேண்டும் என்று முரண்டு பண்ணி, கூப்பாடு போட்டு அடம் பிடித்தான். குடும்பத்துக்கு வேண்டிய உறவினர்கள் கூட இருந்து முடிவு பண்ணி ஒருமாதிரியாக வீட்டிலிருந்த உடைமைகளை - உலக்கை, அகப்பைகள், பாத்திர பண்டங்கள் அனைத்தையும் - இரண்டாகப் பிரிவினை செய்து கொடுத்து அமைதிப்படுத்தினார்கள்.

சொத்து ஆசை மனிதர்களை என்னமாய் ஆட்டிப் படைக்கிறது என்பதை எடுத்துக்காட்டியது அந்த நிகழ்ச்சி.

தம்பி மறுநாளே தனது உடைமைகளுடன் வெளியேறினான். சில நாள்களில் வைகுண்டம் பிள்ளையும் மனைவியும் வேறு தெருவுக்குக் குடியேறினார்கள்.

நடுவில் இருந்த அந்த வீட்டுக்கு வேறொரு குடும்பம் வந்தது. குடும்பத் தலைவியான ஒரு விதவை. அவளது இரண்டு மகன்கள். மூத்தவன் காலேஜில் படித்துக் கொண்டிருந்தான். இளையவன் ஹைஸ்கூலில்.

காலேஜ் மாணவன் 'ஜாலிடைப்'. அவனோடு சேர்ந்த 'ஜாலி பிரதர்கள்' தினசரி அங்கே வந்து 'டேரா போட்டு' உல்லாசமாகப் பொழுது போக்குவார்கள். உல்லாசக் கதைகள் சொல்லி மகிழ்வார்கள். தங்கள் நகைச் சுவையை தாங்களே ரசித்து, வாய்விட்டுச் சிரிப்பார்கள். தம்பி அமைதியானவன்.

நாங்கள் வீட்டைக் காலிபண்ணிவிட்டு, அதை ஒட்டிப் பின்னாடியே, முடுக்கினுள் ஒதுங்கியிருந்த, ராமசாமி பிள்ளை காம்பவுண்ட் வீட்டுக்குக் குடிபுகுந்தோம். வளைவில் முதலாவதாக இருந்த சிறுவீடு. ஒரே அறை. அதை ஒட்டிய அடுப்படி. ஆனால் சவுகரியமான மச்சு இருந்தது.

மத்தி வீட்டில் ராமசாமிபிள்ளை - வயது முதிர்ந்தவர், அவர் மனைவி உலகம்மாள் - அவ்வளவாக வயதாகாதவள், அவளின் சிறுமகள், ஆகிய மூவர் வசித்தனர். இறந்துபோன மூத்த மனைவியின் மகன் சென்னையில் ஏதோ வேலை பார்ப்பதாகச் சொன்னார்கள்.

மூன்றாவதான வடக்கு வீட்டில், ஒரு குடும்பம். அதைச் சேர்ந்தவள் தான், செல்லம்மாளின் தோழியான சிவகாமி. வீட்டு மருமகள் அவள். கணவன் ஆறுமுகம் கொக்கிரகுளம் கோர்ட்டில் பணிபுரிந்தான். சைக்கிளில் போய் வருவான். அவன் தாய், திருமணமாகாத தங்கை மற்றும் கல்யாணமான ஒரு தங்கையும் இருந்தார்கள்.

தங்கையின் கணவன் தூரத்து நகரம் ஒன்றில் உத்தியோகம் பார்த்தவன். விரைவில் வந்து அவளை அழைத்துப் போய்விடுவான் என்று சொல்லப்பட்டது.

அந்தத் தங்கையின் பெயர் கல்யாணி. தினம் தன்னை அழகு படுத்திக் கொள்வதில் இயல்பான ஆர்வம் கொண்டவள். குளித்து சுத்தமாக, நல்ல புடவை உடுத்தி, தலைமுடியை சீவிச் சிங்காரித்து அழகாக இருப்பதில் தனி ஆனந்தம் அனுபவித்தாள் அவள்.

இப்படி இருந்தவள் ஒருநாள் அவசரம் அவசரமாகத் தனது சிங்காரிப்புகளை தானே குலைத்துக் கொண்டாள். சீவி முடித்துப் பூவைத்திருந்த கூந்தலை அவிழ்த்து உதறி வெறும் கொண்டை போட்டுக் கொண்டாள். உடுத்தியிருந்த பளிச் வர்ணப் புடவையைப் போக்கி, சாதாரண கைத்தறிப் பழைய புடவை ஒன்றைக் கட்டிக் கொண்டாள்.

அவளது இந்தச் செயலுக்குக் காரணம் பிறகு தான் புரிந்தது. அவள் கணவன் வந்து சேர்ந்தான். முசுடு அவன் என்று தெரிந்தது. சந்தேகப் பேர்வழி. மனைவி நல்ல சேலை கட்டிக் கொண்டு, சீவிச் சிங்காரித்து பளிச்சென்று விளங்கினால், யாருக்காக அவள் இதை எல்லாம் செய்கிறாள் என்று சந்தேகிப்பவன் அவன். அதற்காக அவளைக் கோபித்துச் சண்டைபோடுவதோடு, அடிகொடுக்கவும் தயங்காதவன். கணவனுடைய கல்யாண குணங்களை கல்யாணி பின்னர் மற்றவர் களுக்கு எடுத்துச் சொன்னாள்.

ஆறுமுகம் அவனுக்கு நேர்முரணாக இருந்தான். மனைவியின் போக்கை ஆதரித்தான். அவள் விரும்பியதையெல்லாம் செய்து கொடுத்தான். சிவகாம சுந்தரி ஐந்தாம் வகுப்பு வரை படித்திருந்தாள். மேற்கொண்டு படிக்க ஆசைப்பட்டாள். ஏதோ ஒரு பள்ளிக் கூடத்துக்குப் போய் வந்தாள். சில நாள்களில் தானாகவே நின்று விட்டாள். சிவகாமி என்று தான் அவளை அழைத்தார்கள்.

சின்னப் பிள்ளைகள் எல்லாம் கேலிபண்ணுது. எனக்கே வெட்கமாக இருக்கு என்று அவள் சொன்னாள். பிறகு சங்கீதம் படிக்க விரும்பினாள். அதற்கான ஏற்பாடுகளை அவள் கணவன் செய்து கொடுத்தான். ஒரு பாகவதர் வீட்டுக்குப் போய் கற்றுக் கொள்ளத் தொடங்கினாள் அவள். தினந்தோறும் மாலையில் சீவிச் சிங்காரித்துக் கொண்டு அவள் போய் வருவது பற்றி அண்டை அயலார் இஷ்டம் போல் பேசஆரம்பித்தார்கள்.

ஆனால் அவள் அதைப்பற்றி சட்டை செய்யாதவளாய், சங்கீதம் கற்கப் போய் வந்து கொண்டிருந்தாள். ஒரு மாதத்திலேயே அவளுக்கு அது அலுத்து விட்டது. பாகவதர் வீட்டுக்குப் போய் வருவதை அவளாகவே நிறுத்திக்கொண்டாள். சங்கீதம் எல்லாம் நமக்கு சரிப்பட்டு வராதுன்னு புரிஞ்சு போச்சு; ஒரு மாதமாகியும் எந்த வித முன்னேற்றமும் இல்லை; பின்னே வீணாக எதுக்குப் போய் கத்துக்கிடணும்; தெண்டச் செலவு என்று அவள் சொன்னாள்.

இப்படி விந்தையான ஒரு 'கேரக்டர்' ஆக நடமாடித் திரிந்தாள் வடக்குவீட்டு சுந்தரி. அவளை நாங்கள் 'அத்தை' என்று அழைத்தோம். அவளைப் பற்றிப் பேசும் போது 'வடக்கு வீட்டு அத்தை' என்று குறிப்பிட்டு வந்தோம்.

வீட்டின் சொந்தக்காரியான உலகம்மாள் எங்களுக்கு உலகுப் பெரியம்மை ஆனாள். அவளும் விநோதமான ஒரு 'கேரக்டர்' தான்.

ஒரு நாள் அவள் ஒரு புதுமாப்பிள்ளை போட்டோ வந்திருக்கு, பாருங்களேன் என்று ஒரு படத்தை எங்களிடம் காட்டினாள். அதில் அவள் தனது கணவன் சட்டை, கோட்டு, அங்க வஸ்திரம், வேட்டி, தலைக்குத் தொப்பி எல்லாம் அணிந்து காட்சி தந்தாள். கண்களுக்குக் கண்ணாடியும் அணிந்திருந்தாள்.

மாப்பிள்ளை எப்படி இருக்காரு என்று கேட்டுச் சிரித்தாள் உலகுப்

பெரியம்மை. ஆம்பிளை வேஷம் போட்டு, படம் பிடித்தால் என்ன என்று தோணிச்சு. அப்படியே போட்டோ எடுத்துக்கிட்டேன் என்றாள்.

இப்படி தனது மகிழ்ச்சிக்காக அவ்வப்போது எதையாவது செய்து கொண்டிருந்தாள் அவள். ஒரு நாள் அவளது விளையாட்டுப் புத்தி விபரீத விளைவில் கொண்டு போய் விட்டது.

இருட்டி இருந்தது. இன்னும் ஏழு மணி ஆகவில்லை. வீடுகளுக்குள் மங்கலான விளக்குகள் எரியுமே தவிர, மூன்று வீடுகளுக்கும் பொதுவான முற்றத்தில் விளக்கு எதுவும் கிடையாது. வெளிக்கதவு (கம்பி அளிக்கதவு) சும்மா சாத்தப்பட்டிருந்தது. வடக்கு வீட்டில் பெண்கள் வெளியே தார்சாவில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். திடீரென்று உலகுப் பெரியம்மை திருடன் திருடன் என்று கத்தினாள். மூடி முக்காடு போட்டுக் கொண்டு, வெளிக்கதவை ஒட்டிய சுவர் மூலையில் பதுங்கிக் கொண்டாள்.

வடக்கு வீட்டுப் பெண்கள் எங்கே எங்கே என்று கத்திக் கொண்டு எழுந்து நின்றார்கள். அடுத்து அவர்கள் என்ன செய்திருப்பார்களோ தெரியாது. யாரும் எதிர்பாராத விதத்தில் செயல்கள் நடந்துவிட்டன.

வீடு இருந்த முடுக்கு கோபாலசாமி கீழரத வீதிக்கும், கிழக்குப் பக்கமிருந்த சௌராஷ்டிரர் தெருவுக்கும் இடைப்பட்ட ஒடுங்கிய வழியாக நீண்டு கிடந்தது. ஒரு இடத்தில், வீடுகளுக்கிடையே சிறு வெட்ட வெளி. அதை 'பட்டு நூல்கார' இளைஞர்கள் (சௌராஷ்டிரப் பையன்கள்) தேகப் பயிற்சி செய்யும் இடமாக ஆக்கியிருந்தார்கள். 'பார் விளையாடுவதற்கு' வசதியாகக் கம்புகள் நட்டிருந்தார்கள். கரளாக் கட்டை சுழற்றுவார்கள். பஸ்கி, தண்டால் எல்லாம் செய்து மகிழ்வார்கள்.

'பட்டுநூல்காரத் தெரு'விலிருந்து வருகிற இளைஞர்கள் தவிர, அவர்களில் சிலருக்கு நண்பர்களான வேறு சில இளைஞர்கள் கோபால சாமி கோயில் வீதிகளிலிருந்து இந்தப் பக்கமாக வந்து விளையாடி விட்டுத் திரும்பிச் செல்வார்கள். அன்று, முன்னிரவில், இந்த வீட்டுக்குள்ளிருந்து திருடன் திருடன் என்று பொம்பிளைக் குரல் கூச்சலிடுவதை, முடுக்கில் 'பார் விளையாடி' விட்டுத் திரும்பி நடந்து கொண்டிருந்த இளைஞர்கள் கேட்க நேரிட்டது.

ஆண்கள் இல்லாத வேளையில், முன்னிரவு இருட்டு நேரத்தில், எவனோ களவாணிப் பயல் வீட்டு வளைவுக்குள் புகுந்திருக்கிறான்;

அது தான் பொம்பிளை பயந்து கூச்சல் போடுகிறாள் என்று அந்த இளைஞர்கள் - மூன்று பேர் - எண்ணிவிட்டார்கள். உடனேயே வளைவு வீட்டின் முன் இடத்தில் புகுந்து, வாசலின் அளிக்கதவை பலமாகத் தள்ளினார்கள். கதவு உள்புறம் தாழிடப் படாததால் சடாரென்று திறந்து கொண்டது.

மூன்று பேர்களில் ஒருவன் கையில் இரண்டு முருங்கைக் காய்கள் வைத்திருந்தான். வழியில் ஒரு வீட்டு மரத்தில் காய்த்துத் தொங்கிய காய்களில் இரண்டை அவன் பறித்து வந்திருந்தான். தன் வீட்டுக்குக் கொண்டு போவதற்காகத் தான். இப்போது அவை அடிக்கிற குச்சிகளாகப் பயன்பட்டன அவனுக்கு.

திருட்டுப் பய எங்கே என்று கத்திக் கொண்டு மூன்று பேரும் உள்ளே புகவும், மூலையில் பதுங்கி நின்ற உலகம்மாள் என்ன செய்வது என்று விளங்காமல் திகைத்துப் போனாள். அவளுக்குப் பேச்சு எழவில்லை.

இதற்குள் சுவர் மூலையில் மூடிமுக்காடிட்டு நின்ற உருவத்தை முருங்கைக்காய்ப் பேர்வழி கண்டுகொண்டான். இதோ நிற்கான் திருட்டுப்பய என்று கூறி, அந்த உருவத்தை முருங்கைக் காய்களால் அடிஅடி என்று அடித்தான். உலகம்மாள் வாய்திறக்காமல் நிற்கவே, அறைகள் பலமாக விழுந்தன.

வடக்கு வீட்டிலிருந்து ஒரு அம்மாள் கைவிளக்கை எடுத்து வந்தாள். எங்கள் வீட்டிலிருந்து அண்ணன் 'மேசை விளக்கை' எடுத்துக்கொண்டு வெளியே வந்தான். நாங்களும் வேடிக்கை பார்க்கக் கூடினோம்.

வெளிச்சம் வந்ததும், அடித்தவன் ஆளை இனம் கண்டு கொண்டான். அவன் அந்த வீட்டாருக்கு நன்கு அறிமுகமானவன். அக்கா நீயா? என்று ஆச்சர்யத்தோடு கேட்டான்.

அவள் வெட்கத்தால் கோணிக்குறுகி நின்றாள். அவளால் பேச இயலவில்லை. தலை கவிழ்ந்தபடி மவுனமாக நின்றாள்.

நெசத் திருடன் யாரும் வரலே. அக்கா எங்களை பயப்படுத்தணும் கிறதுக்காக விளையாட்டாத் திருடன் திருடன்னு கூச்சல் போட்டா. தெருவோடு போன நீங்க நெசமாத் திருடன் வந்திருக்கான்னு நெனச்சு உள்ளே வந்துட்டீங்க என்று சுந்தரி விளக்கம் கூறினாள்.

நல்ல விளையாட்டு தான் போ. முருங்கைக்காய் இரண்டும் நார்

நாராப் பிஞ்சு போகிற அளவுக்கு நான் அடிகொடுத்திருக்கேன். முதல் அடி விழுந்ததுமே அக்கா தடுத்து நிறுத்தி நான் தான்னு சொல்லி யிருக்கலாமில்லே? என்று அவன் பேசினான்.

ராத்திரி நேரத்திலே இதென்ன விளையாட்டு! இப்ப லேசாப் போச்சு. விபரீதமா வேறு யாராவது வந்து தாறுமாறாக அடித்து உதைத்திருந்தால் என்னாகிறது என்று அவன் சொன்னான். திரும்பி நடந்தான். அவனோடு வந்தவர்களும் போனார்கள்.

அவர்கள் போனபிறகு, இப்படி நடக்குமின்னு நான் நினைக்கவே யில்லை. விளையாட்டு விபரீதமாயிட்டுது என்று சொல்லிச் சிரித்தாள் உலகம்மாள். அப்புறம் அவள் இத்தகைய குறும்புத் தனங்களில் ஈடுபடவில்லை.

எங்கள் வீட்டில் 'டேபிள் லேம்ப்' (மேசை விளக்கு) என்கிற பெரிய விளக்கு, 'பெட்ரூம் லைட்'எனும் சிறு விளக்கு, இவை தவிர நாலு அடி உயரமிருந்த அழகான பெரிய குத்துவிளக்கு ஆகிய மூன்று விளக்குகள் இரவு நேரங்களில் எரிந்து வெளிச்சம் தரும். இவற்றின் வெளிச்சத்தில் தான் நாங்கள் பாடம் படித்தோம்.

அண்ணனுக்கு பெரிய மேசை விளக்கு. நானும் தம்பியும் குத்து விளக்கின் இருபக்கங்களிலும் அமர்ந்து படிப்போம்.

அந்தப் பித்தளை விளக்கு, அப்பா பெருங்குளத்தில் வேலை பார்த்த காலத்தில், ஏரல் ஆசாரியிடம் சொல்லிச் செய்தது. குடங்கள், குத்து விளக்கு, செம்பு மற்றும் பாத்திரங்களை பித்தளையில் லெட்சணமாகவும் கனமானவையாகவும் செய்து விற்பனைக்கு அனுப்புவதில் ஏரல் ஆசாரிகள் பெயர்பெற்றிருந்தார்கள்.

எங்கள் வீட்டுக்காகச் செய்யப்பட்ட கனமான பெரிய விளக்கின் விலை அக்காலத்தில் வெறும் இருபத்தைந்து ரூபாய் தான். அதைப் போன்ற விளக்கின் விலை இப்போது ஆயிரம் ரூபாய்க்கும் அதிக மாகவே சொல்லப்படுகிறது.

குத்து விளக்கு, கை விளக்கு முதலியவற்றை எரியச் செய்வதற்கு அந்நாள்களில் 'பின்னக் கெண்ணை' (பின்னைக்காய் - அதாவது புன்னைக்காய், புன்னைமரத்தின் காய்களிலிருந்து தயாரிக்கப்படும் எண்ணெய்) தான் உபயோகப்படுத்தப் பெற்றது.

குத்து விளக்கை பூட்டுபூட்டாகக் கழற்றி, அதன் பாகங்களை

தனித்தனியாக வைக்க முடியும். வாரத்துக்கு இருமுறை - வெள்ளி, செவ்வாய்களில் - அப்படிக் கழற்றி, விளக்கை உமிகொண்டு நன்கு தேய்த்து சுத்தப்படுத்துவார்கள். பிறகு தண்ணீரில் குளிப்பாட்டி உலர வைப்பார்கள். பின்னர் மெல்லிய துணிகொண்டு, ஈரம் போகத் துடைத்து, மீண்டும் அதன் பாகங்களை அடுக்கிப் பூட்டி முழு விளக்காக நிறுத்துவார்கள். அப்போது குத்து விளக்கு குளித்து முடித்து அழகாக நிற்கும் சிறுபெண் போலவே தோன்றும்.

விளக்குக்குப் பொட்டிட்டு, பூச்சாத்தி தினமும் வணங்கும் பழக்கம் குடும்பப் பெண்களிடம் நிலைபெற்றிருந்தது.

அண்ணன் கோமதிநாயகம் 1934ல் எஸ்.எஸ்.எல்.சி. தேர்வு எழுதி முடித்தபிறகு, மேசை விளக்கு நான் படிப்பதற்குப் பயன்பட்டது.

1936 மார்ச் மாதம் நான் எஸ்.எஸ்.எல்.சி. தேர்வு எழுதினேன். ஐந்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த தம்பி முருகேசன் ஆண்டு இறுதித் தேர்வு எழுதும் வரை நாங்கள் பாளையங்கோட்டையில் வசித்தோம்.

அதன் பிறகு நகரத்தில் வசிக்க வேண்டியது அவசியம் இல்லை; வீட்டு வாடகை கொடுத்துக் கொண்டு பாளையங்கோட்டையில் இருப்பது அதிகப்படியான செலவுகளுக்கே வகை செய்யும் என்று தீர்மானித்தோம். ராஜவல்லிபுரம் போய் அங்கேயே வசிப்பது தான் நல்லது என்று முடிவு கட்டினோம்.

1936 ஏப்ரல் மாதம் பாளையங்கோட்டையை, நாங்கள் படிப்பதற்காக ஏழு ஆண்டுகள் வசித்த நகரத்தை, விட்டுப் பிரிந்து கிராம வாழ்க்கையைத் தொடங்க ஊர் சேர்ந்தோம்.

## ⌘ 10 ⌘

அப்பா வேலை பார்த்த காலத்தில், வசித்த வெளியூர்களிலிருந்து, ஒரு சில வருடங்களுக்கு ஒருமுறை ராஜவல்லிபுரம் வந்து தங்க நேரிட்டது உண்டு. சில மாதங்கள் அவ்வூரில் வசித்த போதெல்லாம், திரும்பவும் வேறு ஊருக்குப் போய் வாழ வேண்டும் என்ற எதிர்பார்ப்பு இருந்தது. அப்போதெல்லாம் ராஜவல்லிபுரம் வாழ்க்கை 'ஒரு இடைவேளை'யாக - இடைக்கால முகாம் ஆகத்தான் அமைந்தது.

படிப்பதற்காகப் பாளையங்கோட்டையில் வசிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்ட காலத்தில், அப்பா உயிரோடிருந்த வருடங்களில் நாங்கள் ராஜவல்லிபுரம் வந்ததில்லை. 1930இல் அப்பா இறந்த போதும், அதற்கு அடுத்த வருடத்திலும் ராஜவல்லிபுரத்துக்கு நாங்கள் வரவில்லை.

கணவன் இறந்த முதல் வருடம் - முதலாண்டு முழுவதும் - விதவையாகி விட்ட மனைவி வீட்டை விட்டு வெளியே எங்கும் போகவே கூடாது; வெளியூர் பயணம் அறவே கூடாது என்று மதரீதியான கட்டுப்பாடு இருந்தது. 'ஆட்டத் திவசம்' (முதலாம் ஆண்டுத் திதி) கொடுத்து முடிக்கப்பட்ட பிறகு, ஒரு நல்ல நாளில் விதவைப் பெண் திருச்செந்தூர் கோயிலுக்குப் போய், கடல்நீராடி, சுவாமி தரிசனம் செய்துவிட்டு வர வேண்டும். அதன் பிறகு தான் அவள் வெளியிடங்கள் மற்றும் வெளியூர்கள் போய்வரலாம்.

இந்தக் கட்டுப்பாடுகளை சைவவேளாளர் குடும்பப் பெண்கள் தவறாது கடைப்பிடித்து வந்தார்கள். அந்த முதல் ஆண்டு முழுவதும் அவர்கள் 'பத்திய உணவு' (உப்பைக் குறைத்து உணவு உண்ண வேண்டும் என்பது போன்ற கட்டுப்பாடுகளுக்குட்பட்ட உணவு) உண்டு வாழவேண்டும் என்ற விதியும் இருந்தது.

அம்மாவும் அப்படியே கட்டுப்பாடுகள்படி வாழ்ந்து வந்தாள். முதல் ஆண்டுத் திவசத்தை வெகு சிறப்பாகச் செய்து முடித்த பிறகு, உறவு முறை மாது ஒருத்தியோடு அம்மா திருச்செந்தூர் போய் வந்தாள். அடுத்த கோடை விடுமறையில் நாங்கள் பாளையங்கோட்டையில் தங்காமல், ராஜவல்லிபுரம் வந்தோம்.

அதன் பின்னர் ஒவ்வொரு வருடமும், 'பெரியபரீட்சை' முடிந்து, இரண்டு மாத விடுமுறை வந்த போது, நாங்கள் ஊருக்கு வந்து தங்குவது ஒரு நியதியாயிற்று. அப்படி வந்து தங்கிய போதெல்லாம், இது இடைக்கால முகாம் தான்; நாம் மீண்டும் பாளையங்கோட்டை போய் வசிக்க வேண்டும்; படிப்பைத் தொடர வேண்டும் என்கிற ஒரு கட்டாயமும் எதிர்பார்ப்பும் உடன் நிலவியது.

ஆனால், 1936 ஏப்ரலில் ராஜவல்லிபுரம் வந்து சேர்ந்த போது, எதிர்காலம் பற்றிய எந்தவிதமான எண்ணமும் கொள்ள முடிந்ததில்லை. இனிமேல் இந்த ஊரில் தான் வசிக்க வேண்டும் என்ற ஒரு நிலைப்பாடுதான் இருந்தது.

உயர்நிலைப் பள்ளிப் படிப்பைப் படித்து முடித்தாச்சு. மேற்

கொண்டு காலேஜ் படிப்பு படிப்பதற்கு வசதியில்லை. ஆகவே வீட்டோடு இருக்க வேண்டியது தான் என்ற நிலைமையே முன்னின்றது.

வீட்டோடிருந்து என்ன செய்வது? வேறு என்ன செய்ய முடியும்? இத்தனை வருட காலமும் செய்து வந்தது போல, படிப்பதைத் தான் தொடரமுடியும். ஆகவே கண்டதையெல்லாம், கிடைத்த புத்தகங்களை எல்லாம் படிக்கலானேன்.

அப்படிப் படிப்பதற்கு புத்தகங்கள் மிகுதியாகவே கிடைத்துக் கொண்டிருந்தன. 'ஆயிரம் தலைவாங்கிய அதிசய சிந்தாமணி' 'மரகதமணி' 'விக்கிரமாதித்தன் கதைகள்' 'மதன காமராஜன் கதைகள்' போன்ற, எனக்கு முந்திய தலைமுறையினர் பொழுதுபோக்குவதற்கென்று வாசித்துப் பழகிய புத்தகங்கள் கிடைத்தன. அக்காலத்திய நாவலாசிரியர் களான வடுவூர் துரைசாமி ஐயங்கார், ஆரணி குப்புசாமி முதலியார், வை.மு. கோதைநாயகி அம்மாள், ஜே.ஆர். ரங்கராஜு, எஸ்.எஸ். அருணகிரிநாதர் முதலியவர்கள் எழுதிய நாவல்கள் கிராமங்களில் கூட செல்வாக்கு பெற்றிருந்தன. அவையும் படிப்பதற்குக் கிடைத்தன.

எங்களுக்கு அண்ணாச்சி உறவினரான ஒருவர் - பெயர் ராஜ கோபாலகிருஷ்ண பிள்ளை - படிப்பதில் ஆர்வம் உடையவராக இருந்தார். அவருடைய அண்ணாச்சி ஆறுமுகம் பிள்ளையும் நாவல்கள் வாங்கிப் படிப்பதில் அக்கறை கொண்டிருந்தார். இவர்கள் சொத்து உடையவர்கள். ஆறுமுகம் பிள்ளை 'பண்ணையார்' என்று குறிப்பிடப் பட்டு வந்தார். அவர் புத்தகங்கள், பத்திரிகைகள் வாங்கிப் படிப்பதில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தது ஆச்சரியமான விஷயம்தான்.

ஆறுமுகம் பிள்ளையிடம் ஒரு விசித்திரகுணம் இருந்தது. எந்தப் புத்தகம் அல்லது பத்திரிகையைப் படித்தாலும், அதை முடித்ததும், இறுதியில் 'முற்றிற்று' என்று எழுதி, கையெழுத்திட்டு வைப்பார். அதற்கு அவர் காரணமும் சொல்வார். இப்படி எழுதி வைக்காவிட்டால், எந்துப் புத்தகத்தைப் படித்து முடித்தாச்சு, எதைப் படித்தாகவில்லை என்றே தெரியாமல் பிறகு ஒரு சமயத்தில், படித்த புத்தகத்தையே எடுத்துத் திரும்பவும் படிக்க நேரிடும். அது வீண்வேலை; கால நஷ்டம். அதைத் தவிர்ப்பதற்காகவே இப்படி முற்றிற்று என்று எழுதிக் கையெழுத்துப் போட்டு வைக்கிறேன் என விளக்குவார்.

ஆறுமுகம் பிள்ளை 'ஆனந்த போதினி' 'பிரசண்ட விகடன்' ஆகிய

பத்திரிகைகளுக்கு சந்தா கட்டியிருந்தார். அவை தபாலில் வந்தவுடன் அவற்றைப் படித்து விட்டு, எங்களுக்குப் படிக்கத் தருவார்.

'ஆனந்த போதினி' மாதப் பத்திரிகை. அந்நாள்களில் வெளிவந்த இலக்கியப் பத்திரிகை. அக்காலத்தில், இலக்கியம் என்றால் கம்ப ராமாயணமும், திருக்குறளும் தான் முக்கியமாகக் குறிப்பிடப்பட்டு வந்தன. தமிழுக்கே 'கதி' இவ்விரண்டும் தான் என்று பண்டிதர்கள் அடித்துப் பேசி வந்த காலம். ஆகவே, இலக்கியக் கட்டுரைகள் எழுது கிறவர்கள் கம்பராமாயணம், திருக்குறள் இவ் இரண்டைப் பற்றியுமே எழுதிக் கொண்டிருந்தார்கள்.

'ஆனந்த போதினி'யில் ரா.பி. சேதுப்பிள்ளை எழுதிய ராமாயணக் கட்டுரைகள் தொடர்ந்து வெளிவந்தன. தூத்துக்குடி எஸ். பால் நாடார் ராமாயணப் பொருள்கள் குறித்த கட்டுரைகள் எழுதுவதில் பெயர் பெற்றிருந்தார். கதைகளும் இடம்பெறும். அவை சாரமற்ற பழைய பாணிக் கதைகள். 'ஆனந்த விகடன்' பத்திரிகையை ஆரம்பிப்பதற்கு முன்னர், எஸ்.எஸ். வாசன் 'ஆனந்த போதினி'யில் தொடர் கதைகளும் கட்டுரைகளும் எழுதிக் கொண்டிருந்தார். 'மஞ்சள் அறை மர்மம்' என்பது அவர் எழுதிய தொடர் கதைகளில் ஒன்று. அவர் அந்தக் காலத்தில், 'இல் வாழ்க்கையின் இன்பரகசியங்கள்' (தி மிஸ்டரீஸ் ஆஃப் வெட்டட் லைஃப்) என்றொரு செக்ஸ் நூலும் எழுதிப் பெயர் பெற்றிருந்தார்.

1930களின் ஆரம்பத்தில், எஸ்.எஸ். வாசன், 'ஆனந்த விகடன்' பத்திரிகையை வாங்கி, சொந்தமாக நடத்தலானார். பூதலூர் வைத்தியநாத அய்யர் என்பவர் விகடப் பத்திரிகையாக அதை நடத்திக் கொண் டிருந்தார். இரண்டு வருடங்களுக்கு மேல் அவரால் 'ஆனந்த விகட'னை நடத்த முடியவில்லை. எனவே அதை அவர் விற்று விட்டார்.

எஸ்.எஸ். வாசன் 'ஆனந்த விகடன்' இதழை முதலில் மாதப் பத்திரிகையாக நடத்தினார். பிறகு அது மாதம் இருமுறை இதழாக மாறியது. விரைவிலேயே 'மாதம் மும்முறை' என்றாகி, பின்னர் வாரப் பத்திரிகையாக வளர்ச்சிப்பெற்றது.

அவ்விதம் வளர்ச்சி பெறுவதற்காகப் பல்வேறு வியாபார விளம்பர உத்திகளையும் வாசன் கையாண்டார். ஒவ்வொரு இதழிலும் ஒரு எண் அச்சிடப்பட்டிருக்கும். மாதமுடிவில் அதிர்ஷ்டப் பரிசு முறையில், தேர்ந்தெடுக்கப்படும் மூன்று எண்களுக்குப் பரிசுகள் வழங்கப்படும்

என்று அறிவிப்பு செய்து, அத் திட்டத்தை நடைமுறைப்படுத்தினார். 'பகுத்தறிவுப் போட்டி' போன்ற பல விதமான பரிசுப் போட்டிகளைப் புகுத்தினார். பல நகரங்களில் சில வாரங்கள் விகடன் இதழ்களை இலவசமாக விநியோகிக்கச் செய்தார். இதன் மூலம் வாசகர்களிடம் ஒரு ருசியையும் எதிர்பார்ப்பையும் ஏற்படுத்தினார்.

இவற்றுடன், ஆசிரியர் பொறுப்பு வகித்த 'கல்கி' ரா. கிருஷ்ண மூர்த்தியின் எழுத்தாற்றல், கதை சொல்லும் திறமை, நகைச் சுவை, எந்த விஷயத்தையும் வாசகர்களுக்கு எளிதில் புரியும்படி எழுதுதல் போன்ற தன்மைகளாலும் விகடனின் வாசகப் பரப்பு அதிகரித்தது.

சிறுகதைக்கு வரவேற்பும் செல்வாக்கும் கூடி வந்த காலம் அது. எல்லாப் பத்திரிகைகளும் சிறுகதைகளை வெளியிடுவதில் ஆர்வம் காட்டின. சிறுகதைக்கு என்றே 'மணிக்கொடி' பத்திரிகை நடந்து கொண்டிருந்தது. அது சிறுகதையில் புதுமைகள் செய்தது. ஆனந்த விகடனும் பலரகமான சிறுகதைகளையும் வெளியிட்டது.

முதன்முதலாக சிறுகதைக்கென விகடன் ஒரு போட்டி நடத்தியது. அதில் தேர்வு செய்யப்பட்ட மூன்று கதைகளுக்குப் பரிசுகள் வழங்கப் பட்டன. பிறகு, கவி பாரதி நினைவாக ஒரு சிறுகதைப் போட்டி வைத்தது. தொடர்கதையாக வெளியிடுவதற்கு ஏற்ற நாவல்களைத் தேர்ந்தெடுப்பதற்காக நாவல் போட்டி ஒன்றையும் விகடன் நடத்தியது. இவ்வாறு எழுத்தாளர்களுக்கு ஊக்கம் அளித்தது 'ஆனந்தவிகடன்.'

கல்கி எழுதிய, குறுநாவல் பாணியிலான, நீண்ட சிறுகதைகள் வாசகர்களைப் பெரிதும் ஈர்த்தன. பவானி பி.ஏ., பி.எல், மயிலைக்காளை, திருவழுந்தூர் சிவக்கொழுந்து போன்ற கல்கியின் சுவாரசியமான சிறுகதைகள் 1930களில் விகடனில் பிரசுரம் பெற்றன.

தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் விகடன் குறிப்பிடத்தக்க அளவு பணிபுரிந்தது அக் காலகட்டத்தில். பி.ஸ்ரீ. ஆச்சார்யா, கம்ப ராமாயணக் காட்சிகளை 'கம்பசித்திரங்கள்' என்ற தலைப்பில் தொடர்ந்து எழுதிவந்தார். அவற்றுக்கு ஓவியர் சேகர் வரைந்த தனித்தன்மை வாய்ந்த படங்கள் அழகு செய்தன. சாதாரண வாசகர்களுக்கும் கம்ப ராமாயணத்தில் ஒரு ஈடுபாடு ஏற்படச் செய்தன அக் கட்டுரைகள்.

பி. ஸ்ரீ. யின் கம்ப ராமாயணக் கட்டுரைகளுக்கு இருந்த வரவேற்பை யும் பேராதரவையும் உணர்ந்த நிர்வாகத்தினர் தொடர்ந்து பி.ஸ்ரீ.யை எழுதும்படி செய்தனர். 'கம்பசித்திரங்கள்' நிறைவுற்ற பின்னர், 'சித்திர

ராமாயணம்' என்ற தலைப்பில் முழுமையாகவும் விரிவாகவும் கம்ப ராமாயணத்தின் சிறப்புகளையும் நயங்களையும் விவரிக்கும் கட்டுரை களை எழுதினார் பிஸ்ரீ. இத் தொடர் பல வருடங்கள் நீண்டது. ஓவியர் சித்திரலேகா புதிய பாணிச் சித்திரங்கள் தீட்டி இத் தொடரை அணி செய்து வந்தார்.

பழம் தமிழ் இலக்கியங்களிலிருந்து தேர்ந்தெடுத்த பாடல்களை சுவையான கதைகள் போல் விளக்கி பி.ஸ்ரீ. சிறுசிறு கட்டுரைகளும் எழுதிக்கொண்டிருந்தார். வாரம் தோறும் அக் கட்டுரைகளுக்கேற்ற ஓவியம் அட்டைப் படமாக அச்சிடப் பெற்று வந்தது. வாசகர்களில் பலருக்கு தமிழ் இலக்கியச் செல்வங்களை அறிமுகம் செய்து உதவின இக் கட்டுரைகள்.

நாங்கள் ராஜவல்லிபுரத்தில் வசிக்க வந்த பின்னரும், அண்ணன் கோமதி நாயகத்தின் பள்ளிச் சிநேகிதன் ஆனந்த விகடன் இதழ்களைப் படிக்கத் தந்து கொண்டிருந்தான். பதினைந்து அல்லது இருபது நாள்களுக்கு ஒரு முறை அண்ணனும் நானும், ஆற்றைக் கடந்து அக்கரை சேர்ந்து, நடந்தே பாளையங்கோட்டை போய், திருவனந்தபுரம் ரோடில் இருந்த நண்பன் வீட்டுக்குப் போய் விகடன், மை மேகசின் இதழ்களை இரவலாகப் பெற்று வந்தோம். போக நான்கு மைல்கள், வர நான்கு மைல்கள். அப்படி எட்டு மைல்கள் நடந்தது எங்களுக்குச் சிரமமாகத் தோன்றியதில்லை. இனிய உலாவாகத் தான் அமைந்திருந்தது அது.

சில மாதங்களுக்குப் பிறகு நண்பன் வீட்டில் ஏதோ பிரச்சினைகள் தோன்றி விட்டன. அவன் எங்களுக்குப் பத்திரிகைகள் தந்து, திரும்பப் பெற்றுக் கொள்வதில் சிக்கல்கள் தோன்றியதாகப் புலப்பட்டது. அவன் தயங்கித் தயங்கி நிலைமையைக் கூறினான். அவனுக்குத் தொந்தரவு கொடுக்கலாகாது என்ற எண்ணத்தில், நாங்கள் அவனிடம் உதவி பெற்றதை நிறுத்திக் கொண்டோம்.

இனி நாமே விகடன் வாங்கலாம் என்று அண்ணன் முடிவு செய்தார். அப்போது விகடன் விலை இரண்டணா. திருநெல்வேலி ஜங்ஷனுக்குப் போய், அங்குள்ள பத்திரிகை ஏஜன்ட் கடையில் வாங்குவது என்று தீர்மானித்தோம். ஆற்றங்கரைப் பாதை வழியாக நடந்து போய் நடந்து திரும்புவது என்றும் திட்டமிட்டோம்.

ராஜவல்லிபுரத்திலிருந்து செப்பறை ஆற்றுக்கு ஒருமைல் தூரம். ஆற்றங்கரை மீதே இரண்டரை மைல்கள் நடந்தால் சிந்துபூந்துறை என்ற

ஊர் வரும். அதனூடாகப் போய் வீரராகவபுரம் என்கிற திருநெல்வேலி ஜங்ஷனை அடையலாம்.

பஸ் வசதிகள் ஏற்பட்டிராத அந்நாள்களில் பலரும் ஜங்ஷனுக்கும் டவுனுக்கும் போய் வருவதற்கு ஆற்றங்கரைப் பாதையைத் தான் பயன்படுத்தினார்கள். கிராமங்களிலிருந்து தயிர், மோர், நெய் முதலி யனவற்றை கூடைகளில் வைத்து விற்பனைக்கு எடுத்துச் செல்லும் பெண்கள், கொழுந்து, மரு, செவந்திப் பூ போன்றவற்றை சரமாகக் கட்டி விற்பனை செய்வதற்காக நகரங்களுக்குக் கொண்டு போகிறவர்கள், மற்றும் பல்வேறு அலுவல்கள் மீது செல்கிறவர்கள் என அனைவருக்கும் ஆற்றங்கரைப் பாதை உபயோகமாக இருந்தது.

இப்படி நடந்து நடந்து தடம் பட்ட ஒற்றையடிப்பாதை தான் அது. மேடுகள் பள்ளங்கள், வளைவுகள் நெளிவுகள் என்று பதிந்து கிடந்தது தடம். செப்பறைக்குப் பிறகு அருவங்குளம் என்கிற நாரணம்மாள் புரம், அனந்த கிருஷ்ணாபுரம் என்று சில ஊர்கள் வரும். இடையிடையே குளுமையான மாந்தோப்புகள் இருக்கும். ஒரு இடத்தில் ஒரு கல் மண்டபமும் படித்துறையும் உண்டு. அந்த இடத்துக்கு ஜடாயு தீர்த்தம் என்று பெயர். அதை ஒட்டிய நீர்ப்பகுதியில் இறங்கி சிறிது தூரம் நடக்க வேண்டும். அடுத்து மணல் பரப்பு. அதன்பிறகு மீண்டும் ஒற்றையடிப் பாதை. இப்படி நடந்து போய் நடந்து திரும்புவது மனோகரமான பயணமாகத் தான் இருந்தது.

ஆனந்த விகடன் வாங்குவதற்கான இரண்டணா மட்டுமே எங்களிடம் உண்டு. வேறு காசுகள் இரா. அதனால் நிலக்கடலை, பொரிகடலை, காரச்சேவு போன்ற தின்பண்டம் ஏதாவது வாங்கிக் கொரித்தபடி வரலாமே என்று நினைப்பதற்கோ, செயல்புரிவதற்கோ இடமே இருந்ததில்லை.

பிற்பகல் ஒரு மணிக்கு வீட்டை விட்டுப் புறப்பட்டால், ஒரு மணி அல்லது ஒண்ணேகால் மணி நேரத்தில் ஜங்ஷன் போய் சேர்ந்து விடலாம். சனிக்கிழமை மத்தியான ரயிலில் தான் சென்னையிலிருந்து விகடன் பார்சல் ஏஜன்டுக்கு வரும். இரண்டரை அல்லது மூன்று மணிக்கு விகடன் வாங்கிக் கொண்டு நடந்தால், நாலு மணி சுமாருக்கு செப்பறை வந்து சேரலாம். அங்கு ஆற்றுமணலில் உட்கார்ந்து, கல்கியின் தொடர்கதை அல்லது கதையைப் படிந்து மகிழ்வோம். பிறகு ஆற்றில் நீராடிவிட்டு மெதுவாக ஊர் திரும்புவோம். ஒவ்வொரு வாரமும் இதேபோல் நடந்து, விகடன் வாங்கி வாசித்தோம்.

ஆனந்த விகடனில், அந்நாள்களில், பெங்களூர் சுந்தரம் என்பவர் 'ஆனந்த ரகசியம்' என்ற தலைப்பில் யோகாசனப் பயிற்சி பற்றி எழுதிவந்தார். கட்டுரைகளை சுவையாகவும், நகைச்சுவை கலந்தும், ஆசனங்கள் செய்யும் முறையைத் தெளிவாகவும் விளக்கி எழுதிக் கொண்டிருந்தார். 'ஆனந்த ரகசியம்' கட்டுரைத் தொடர் நிறைவு பெற்றதும், 'ஆரோக்கிய ரகசியம்' என்று உணவுமுறைகள், உடம்பைப் பாதுகாக்கும் வழிகள் பற்றி எல்லாம் எழுதினார்.

பெங்களூர் சுந்தரம் எழுதிய ஆசனங்கள் செய்யும் முறைகளைப் படித்துப் பலப்பலர் தமிழ்நாட்டின் பல ஊர்களிலும் யோகாசனங்கள் செய்வதில் ஈடுபட்டார்கள். ராஜவல்லிபுரத்தில் நாங்கள் மூன்று பேர் யோகாசனம் செய்யலானோம்.

எங்கள் வீட்டுக்கு அருகே உள்ள வீடுகள் ஒன்றில் சக்தி சங்கர் என்றொருவர் வசித்தார். சங்கர நாராயணன் என்பது அவர் பெயர் மிராசுதார். நிலம் நிறைய இருந்தது. அப்பா இறந்துவிட்டார். அம்மாவும் அவரும் தான். அவர் பத்திரிகைகள் படிப்பதில் ஆர்வம் கொண்டிருந்தார். 'மணிக்கொடி' இதழ்களைத் தவறாது வாங்கி, படித்துவிட்டு பைண்டு செய்து பாதுகாத்து வந்தார். அந்த இதழ் தொகுதிகளை அவர் எங்களிடம் தந்துவிட்டார்.

இளைஞர் தான். அவருக்குத் திடீரென்று சக்தி உபாசனையில் நாட்டம் ஏற்பட்டது. தினம் பூஜைகள் செய்து கொண்டிருந்தார். சக்தி தேவியின் பக்தராக மாறியதால் அவர் சக்தி சங்கர் என்று தன் பெயரைக் குறிப்பிடுவது வழக்கம்.

அண்ணா கோமதிநாயகம், நான், சக்திசங்கர் மூவரும் தினந்தோறும் மாலையில் ஆற்றுக்குப் போய், மணலில் யோகாசனப் பயிற்சி செய்தோம். ஒரு மணிநேரம் ஆசனம் செய்து விட்டு, மணலில் படுத்து ஓய்வு எடுப்போம். இருட்டப் போகிற நேரத்தில், ஆற்றில் குளித்து விட்டுத் திரும்புவோம்.

காலையில் சக்திசங்கர் அநேகநாள்களில் ஆற்றுக்கு வருவதில்லை. அண்ணாவும் நானும் போவோம். ஆசனங்கள் செய்வோம். ஓய்வுக்குப் பிறகு சுகமாகக் குளித்து விட்டுத் திரும்புவோம்.

ஆற்றுக்கும் ஊருக்கும் ஒரு மைல் தூரம் இருந்ததால், யாரும் ஆற்றுப் பக்கம் வருவதேயில்லை. கோடைகாலத்தில், ஊர்க் குளத்தில்

தண்ணீர் வற்றிவிட்ட பிறகு தான், ஊரார் குளிப்பதற்காக ஆற்றை நாடுவார்கள். அதுவும் ஏழு - எட்டு மணிக்குப் பிறகுதான். இதர நேர மெல்லாம் ஆற்றங்கரையும் ஆறும் ஆளரவமற்று அமைதியான சூழலாகத் தான் இருக்கும். ஆகவே எங்கள் யோகாசனப் பயிற்சிக்கு ஏற்ற அருமையான இடமாக அமைந்திருந்தது ஆற்றங்கரை.

காலையிலும் மாலையிலும் ஆற்றுக்குப் போய் வந்த நேரம் தவிர, இதர பொழுதுகளெல்லாம் செய்வதற்கு வேலை எதுவுமின்றி சும்மாவே கழியும். இப்படி வேலை எதுவும் செய்யாமல், படிப்பு போன்ற பயனுள்ள காரியம் எதிலும் ஈடுபடாமல், சும்மா வெட்டிப் பொழுது போக்கிய இளைஞர்கள் கிராமத்தில் அதிகம் பேர் இருந்தார்கள்.

அவர்களுக்குக் குடும்பச் சொத்து இருந்தது. வசிப்பதற்கு வசதியான வீடு இருந்தது. கலியாணமாகாததால் குடும்பப் பொறுப்பு, கவலை என்று எதுவும் கிடையாது. இத்தகையவர்கள் எந்நேரமும் கூடிப் பேசிப் பொழுது போக்குவதற்கு நடுத்தெருவில் வசதியான ஒரு வீடும் கிடைத்திருந்தது.

சக்திசங்கர் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்காரர் மனைவியை இழந்தவர். இரண்டு பையன்களும் ஒரு பெண்ணும், மிகச் சிறுவயதின ராய், அவருக்கு இருந்தார்கள். அவர் இரண்டாவது திருமணம் செய்து கொள்ளவில்லை. வேலைக்காரி ஒருத்தி வந்து சமையல் வேலைகளை செய்து முடித்து விட்டுப் போய்விடுவாள். பிள்ளைகள் பள்ளிக்கூடம் போய்விடுவர். அவர்கள் பெரும்பாலான பொழுதுகளை கீழ்த்தெருவில் இருந்த அம்மாச்சி (அம்மாவின் தாய்) வீட்டிலேயே போக்கினர். ஆகவே, அவருடைய வீடு ஒய்ந்த மடமாக இருந்தது. வேலையற்றவர்கள் கூடிப் பெழுது போக்குவதற்கு ஏற்ற இடமாக அமைந்திருந்தது அது.

அந்த வீட்டில் கூடியவர்கள் பேசி வம்பளந்தும், படுத்துத் தூங்கியும், சீட்டாடி மகிழ்ந்தும் நாள்களை ஓட்டிக் கொண்டிருந்தார்கள். சாப்பிடுவதற்கு மட்டும் அவரவர் வீட்டுக்குச் சென்று வருவார்கள். பிறகு ஊர்க்கதை, நகர்க் கதை பேசி மகிழ்வது தான் அவர்கள் வேலை.

இரவுகளிலும் வெகுநேரம் வரை - பதினொன்று, பன்னிரண்டு மணி வரை - அவர்களது வம்பர் மகாசபை ஜாம்ஜாமென்று நடைபெறும். அது வீட்டின் அறைக்குள் அடைபட்டுக் கிடப்பதில்லை. நான்கு தெருக்கள் கூடும் சந்தி நடு நாயகமாகத் திகழ்ந்தது. அங்கு ஒரு வீட்டின் சுவரை ஒட்டி இரண்டு மொட்டை வண்டிகள் கிடந்தன. எப்பவும்

அவை அங்கேயே நின்றன. மகாசபையினர் அமர்ந்து பேசுவதற்கு ஏற்ற ஆசனமாயின அவை.

வண்டிகளை ஒட்டியும், சற்று தள்ளியும் பெரியபெரிய கற்கள் கிடந்தன. சிலர் உட்காருவதற்கு அவையும் பயன்பட்டன. குடும்பத் தலைவர்கள் சிலரும் இந்த வெட்டிப் பேச்சுக் கூட்டத்தில் கலந்து கொள்வது வழக்கம். எல்லோருக்கும் பேசுவதற்குப் பொருள் இருந்தது. பலரைப் பற்றியும் இஷ்டம் போல் பேசி உல்லாசமாகப் பொழுது போக்கிக் களித்தார்கள்.

கிராம மக்களுக்கு அரசியலிலோ, சமூகப் பிரச்சினைகளிலோ, நாடகம் சினிமா போன்ற கலை விஷயங்களிலோ அக்கறையோ ஆர்வமோ இருந்ததில்லை. 'வெந்ததைத் தின்று, விதி வந்தால் சாவது' என்ற தன்மையில் அவர்கள் பொழுதுபோக்கினார்கள். நிலம் வைத்திருந்தவர்கள் 'விவசாயம் பண்ணுகிறோம்' என்று பெருமையாகச் சொல்லிக் கொண்டார்கள். ஆனாலும் அவர்கள் வயல்பக்கம் போவதே அபூர்வம். விவசாயத் தொழிலாளர்களான பள்ளர்களே வயல்வேலைகள் அனைத்தையும் கவனித்துக் கொண்டார்கள்.

அறுவடை நாள்களில் மட்டும் நிலச் சுவான்தார் அறுப்புக்களத்தில் போய் நிற்பார். அறுத்து வந்து சுத்தப் படுத்தப்படும் நெல்லை அளந்து சாக்குகளில் அடைத்து மூட்டைகளைத் தனது வீட்டுக்கு அனுப்பி வைப்பார். அது தான் பண்ணையார்கள் (நிலச்சொந்தக்காரர்கள்) செய்கிற தொழிலாக அமைந்திருந்தது.

சிறிதளவு நிலம் வைத்திருப்பவர்கள், பள்ளருக்கு 'கட்டுக்குத்தகைக்கு' வயலை விட்டு விடுவார்கள். உரம் போட்டு, தண்ணீர் பாய்ச்சி, பயிர் நட்டு, பேணி வளர்த்துப் பாடுபடவேண்டிய பொறுப்பு உழைப்பாளர் களைச் சேர்ந்தது. உரிய காலத்தில் பயிர் அறுவடையானதும், 'கட்டுக்குத்தகை நெல்' இவ்வளவு என்று பெரும்பங்கு நெல்லை அளந்து கொடுக்க வேண்டிய கடமையும் அவர்களுக்கு இருந்தது.

வண்டி மாடு, பணவசதி முதலியன பெற்றிருந்த ஒருசில வசதி யாளர்கள் 'சொந்தப் பயிர்' வைத்திருப்பதாகச் சொல்வார்கள். சகல செலவுகளையும் அவர்கள் கவனித்துக் கொள்வார்கள். வயிலில் இறங்கி அனைத்து விதப் பாடுகளையும் பார்ப்பவர்கள் விவசாயத் தொழி லாளர்கள் தான். நாள் தோறும் பயிருக்குத் தண்ணீர் பாய்ச்சுவது முதலி ய சகல வேலைகளையும் அவர்களே செய்வார்கள். நிலஉடைமையாளர்

காலையிலும் மாலையிலும் வயலின் வரப்புகளின் மீது நடந்து சுற்றிப் பார்ப்பார். அறுவடையாகி வரும் நெல் முழுவதும் அவருக்கே உரியது. உழைத்த தொழிலாளர்களுக்கு 'பூவுக்கு இவ்வளவு நெல்' என்று வழங்கப்படும்.

இப்படியாக கிராமங்களில் விவசாயம் நடந்து வந்தது. அறுப்பு முடிந்து கிடைத்த நெல்லை வீட்டில் பாதுகாப்பாக வைத்திருந்து, நெல்லுக்கு 'நல்ல விலை' வருகிற காலத்தில் வியாபாரிகளிடம் அதை விற்றுப் பணமாக்கிக் கொண்டார்கள். அந்தப் பணத்தை வைத்து வாழ்க்கையை நடத்தினார்கள்.

சந்தர்ப்பம் கிட்டுகிற போது பல ஊர்களுக்கும் போய் பார்க்கலாமே என்ற எண்ணம் அவர்களுக்கு வந்ததில்லை. அவர்களில் பலர் மதுரைக்குக் கூடப் போனதில்லை. மதுரைக்குப் போய் பார்ப்பது என்பது வாழ்வில் சாதிக்கப் படக் கூடிய அரிய செயலாகத் தோன்றும் அவர்களுக்கு. அது சம்பந்தமாக வாய்மொழி வழக்கு ஒன்று அடிக்கடி சொல்லப்பட்டதும் உண்டு.

ஒருவர் இறந்து மேல் உலகம் சேர்ந்ததும், அவருடைய ஆத்மாவிடம் எமலோகக் கணக்கர் சித்திரகுப்தர் கேட்பாராம். நீ மானூர் அம்பலம் தரிசித்தது உண்டு; மதுரையைக் கண்டு மகிழ்ந்தது உண்டா? என்று. இல்லை என்று சொன்னால் ஆத்மாவின் கணக்கில் குற்றம் குறையாக அது பதிவு செய்யப்படுமாம்.

அப்படிப் பேசிக் கொண்டாலும் கூட, நாலு இடங்களுக்குப் போய் நல்ல காட்சிகளைப் பார்க்க வேண்டும் எனும் எண்ணம் அந்த ஊர்காரர்களுக்கு ஏற்படடதேயில்லை. அவர்கள் வெளியூர் போக வேண்டுமானால், உற்றார் உறவினர் வீட்டில் கல்யாண விசேஷம் அல்லது சாவு காரியம் நிகழ வேண்டும். இந்த இரண்டு விசேடங் களுக்கும் கட்டாயம் போயே தீரவேண்டும் என்பது அவர்களது கொள்கையாக இருந்தது.

திருநெல்வேலிக்குக் கூட அவ்வூர்காரர்கள் அடிக்கடி போனதில்லை. உல்லாசப் பிரியர்களான இளைஞர்கள் சிலர் - வசதிகள் படைத்த வீட்டுப்பிள்ளைகள் - மாதத்துக்கு ஒன்றிரண்டு தடவை 'டவுணுக்குப்' போய் வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள்.

மாலையில் சினிமா பார்த்துவிட்டு, இரவில் 'மாடத் தெருவில்'

ஏதாவது ஒரு 'உருப்படி'யிடம் இன்பம் அனுபவித்து விட்டு, ஜாலியாக மறுநாள் ஊர் வந்து சேர்வார்கள்.

திருநெல்வேலி டவுணில் கோயிலை ஒட்டிய மாடத்தெருக்களும், அவற்றைச் சார்ந்த கனகராய முடுக்குத் தெரு, சொக்கலிங்க முடுக்குத் தெரு போன்ற சந்துகளும் பிரக்கியாதி பெற்ற இடங்களாக இருந்தன. அத் தெருக்களில் தான் விபசாரத்தைத் தொழிலாகக் கொண்டிருந்த விலைமகளிர் வீடுகள் வரிசையாக இருந்தன. சுவாமி நெல்லையப்பர் நெடுஞ்சாலையில் ஒரு பக்கத்தின் வீடுகளிலும் பரத்தையர் குடியிருந்தனர்.

அந்தி வேளை முதல், தங்களைத் தாங்களே சிங்காரித்துக் கொண்டு - 'அந்தியிலே பூத்தொளிரும் மந்தாரை போல், தனது கந்தமலர் பூங்குழலும் கள்ளநகைச் செவ்விதழும், பந்தனைய மார்பகத்தில் பட்டிலொரு ஜாக்கெட்டும்' வெளிச்சமிட்டுக் காட்டி - வாசல்படி அருகே நின்று, வீதிவழிப் போகிற ஆண்களை வா வா எனக் கைச் சாடை காட்டி பிழைப்புக்கு வழிதேடும் தொழிற்பெண்கள் மலிந்திருந்த நாள்கள் அவை.

இன்பம் அனுபவிக்கப் போகாதவர்கள் கூட, வீட்டுக்கு வீடு வாசல் படியில் நின்று சுயவிளம்பரம் செய்து கைசாடையும் கண்சாடையும் காட்டி முறுவலிக்கிற ரகம் ரகமான பெண்களைக் கண்டு களிப்பதற்காக அத் தெருக்களில் சும்மா நடந்து போவது வழக்கம்.

அரசு தடைச்சட்டம் கொண்டு வந்து, தொழில் ரீதியான விபசாரத்தை ஒடுக்கிவிடுகிற காலம் வரை அத் தெருக்கள் ஆண்களுக்குக் கவர்ச்சிப் பிரதேசமாக விளங்கின.

சோம்பல் மடத்தில் கூடி வம்பளந்தும் சீட்டாடியும் பொழுது போக்கிய அண்ணாச்சிகளில் சிலபேருக்கு திடீர் திடீரென்று ஏதாவது புதுமை பண்ணவேண்டும் என்ற ஐடியா தோன்றும்.

ஒரு சமயம் பேட்மிட்டன் பந்து விளையாடலாம் என்று அம் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டார்கள் சிலர். வலை, பந்து, மட்டைகள் எல்லாம் வாங்கினார்கள். சிவன் கோயிலுக்கு எதிரே கிடந்த புறம்போக்கு நிலத்தை சுத்தம் செய்து ஆட்ட மைதானமாக மாற்றினார்கள். சில வாரங்கள் உற்சாகமாகப் பந்து விளையாடினார்கள். பையப் பைய உற்சாகம் வற்றியது. விளையாட ஆள் இல்லாது போயிற்று.

அதே போல ஒரு சந்தர்ப்பத்தில், கீழத்தெரு வாலிபர்களுக்கு தேசப்பற்று பீரிட்டு எழுந்தது. 'சுதந்திர சங்கம்' ஏற்படுத்தினார்கள். ஒரு வீட்டின் திண்ணை அருகே கொடிக் கம்பம் நட்டு, அதில் மூவர்ணக் கொடியை பறக்கவிட்டார்கள். தினசரி திண்ணையில் அமர்ந்து நாட்டு நடப்புகளை அலசி மகிழ்ந்தார்கள். இந்த முயற்சியும் தானாகவே தேய்ந்து மடிந்தது.

அண்ணாச்சி ராஜகோபால கிருஷ்ணன் வித்தியாசமானவர். அவருக்குக் கல்யாணமாகி ஒரு பெண் குழந்தையும் இருந்தது. ஆயினும் அவர் வீட்டுப் பொறுப்போ, குடும்பக் கவலையோ இல்லாது மனம் போன போக்கில் வாழ்ந்து கொண்டிருந்தார்.

ராஜவல்லிபுரத்துக்கு மேற்கே இரண்டு மைல் தள்ளி தாழையூத்து ரயில் நிலையம் உள்ளது. அந் நாள்களில் ரயில் பயணம் செய்ய நேரிடு கிறவர்கள் இரண்டுமைல் தூரம் நடந்து போய் ஸ்டேஷனை அடைய வேண்டும். கால ஓட்டத்தில் ஒரே ஒரு பஸ் ஊருக்கும் திருநெல்வேலி க்குமிடையே போய்வரத் தொடங்கியது. பின்னர் பல வருடங்களுக்குப் பிறகு டவுண் பஸ் போக்குவரத்து நிரந்தரமாகி, அடிக்கடி பஸ்கள் ஓடலாயின.

ஆதிநிலையில் அண்ணாச்சி ராஜகோபாலகிருஷ்ணன் ரயிலுக்கு 'சீசன் டிக்கட்' வாங்கி வைத்துக் கொண்டு, நாள் தோறும் பயணம் செய்து வந்தார். திருநெல்வேலி ஜங்ஷனிலும் டவுணிலும் யார் யாரையோ பார்த்துப் பேசி ஏதேதோ செய்து பொழுதுபோக்கினார். புத்தகங்களும் பத்திரிகைகளும் வாங்கிப்படித்தார்.

தாழையூத்து ரயில் நிலையம் இருந்த இடத்தை ஒட்டி சத்திரம் குடியிருப்பு என்ற சிற்றூர் அமைந்திருந்தது. காப்பி கிளப், ஒன்றிரண்டு கடைகள், குறைந்த எண்ணிக்கை வீடுகள் கொண்ட குக்கிராமம் அது. சுற்றிலும் உடை, கருவேல் முதலிய முள்மரங்கள், ஆவாரஞ்செடிப் புதர்கள், புல்வகைகள் மண்டிய வெம்பரப்பு நிலமே விரிந்து கிடந்தது.

பிற்காலத்தில் அங்கே தான் சிமின்ட் கம்பெனி தோன்றியது. அப் பிரதேசத்தில் ராஜகோபாலகிருஷ்ணனுக்கும், அவருடைய அண்ணன் ஆறுமுகம் பிள்ளைக்கும் அதிகமான நிலம் சொந்தமாக இருந்தது. அதனால், ராஜகோபாலகிருஷ்ணன் அங்கே தான் தங்குவதற்கு வசதியாக ஒன்றிரு அறைகள் கொண்ட சிறு வீடு கட்டிக் கொண்டார். வேறு சில வீடுகள் கட்டி வாடகைக்கு விட்டு வருமானமும் தேடிக்கொண்டார்.

ஆறுமுகம் பிள்ளையும் அவ்விதமே செய்தார். பிறகு, அவர் குடும்பத்தோடு வசிப்பதற்கு ஏற்ற வீடு கட்டிக்கொண்டு சத்திரம் குடியிருப்பிலேயே வாழலானார்.

ராஜகோபாலகிருஷ்ணன் ஒருசமயம் ராஜவல்லிபுரம் வாலிபர்களுக்கும் பையன்களுக்கும் படிப்பில் ஆர்வம் ஊட்ட வேண்டும் என்ற நோக்கத்தோடு, நடுத்தெருவில் ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்தி, அங்கு வாசகசாலை நிறுவினார். தன்னிடமிருந்த புத்தங்கள், பழைய பத்திரிகைகளை எல்லாம் அங்கே கொண்டு வந்து ஒழுங்குபடுத்தி வைத்தார். இரண்டு பெஞ்சுகள், சில நாற்காலிகள், ஒரு மேசை ஆகியவற்றையும் கொண்டு வந்து சேர்த்தார். 'கட்டபொம்மன் வாசகசாலை' என்று பெரிய எழுத்தில் ஒரு அட்டையில் எழுதி வீட்டின் முகப்பில் மாட்டி வைத்தார். புதிய பத்திரிகைகளும் வாங்கிப் போட்டார்.

அவருக்கிருந்த உற்சாகமும் படிப்பார்வமும் ஊர் இளைஞர்களுக்கும் பையன்களுக்கும் இல்லை. அதனால் வாசகசாலை படிக்க வருவோர் இல்லாது தூங்கி வழிந்தது. நாளடைவில் தான் செய்வது வெட்டிவேலை - வீண்முயற்சி என்பதை உணர்ந்து கொண்டார் அண்ணாச்சி. எனவே வாசகசாலையை மூடிவிட்டார்.

என் அண்ணன்கள் இருவரும் பெரும்பாலான நேரத்தை, எல்லோரும் கூடிவம்பளந்து பொழுது போக்குகிற அறையிலேயே கழித்தனர். இரவில் ஒன்பது பத்து மணி வரை சந்திப் பேச்சில் கலந்து கொண்டனர்.

நான் 'சின்னப் பையன்'. வீட்டிலேயே இருந்து படிப்பதையே முழுநேர வேலையாகக் கொண்டிருந்தேன். நானும் கதைகள் எழுத வேண்டும் என்ற எண்ணம் என்னுள் வேகம்பெற்று வந்தது. மனசுக்குத் தோன்றியதை எல்லாம் எழுதினேன். அதற்காகவே 'இதய ஒலி' என்ற பெயரில் ஒரு கையெழுத்துப் பத்திரிகை ஆரம்பித்தேன்.

'இதய ஒலி'யில் கதை, கட்டுரை, கவிதைகள் எழுதினேன். படங்களும் நானே வரைந்தேன். ஆனால் நான் மட்டுமே அதன் வாசகர் என்ற நிலைமை இல்லை. என் அண்ணன்கள் படித்தார்கள். பொழுது போக்கும் அறைக்கு அதை எடுத்துப் போய் மற்றவர்களையும் படிக்கச் செய்தார்கள்.

ராஜவல்லிபுரத்துக்குக் கிழக்கே சில மைல்கள் தள்ளி உள்ள சீவலப்பேரி, மடத்துப்பட்டி என்ற கிராமங்களைச் சேர்ந்த இரண்டு

பேர் அடிக்கடி எங்கள் ஊருக்கு வருவார்கள். அறையிலும், முச்சந்திக் கூட்டத்திலும் கலந்து கொண்டு பேசிப்பொழுது போக்குவார்கள். கதைகள் படிப்பதில் ஆர்வம் கொண்டவர்களும் கூட.

அவர்களில் ஒருவர் சொன்னார்: கதைகள் கட்டுரைகள் எழுதுவது என்பது சும்மா விளையாட்டு மாதிரி இல்லை. எல்லாராலும் எழுதிவிட முடியாது. அதிலும் நம்மைப் போன்றவர்களுக்கெல்லாம் கதை எழுதவராது. இப்ப எழுதும் போது நல்லா இருக்கிற மாதிரித் தான் தோணும். ஆனால் அதை அப்படியே வைத்திருந்து, ஆறேழு மாசம் கழிச்சு எடுத்துப் படிச்சுப் பார்த்தா, நமக்கே அது பிடிக்காது. சுத்த மோசமாக இருக்குதேன்னு கிழிச்சுப் போடத்தான் தோணும். எழுதுகிறது என்பது லேசுப்பட்ட காரியமா! அதெல்லாம் ஒரு 'கிஃப்ட்' (கொடுப்பினை - பேறு) என்று உரத்த குரலில் அடித்துப் பேசினார்.

அவருடைய பேச்சு என்னை பாதிக்கவில்லை. 'சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம்' என்பது போல எழுத்தும் எழுதி எழுதிப் பயிற்சி பெற்றால் நன்றாக வந்துவிடும் என்று என் உள்ளத்தில் உறுதி படிந்திருந்தது.

அத்துடன் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை எழுதிப் பத்திரிகை யில் வெளிவந்திருந்த 'ஊன்றி உணர்தற்குரிய உண்மைகள்' என்ற பாடலின் சில வரிகள் என் உள்ளத்தில் அழுத்தமாகப் பதிந்திருந்தன. இடையறாது ஒலித்துக் கொண்டிருந்தன.

'உள்ளந்தேறிச் செய்வினையில்
ஊக்கம் பெருக உழைப்போமேல்
பள்ளம் உயர் மேடாகாதோ?
பாறை பொடியாய் போகாதோ?'

என்ற உண்மை எனக்குள் ஒரு உந்துசக்தியாக இயங்கிக் கொண்டே யிருந்தது.

ஆகவே நான் எழுதிக் கொண்டேயிருந்தேன். எழுதியதைவிட அதிகமாகப் படித்தேன். 'மணிக்கொடி' இதழ்களில் இடம்பெற்றிருந்த முக்கியமான கதைகளை - சிறப்பாகப் புதுமைப்பித்தன் கதைகளை - திரும்பத் திரும்பப் படித்தேன். இவை போன்ற சிறுகதைகளை நானும் எழுதவேண்டும் என்று மனசுக்குள் சொல்லிக் கொண்டேன்.

அண்ணாச்சி ராஜகோபாலகிருஷ்ணன் அரசியல்வாதிகள், அரசு அலுவலகர்கள், பலவகை வியாபாரிகள் என்று பல்வேறு

ரகத்தினரிடமும் பழக்கம் வைத்திருந்தார். அண்ணன் கோமதி நாயகத்தை அவ்வப்போது அவர் தம்முடன் அழைத்துச் செல்வதும் உண்டு.

ஒருமுறை அவர் சொன்னார், சிறந்த காங்கிரஸ் கட்சிப் பேச்சாளர் சோமயாஜலு இப்போது சங்கரன் கோயிலில் தங்கியிருக்கிறார். ஒரு நாள் அவரைப் பார்க்கப் போவோம் என்று.

அவ்வாறே ஒருநாள் அண்ணன் கோமதிநாயகத்துடன் அவர் சங்கரன்கோயில் போய் திரும்பினார்.

திரும்பிவந்த போது அண்ணன் ஏகப்பட்ட பத்திரிகைகள் கொண்டு வந்தார். 'இவையெல்லாம் நமக்குத் தான். சோமயாஜலு கொடுத்தார்' என்று மகிழ்ச்சியோடு சொன்னார்.

காரைக்குடியிலிருந்து வெளிவந்த 'ஊழியன்' இதழ்ப் பிரதிகளே அதிகம் இருந்தன. புதுச்சேரியில் கவிஞர் பாரதிதாசன் ஆசிரியராகப் பொறுப்பேற்று நடத்திய 'சுப்பிரமணிய பாரதியார் கவிதாமண்டலம்' எனும் கவிதை ஏடு; வ.வெ.சு. ஐயர் நடத்திய 'பால பாரதி', காஞ்சிபுரத்தில் மாசிலாமணி முதலியார் நடத்திய 'தமிழரசு' ஆகிய பத்திரிகைகளின் சிற்சில இதழ்கள் கிடைத்திருந்தன. நல்ல விருந்தாகக் கிட்டியிருந்தன அவை.

'ஊழியன்' பல்சுவை வாரஇதழ். சமூக, அரசியல் பிரச்சினைகள், சர்வதேச நகரங்கள் பற்றிய கட்டுரைகள் மற்றும் கதைகள், தொடர்கதை எல்லாம் அதில் இடம்பெற்றிருந்தன. பத்திரிகையின் ஆசிரியர் ராய சொக்கலிங்கம். அவர் இலக்கியக் கட்டுரைகளும் எழுதினார். துணை ஆசிரியர் இ. சிவம் தான் தொடர்கதை எழுதி வந்தார். அவர் ரசமான சிறுகதைகளும் எழுதினார்.

புதுமைப்பித்தன் ஆரம்பநாள்களில் வேலைதேடி சென்னைக்குச் சென்று 'மணிக்கொடி' அலுவலகத்தில் தங்கியிருந்தார். மூத்த எழுத்தாளர் வ.ரா. (வ. ராமஸ்வாமி) அவரை 'ஊழியன்' இதழில் பணிபுரிவதற்காக காரைக்குடிக்கு அனுப்பி வைத்தார். ஆனால், புதுமைப்பித்தன் அங்கு நீடித்து இருக்கவில்லை. சில வாரங்களிலேயே சென்னை திரும்பி விட்டார். வ.ரா. காரணம் கேட்டபோது, எனக்கு அங்கே ஒத்து வரவில்லை. ஈ. சிவம் எறும்பு சிவமாக அரித்துப் பிடுங்கிவிட்டார் என்று தெரிவித்தார். இந்த சுவாரசியமான குறிப்பு தொ.மு.சி. ரகுநாதன் எழுதிய 'புதுமைப்பித்தன் வரலாறு' நூலில் இடம்பெற்றிருக்கிறது.

பாரதிதாசன் நடத்திய 'சுப்பிரமணிய பாரதியார் கவிதா மண்டலம்' தான் நவீன தமிழில் முதலாவதாகத் தோன்றிய கவிதை இதழாகும். அது முழுக்க முழுக்க கவிதைகளையே கொண்டிருந்தது. விளம்பரங்கள், நூல் மதிப்புரைகள் கூட கவிதையிலேயே எழுதப்பட்டிருந்தன. பாரதி தாசனின் கவிதைகள் அதிகம் வெளிவந்தன. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் கவிதைகள் கூட அதில் பிரசுரம் பெற்றிருந்தன. சிறப்பான இதழாகத்தான் அது அமைந்திருந்தது. ஆயினும் 'கவிதாமண்டலம்' ஒருசில இதழ்களே வெளிவந்தது. பின் நின்று விட்டது.

புதிய தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் மறுமலர்ச்சிக்கும் தொண்டாற்றிய வ. வெ. சு. ஐயர் நடத்திய 'பாலபாரதி' தேசபக்தியையும், இளைஞர்க்கு வீர உணர்வையும் ஊட்டுவதிலும் கவனம் செலுத்தியது. சிறுகதையில் சோதனை ரீதியான முயற்சிகளில் ஈடுபட்ட ஐயர், தமிழில் இலக்கிய விமர்சனம் எழுதுவதிலும் அக்கறை காட்டினார். சந்திரகுப்தன் கடிதங்கள் என்ற தலைப்பில் கிரேக்க வீரர்கள், பாரத நாட்டின் வீர திலகங்கள் பற்றியெல்லாம் உணர்ச்சியோடு கட்டுரைகள் எழுதினார். 'பாலபாரதி'யின் ஒருசில இதழ்களே எங்களுக்குப் படிக்கக் கிடைத்திருந்தன.

சோமயாஜலு தந்த பத்திரிகைகளில் 'மெரி மேகசின்' என்ற ஆங்கிலப் பத்திரிகையின் சில இதழ்களும் இருந்தன. ஆனந்த விகடன் காரியாலயத் திலிருந்து, எஸ். எஸ். வாசன் வெளியிட்ட ஆங்கில இதழ் அது.

அந்நாள்களில், சென்னையிலிருந்து வெளிவந்த 'மை மேக சின்' வெற்றிகரமாக நடந்தது. அதைப் போல தாமும் ஒரு ஆங்கிலப் பத்திரிகை நடத்த வேண்டும் என்ற எண்ணத்தோடு வாசன் 'மெரி மேகசின்' தொடங்கியிருந்தார். அச்சு, அமைப்பு, நகைச்சுவைக் கதைகள் கட்டுரைகள் முதலியவற்றில் மெரி மேகசின், மை மேகசினை விட, வசீகரமாக நன்றாகவே இருந்தது. பெரிய பெரிய சித்திரங்கள் பத்திரிகை யின் பக்கங்களை அழகு படுத்தின. கதைகளும், தொடர்கதைகளும், 'தேவி தி டான்சர்', 'பாலா தி பேட் வுமன்' போன்ற கவர்ச்சித் தலைப்பு களுடன் சுவையாகவே இருந்தன. ஆயினும் 'மெரி மேகசின்' சந்தையில் எடுபடவில்லை. விரைவிலேயே நிறுத்தப்பட்டு விட்டது. 'மை மேகசின்' இடைவிடாது, நீண்டகாலம் தொடர்ந்து வெளிவந்தது.

இப்படியாக சின்னவயதிலேயே எனக்கு சிற்றிதழ்களின் மீது தனி ஆர்வம் ஏற்பட்டு வளரலாயிற்று.

1936 மே மாதம் எஸ். எஸ். எல். சி. பரீட்சையின் முடிவு தினப் பத்திரிகைகளில் வெளிவந்தது. அப்படி பள்ளி இறுதித் தேர்வின் முடிவு பத்திரிகைகளில் வெளியிடப்பட்டது அதுவே முதல் முறையாகும். அதற்கு முன்பெல்லாம் தேர்வு முடிவுகள் பள்ளிக் கூடங்களுக்கே அனுப்பிவைக்கப்பட்டன. மாணவர்கள், அவரவர் படித்த பள்ளி களுக்குப் போய்த்தான் முடிவைத் தெரிந்து கொள்ள வேண்டியிருந்தது. இப்போது ராஜவல்லிபுரத்தில் இருந்தபடியே நான் எனது தேர்வின் முடிவைத் தெரிந்து கொள்ள வாய்ப்பு ஏற்பட்டது.

தேர்வில் நான் தேறியிருந்தேன். மேற்கொண்டு காலேஜில் சேர்ந்து படிக்க வசதியில்லை. சர்டிபிகேட் புத்தகத்தை உடனடியாகப் போய் பள்ளியிலிருந்து நான் பெற்றுக்கொள்ளவில்லை. காலம் தாழ்த்தி, இரண்டு மாதங்கள் கழிந்த பிறகே, பாளையங்கோட்டை சென்று எனது சர்டிபிகேட்டைப் பெற்று வந்தேன்.

அந்த வருடத்துக்கு முந்திய ஆண்டுமுதல், சர்வீஸ் கமிஷன் பரீட்சை நடைபெறலாயிற்று. குமாஸ்தா வேலை தேடுகிறவர்கள் எழுத வேண்டிய தேர்வு அது. அரசாங்கமே நடத்தியது.

நானும் சர்வீஸ் கமிஷன் பரீட்சை எழுத வேண்டும் என்று பெரியவர்கள் சொன்னார்கள். அதற்கான முன்னேற்பாடுகள் பலவும் செய்யப்பட்டன. உரிய முறையில் மனுவும் அனுப்பி வைக்கப்பட்டது. உரிய நாளில் பரீட்சையும் எழுதினேன். ஆனால் வேலைக்கு நான் தேர்வு செய்யப்படவில்லை.

ஏதாவது வேலை பார்த்தாக வேண்டும் என்ற கட்டாயம் இருந்தது. உறவினர் ஒருவரின் துணையோடு அண்ணனும் நானும் சிற்சில கம்பெனிகளுக்கு, கிளார்க் வேலைக்கு, மனுச்செய்தோம். எந்த இடத்திலி ருந்தும் வேலைக்காக நாங்கள் அழைக்கப்படவில்லை.

காலம் ஓடிக்கொண்டிருந்தது. கல்யாணசுந்தரம் அண்ணாச்சிக்கு திருமணம் நடந்தேறியது. பெண் வீடு திருநெல்வேலியில். அங்கு தான் கல்யாணம் நடந்தது. ராஜவல்லிபுரத்தில் மறுவீடு விசேஷம் சிறப்பாக நடைபெற்றது.

ஆனந்த விகடன் பத்திரிகையை தொடர்ந்து வாங்கிக் கொண்டிருந்த நாங்கள், 1936இல் விகடன் தீபாவளி மலரையும் விலைக்கு வாங்கினோம். சிறந்த கதைகளுடன் இனிய விருந்தாக அம் மலர் அமைந்திருந்தது.

விகடன் தான் முதன் முதலாகச் சிறப்பு மலரை பெரிய அளவில் வெளியிட்டது. ஆண்டு தோறும் தீபாவளியை ஒட்டி மலர் வெளிவந்தது.

'சுதேசமித்திரன்' நாளிதழும் விஜயதசமி மலர் என்று வெளியிட்டது. 'தினமணி' இலக்கியத் தரத்துடன் ஆண்டு மலர் வெளியிடுவதில் கவனம் செலுத்தியது.

ஆரம்பத்தில் 'பாரதி மலர்' என்று இரண்டு வருடங்கள் வெளியிட்டது. நீளவடிவில் - 'தினமணி' பத்திரிகையை இரண்டாக மடித்த அளவில் அம் மலர்கள் அமைந்திருந்தன. 1935ஆம் வருடத்திய மலரில் சிறப்பான சிறுகதைகள் அதிகம் இடம் பெற்றிருந்தன. புதுமைப் பித்தனின் 'புதிய கூண்டு' என்ற குறிப்பிடத்தகுந்த நல்ல கதை அந்த மலரில் வந்தது.

1937ஆம் வருடத்திய 'தினமணி ஆண்டு மலர்' மிகத்தரமான தயாரிப்பாக விளங்கியது. புதுமைப்பித்தன் கவனிப்பில் உருவான மலர் அது. பு.பி.யின் 'நினைவுப் பாதை', மௌனியின் 'எங்கிருந்தோ வந்தான்' முதலிய சிறந்த சிறுகதைகள், ந. பிச்சமூர்த்தியின் 'கிளிக்கூண்டு' கவிதை, இளங்கோவன் (ம.க. தணிகாசலம்) எழுதிய 'சாவே வா!' என்ற அருமையான தத்துவ சிந்தனைக் கட்டுரை. மற்றும் பல அரிய விஷயங்கள் அந்த மலரை அணிசெய்தன.

'மணிக்கொடி' குறைந்த விலையில் புத்தகங்கள் வெளியிடுவது என்ற திட்டத்துடன் நவயுகப் பிரசுராலயம் என்ற பெயரில் பதிப்பகம் தொடங்கியிருந்தது. ஏ.என். சிவராமன் எழுதிய 'மாகாண சுயாட்சி' என்ற அரசியல் நூல் முதலாவது வெளியீடாக எட்டணா விலையில் வந்தது.

அண்ணாச்சி ராஜகோபாலகிருஷ்ணன் அதை வாங்கி வந்தார். படித்து விட்டு எங்களுக்கும் படிக்கத் தந்தார். வரா. தமிழாக்கிய பண்டித ஜவகர்லால் நேருவின் சுயசரிதத்தையும் அவர் கொடுத்தார். அவருக்கு அரசியலில் ஆர்வம் ஏற்பட்டிருந்தது. ஜெயப்பிரகாஷ் நாராயணன் நூல்களை வாங்கிப் படித்தார். அவையும் நாங்கள் படிப்பதற்காகக் கிடைத்தன.

கலியாணி அண்ணாச்சியின் இல்லற வாழ்க்கை அமைதியும் ஆனந்தமும் நிறைந்ததாக அமையவில்லை. அண்ணியாக வீட்டுக்கு வந்தவள் சீக்காளியாகவும் சிடுசிடுத்த குணம் உடையவளாகவும் இருந்தாள். அடிக்கடி திருநெல்வேலிக்குப் போய் அம்மா வீட்டிலேயே

தங்குவதை வழக்கமாகக் கொண்டாள். அப்பா அம்மாவின் செல்லமாக வளர்ந்த பெண். மூத்த மகள். அவளுக்கு ஒரு தங்கை இருந்தாள். மிக இளையவள். அதனால் பெற்றோரும் அவள் விருப்பப்படியே இருக்கட்டும் என்று அங்கீகரித்தார்கள்.

இதன் மூலம் அண்ணாச்சியின் வாழ்க்கை தான் சிக்கல்கள் சிரமங்களுக்கு உரியதாயிற்று.

தம்பி முருகேசன் வாழ்க்கையும் சிரமங்கள் நிறைந்ததாகவே இருந்தது. பாளையங்கோட்டையில் அந்தோணியார் பள்ளியில் அவன் ஐந்தாவது படித்து முடித்திருந்தான். மேற்கொண்டு ஆறாம் வகுப்பில் சேரவேண்டும். அதற்காகத் தினம் திருநெல்வேலி ஜங்ஷன் இந்து உயர்நிலைப் பள்ளிக்குப் போய் வரவேண்டிய நிலைமை ஏற்பட்டிருந்தது.

ராஜவல்லிபுரத்தில், ஐந்து வகுப்புகளைக் கொண்ட ஆரம்பப் பள்ளி தான் இருந்தது. மேற்கொண்டு படிக்க வேண்டிய சில பிள்ளைகள் ஆற்றங்கரைப் பாதையில் நடந்து அருவங்குளம் என்கிற நாரணம்மாள் புரம் நடுநிலைப் பள்ளியில் சேர்ந்து கற்றார்கள். அங்கு எட்டாவது வகுப்பு முடிய இருந்தது. அநேக பிள்ளைகள் திருநெல்வேலி ஜங்ஷனுக்குப் போய் அங்குள்ள இந்து உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து கற்றார்கள். சிலபேர் ஜங்ஷனுக்கும் டவுணுக்கும் நடுவில், வயல்களின் மத்தியில் அமைந்திருந்த சி.எம்.எஸ்.பள்ளியில் கல்விகற்றார்கள். அது வயல்காட்டுப் பள்ளிக்கூடம் என்றும்பெயர் பெற்றிருந்தது.

ஜங்ஷனுக்கு ரயிலில் தான் போய் வரவேண்டும். காலையில் எட்டு மணிக்கு ஒரு ரயில் ஓடியது. அது தான் வசதியாக இருக்கும். அதன் பிறகு பதினொன்றரை மணிக்குத்தான் ரயில். பள்ளிக்கூடத்தில் பத்து மணிக்கு வகுப்புகள் தொடங்கிவிடும். ஆகவே எட்டு மணி ரயிலில் போயாக வேண்டும். எட்டே காலுக்கு அது ஜங்ஷன் சேர்ந்துவிடும். பையன்கள் வெட்டிப் பொழுது போக்குவதற்கு நிறைய நேரமிருந்தது.

காலை எட்டு மணி ரயிலைப் பிடிப்பதற்கு, அதிகாலை ஏழுமணிக்கு வீட்டைவிட்டுக் கிளம்பியாக வேண்டும். இரண்டு மைல் தூரம் நடக்க வேண்டுமே! ஆகவே ஆறு மணிக்கு முன்னரே எழுந்து, குளித்துத் தயாராகிக் காலை உணவை உட்கொண்டுவிட்டு, டிபன் பாத்திரத்தில் மதிய உணவை எடுத்துக் கொண்டு பையன்கள் ஏழுமணிவாக்கில் புறப்பட்டுவிடுவார்கள். ரோடு சுற்றிப் போவதைவிட, வயல்களின்

வரப்புகளில் நடந்து போனால் தூரம் குறையும் என்ற எண்ணத்தில் பையன்கள் அவ்விதமே செய்வர். ஒரு மைல் தூர எல்லையில் ரோடு மீது ஏறி, ஒழுங்கான பாதையில் நடப்பார்கள்.

வயல்களில் பயிர் இல்லாத மாதங்களில் நடந்து போவதற்கு சிறிது வசதியாக இருக்கும். நெல்பயிர் வளர்கின்ற காலத்தில் வரப்புகளில் சேறும் தண்ணீரும் கலந்து வழுக்கும். மாலையிலும் அதே மாதிரி நடந்து வரவேண்டும்.

மாலையில் ஐந்தரை மணிக்குத் தான் ரயில் இருந்தது. அதில் வந்து தாழையூத்து நிலையத்தில் இறங்கி, பையன்கள் மெதுவாக நடந்து வந்து வீடு சேர்வதற்குள் அந்தி சாய்ந்துவிடும். வந்த களைப்பு. இரவில் படிக்க உற்சாகம் இராது. சீக்கிரமே தூங்கத் தான் தோன்றும்.

மழை நாள்கள் என்றால் சிரமங்கள் அதிகரிக்கும். முருகேசனுடன் ஐந்தாறு பையன்கள் சேர்ந்து போய் சேர்ந்தே வந்தார்கள். விளை யாட்டும் வேடிக்கைப் பேச்சும், குறும்புத்தனமும் வம்பளப்புமாக அவர்கள் பயணம் தொடரும். படிப்பில் ஆர்வமும் அக்கறையும் உடையவர்கள் ஒன்றிருவர் தான் இருந்தனர். முருகேசன் அவர்களில் ஒருவனாக இருக்கவில்லை.

பள்ளிக்கூடம் போய் படித்து வருவது அவனுக்கு ஒரு தண்டனை போல் தோன்றியது. அவன் 'ஜாலி பிரதர்' ரகம். அதனால் ஏழாம் வகுப்பு வந்ததும் அவன் படிப்பைத் தொடர ஆசைப்படவில்லை. படித்தது போதும் என்று வீட்டில் இருந்து விட்டான்.

இந்நிலையில், நாங்கள் ராஜவல்லிபுரத்தில் வசிக்க வந்து பதினெட்டு மாதங்கள் ஓடிய பிறகு, நான் அவ்வூரை விட்டு வெளியேற வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அவ்வூர்காரர், எங்கள் உறவினர் ஒருவர், அரசு வேளாண்மைத்துறை உயர் அலுவலராகப் பணிபுரிந்து கொண்டிருந்தவர், எங்கள் குடும்பத்துக்கு உதவி புரிய முன் வந்தார்.

அப்போது அவர் மதுரையில் தங்கி உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்தார். ராமநாதபுரம் ஜில்லாவில் புதிதாகச் சில விவசாய அபிவிருத்தி அலுவலர் ஆபீஸ்கள் துவக்குவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. அத்திட்டத்தின்படி, பரமக்குடியில் திறக்கப்பட்ட அலுவலகத்துக்கு குமாஸ்தா தேவைப்பட்டது. அந்த வேலை எனக்குக் கிடைக்கும்படி அவர் முயன்று ஆவன செய்து முடித்தார்.

பரமக்குடி சென்று, அங்கு துவக்கப் பெற்றுள்ள விவசாய டெமான்ஸ்ட்ரேட்டர் ஆபீசில் கிளார்க்காகச் சேருவதற்கான உத்தரவு 1937 நவம்பரில் எனக்குக் கிடைத்தது. அதற்கான முன்னேற்பாடுகள் பலவும் வேகமாகச் செய்துமுடிக்கப்பட்டன.

முதலில் மதுரை போகவேண்டும். ரயிலில் தான். அங்கிருந்து வண்டி மாற்றி, ராமேஸ்வரம் பாதையில் பயணம் செய்து பரமக்குடி சேர வேண்டும். அந்நிலையில் எங்களுக்கு அது 'தூரதொலை' தான்.

சிறுவனான நான், தனியே எங்கும் பயணம் செய்துபோய் அனுபவம் பெற்றிராதவன், நெடுந்தொலை சென்று தனியாக எப்படித் தான் காலம் கழிப்பானோ என்ற பயமும் கவலையும் அம்மாவுக்கும் அண்ணன் களுக்கும் இருந்தன.

நெடுந்தூரம் என்ன! சிறு தொலைவு கூடப் பயணம் போயிராத சிறுவன் நான். ரயிலில் கங்கை கொண்டான் கடந்து, மணியாச்சி தாண்டி அதற்கப்புறம் போனதேயில்லை.

நான் பள்ளியில் படித்த நாள்களில், தமிழாசிரியரும் ஆங்கில ஆசிரியரும், 'நான் செய்த நீண்ட தூர ரயில்பயணம்' என்ற தலைப்பில் வியாசம் எழுதச் சொல்வார்கள். நான் ரயில் பயணம் போயிருந்தால் அல்லவா சுவாரசியமாக எழுத முடியும்! அதற்காக வியாசம் எழுதாமல் வெறும் நோட்டை வாத்தியாரிடம் கொடுக்க முடியுமா?

திருச்செந்தூர் போய் வந்த பயணம் என்று ஆங்கிலத்தில் கட்டுரை எழுதிக் கொடுத்தேன். திருச்செந்தூர் போனது தானா நீ செய்த நீண்ட பயணம் என்று கேலியாகக் குறிப்பிட்டார் ஆசிரியர். கல்கத்தா போனது பற்றி ஒரு மாணவன் எழுதியிருந்தான். பம்பாய் போய் அம் மாநகரைச் சுற்றிப் பார்த்தது பற்றி ஒரு பையன் அளந்திருந்தான். நானோ போகாத திருச்செந்தூர் பயணம் பற்றி கற்பனைச் சித்திரம் தீட்டியிருந்தேன். திருச்செந்தூருக்குக் கூடப் போய்வர வசதியிருந்ததில்லை. சின்ன வயசில், அப்பாவோடு போனது தான். அதன் பிறகு அந்த ஊருக்குப் போகக்கூட வாய்ப்பும் வசதியும் இருந்ததில்லை.

நான் செங்கோட்டை ஊருக்குப் போய் வந்ததாகத் தமிழ் வியாசம் எழுதிக் கொடுத்தேன். இரண்டு பக்கங்களில். இது போதாது; செங்கோட்டை ஊரின் சிறப்புகள்; அங்கே உள்ள கடைவீதி, சுற்றுச்சூழல் காட்சிகள், மற்றும் விசேஷமான சமாச்சாரங்கள் பற்றி எழுத வேண்டும் என்று தமிழாசிரியர் போதித்தார்.

செங்கோட்டைக்கு நான் போயிருந்தால் அல்லவா அவை பற்றி எல்லாம் எனக்குத் தெரியும்! எப்பவோ அடுத்த வீட்டு அம்மாள் செங்கோட்டை போய் வந்த பெருமையை அக்கம்பக்கத்தாருக்கு சுவையாகச் சொன்னதை நான் கேட்டதுண்டு. அந்த நினைவை அடிப்படையாக்கி வியாசம் எழுத முடிந்தது என்னால். அவ்வளவு தான்.

இப்போது மதுரை போய், அங்கிருந்து ரயில் மாறி பரமக்குடி போவது என்பது உளக்கிளர்ச்சி ஏற்படுத்தும் மாபெரும் புதிய அனுபவமாகவே தோன்றியது. என்னை தனியாக அனுப்ப விரும்பாத அம்மாவும் அண்ணன்மார்களும் ஒரு திட்டம் தீட்டினார்கள்.

அண்ணன் கோமதிநாயகம் எனக்குத் துணையாக வருவது; பரமக்குடியில் என்னோடு ஒரு வாரம் தங்கியிருந்து விட்டு அவர் ஊர் திரும்புவது என்பதுதான் அந்தத் திட்டம். அதன்படியே செயல்புரிந்தோம்.

முதல் நாள் மதுரையில் இறங்கி, எனக்கு வேலை வாங்கித் தந்த உறவினர் வீட்டில் தங்கினோம். மதுரைக் கோயில், மற்றும் சில தெருக்களை சுற்றிப் பார்த்தோம். மறுநாள் பரமக்குடிக்குப் பயணமானோம்.

ஊர் புதிது. அலுவலகம் புதிது. வேலையும் புதிது. புதிய அனுபவங்களை எதிர்கொள்வதற்காகக் காலம் என்னை அங்கே கொண்டு சேர்த்திருந்தது.

## ⌘ 11 ⌘

பரமக்குடி பரபரப்பு இல்லாத சாதாரண ஊராக இருந்தது. கடைத் தெருவும், அதற்குக் கீழ்பக்கமுள்ள பகுதிகளும் நெருக்கடியும் ஜனசஞ்சார மிகுதியும் கொண்டிருந்தது. மேற்குப்பக்கம் முனிசீப் கோர்ட், தாலுகா ஆபீஸ், தபாலாபீஸ் முதலிய அலுவலகங்கள் இருந்த பகுதி நெருக்கடியும் பரபரப்புமின்றி அமைதியாகவே தென்பட்டது. அதற்கும் மேற்குப்பக்கம் இருந்த 'மேலச்சத்திரம் பகுதி' ஒருசில வீடுகளை மட்டுமே கொண்ட மிக அமைதியான பிரதேசமாக அமைந்திருந்தது.

பல ஆபீசுகளும் இருந்த பகுதியில், தனித்த நான்கு வீடுகள் கொண்ட ஒரு வரிசையில், முதல் வீட்டில் 'சர்க்கார் விவசாய ஆபீஸ்' (கவர்ண்மென்ட் அக்ரிகல்சுரல் டிமான்ஸ்ட் ரேட்டர் ஆபீஸ்) இருந்தது. புதிதாக அமைக்கப்பட்டிருந்த அலுவலகம்.

என் அண்ணனுடன் நான் போய்ச் சேர்ந்த நாளில், அந்த ஆபீசில் ஒரே ஒரு ஆள் தான் இருந்தார். மெசஞ்சர் என்று அழைக்கப்பட்ட பணியாள். மேலதிகாரி (டிமான்ஸ்ட்ரேட்டர்) லீவில் திருமங்கலம் போயிருக்கிறார் என்றும், இன்னும் மூன்று நாள்களில் வந்து விடுவார் என்றும் அந்தப் பணியாள் தெரிவித்தார். நாங்கள் ஆபீசிலேயே தங்கலாம் என்றார். அவரும் தற்காலிகமாக அலுவலகத்தில் தான் தங்கியிருப்பதாகவும், வீடு பார்த்தாச்சு, பெரியகுளம் போய் குடும்பத்தை கூட்டி வரவேண்டும் என்றும் தகவல் சொன்னார்.

கட்டிடமும் புதுசாகத் தான் இருந்தது. இரண்டு மேஜைகள், நாற்காலிகள், பெஞ்சுகள் எல்லாமே புதுமைப் பொலிவுடன் மினுமினுத்தன. ஆபீசுக்கு அடுத்ததாக ஒரு ஓட்டல் இருந்தது. வீடு மாதிரியான தோற்றமே கொண்டிருந்தது அது. கல்லிடைக் குறிச்சி ஐயர் ஒருவர் - கிருஷ்ணய்யர் என்று பெயர் - அதை நடத்தி வந்தார். விதவை யான அக்காள் அவருக்கு உதவியாக உழைத்துக் கொண்டிருந்தாள். அக்காள் மகளைத் தான் அவர் மணம் புரிந்திருந்தார். அவர்களுக்கு ஒரு பெண் குழந்தை இருந்தது. கைக்குழந்தை.

'ஹோம்லி அட்மாஸ்பியர்' என்பார்களே, அப்படியான வீடு போன்ற சூழலும் தன்மையும் கொண்டிருந்தது. கிருஷ்ணய்யர் ஓட்டல். அவர் தடி உருவமும், சிறு அளவு தலைமுடியும், சிரித்துப் பேசும் இனிய சுபாவமும் கொண்ட மனிதராக இருந்தார். வாடிக்கையாக அநேகர் அங்கு சாப்பிட்டுச் சென்றார்கள்.

எனக்கும் அங்கேயே சாப்பாட்டு வசதிக்குப் பதிவு செய்யப் பட்டது. காலை நேரத்தில் இட்டிலி, தோசை, காப்பி. மத்தியானம் சாப்பாடு. இரவிலும் சாப்பாடு. மாதம் பத்து ரூபாய். ஆனாலும், நம்ம திருநெல்வேலிப் பக்கமாக இருப்பதாலும், அமைதியான நல்ல பையனாக இருப்பதாலும், மாதம் ஒன்பது ரூபாய் தந்தால் போதும் என்று கிருஷ்ணய்யர் அன்புடன் கூறினார்.

நீ கவலைப்படவே வேண்டாம்; தம்பியை நான் பார்த்துக் கொள்கிறேன் என்று என் அண்ணனிடம் அவர் உறுதி கூறினார்.

நாங்கள் போய்ச்சேர்ந்த மூன்றாம் நாள், மேலதிகாரி கணேசய்யர் வந்து சேர்ந்தார். முறைப்படி என்னை உத்தியோகத்தில் சேர்த்துக் கொண்டார். மறுநாள் என் அண்ணன் திருநெல்வேலிக்குப் பயணமானார்.

அந்தத் தாலுகாவில் புதிதாகத் துவக்கப்பட்டிருந்த விவசாய ஆபீஸ் அது. டிமான்ஸ்ட்ரேட்டர் மாதத்தில் இருபது நாள்களுக்கும் அதிக மாகவே, பல ஊர்களுக்கும் சென்று விவசாய முன்னேற்றத்துக்கான ஆலோசனைகளை கிராம மக்களிடம் எடுத்துச் சொல்ல வேண்டும். விவசாய ஆபீசில் கிடைக்கக் கூடிய நல்ல விதைகளை விலைக்கு வாங்கிப் பயிர் செய்ய வேண்டும். இரும்புக் கலப்பை வாங்கி உழவேண்டும். இவற்றை எல்லாம் விவசாயிகளுக்கு எடுத்துக் கூறி, கலப்பை வாங்குவதற்காகக் கொடுக்கப்படும் கடன் தொகையை அவர்கள் பெறுவதற்கு உதவி, இரும்புக் கலப்பையை வரவழைத்து அவர்களுக்குக் கொடுக்க வேண்டும்.

விவசாய ஆபீசர் செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்ட பணிகள் இவை. அவருக்கு உதவியாள்களாக மேஸ்திரி என்று ஒருவரும் மெசஞ்சர் என ஒருவரும் உண்டு. மேஸ்திரி தனியாக ஊர்ஊராகப் போய் பிரசார அலுவல்களில் ஈடுபடவேண்டும். மெசஞ்சர் ஆபீசரோடு உதவியாகப் போய் வருவார்.

பரமக்குடியில் முதன்முதலாக அப்போது தான் விவசாய ஆபீஸ் திறக்கப்பட்டிருந்ததால், அலுவல்கள் எவையும் முறைப்படி செய்யப் படவில்லை. மேஸ்திரி பேருக்கு ஏதோ அந்த ஊர் போனேன், இந்த ஊர் போனேன் என்று டயரி எழுதிவிடுவார்.

ஆபீசர் அதற்கும் மேலே! அவர் குடும்பம் திருமங்கலம் ஊரில் வசித்தது. திருமணம் ஆக வேண்டிய நிலையில் ஒரு பெண்ணும், படிக்கும் பையன் ஒருவனும் இருந்ததாகச் சொன்னார். மகள் கல்யாணத்துக்காக முயற்சிகள் செய்து கொண்டிருந்ததால் அவர் அடிக்கடி விடுப்பில் திருமங்கலம் போய் விடுவார்.

அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு ‘லீவ்’ (விடுப்பு) விஷயத்தில் பல வசதிகள் இருந்தன. கேஷுவல் லீவ், பிரிவி லேஜ் லீவ், லீவ் ஆன் மெடிகல் சர்டிபிகேட், லீவ் ஆன் ஆவரேஜ் பே, லீவ் ஆன் லாஸ் ஆவ் பே என்று வருடத்தில் பெரும்பாலான காலத்தை அவர்கள் லீவிலேயே கழிக்க முடியும்.

டிமான்ஸ்ட்ரேட்டர் கணேசய்யர் இந்த சலுகைகளை நன்கு பயன்படுத்தினார். உத்தியோக ரீதியில் அவர் பரமக்குடியில் தங்கி யிருந்ததை விட, திருமங்கலத்தில் விடுப்பில் கழித்த நாள்களே அதிகம்.

அவர் நீண்ட கால விடுப்பில் போனால், அவருக்கு மாற்றாக பக்கத்து முதுகுளத்தூர் டிமான்ஸ்ட்ரேட்டர், அல்லது ராமநாதபுரம் டிமான்ஸ்ட்ரேட்டரை கூடுதல் பொறுப்பில் - 'இன் சார்ஜ்' ஆக - பரமக்குடி அலுவலையும் கவனிக்கும்படி நியமிப்பார்கள். அவர்கள் 'முறையைக் கழிக்கிற விதமாக' - அல்லது 'ஒப்பேத்துகிற தன்மையில்' மாதத்தில் ஒருநாள் எப்பவாவது வந்து, எதையாவது செய்துவிட்டுப் போவார்கள்.

முதுகுளத்தூர் அதிகாரி பரவால்லே ரகம். பகல் நேரத்தில் வந்து, பணிபுரிந்து விட்டு, சாயங்காலம் திரும்பிப்போய் விடுவார். ராமநாதபுரம் டிமான்ஸ்ட்ரேட்டர் மாலை 5 மணி ரயிலில் தான் வருவார். இரவில் உட்கார்ந்து தபால்களை கவனிப்பார். பதில் எழுதச்செய்வார். இரவு 9 மணி ரயிலில் ராமநாதபுரம் திரும்பிவிடுவார்.

மாலையில் சுதந்திரமாக ஆற்றுப்படுகையில் உலா போவதைத் தடுக்கும் விதத்தில் அவர் அப்படி வேலை செய்ய வந்து விடுகிறாரே என்று எனக்கு எரிச்சலாக இருக்கும்.

பொதுவாக, டிமான்ஸ்ட்ரேட்டர் ஆபீசில் அந்தக் காலத்தில் குமாஸ்தாவுக்கு அதிகமான வேலை இருந்ததில்லை. அதிலும், புதிதாகத் திறக்கப்பட்ட பரமக்குடி அலுவலகத்தில் வேலை என்பதே இருந்த தில்லை. தபாலில் வரக் கூடிய ஒன்றிரண்டு கடிதங்களை 'பைல் பண்ண வேண்டிய' (கோப்பில் இணைக்க வேண்டிய) வேலை தான். மற்றப்படி சும்மா இருக்கவேண்டியதுதான். சோம்பேறிச் சுப்பர்களுக்கு சுகமான வேலை.

எனக்கு படிப்பதற்கும் எழுதுவதற்கும் மிக வசதியாக இருந்தது அது.

ஆபீசுக்கு சற்று தள்ளி வைகை ஆறு. நவம்பர், டிசம்பர் மாதங்களில் தண்ணீர் தாராளமாக ஓடியது. குளிப்பதற்கு மிகச் சவுகரியமாக இருந்தது.

ஆற்றில் தண்ணீர் ஓடாத வறண்ட காலங்களில், ஓடுகால் என்கிற அமைப்பு குளிப்பதற்கு உதவியது. மணலில் வரிசையாக மூன்று பள்ளங்கள், இடம் விட்டு, தள்ளித் தள்ளி வெட்டப்பட்டிருக்கும்.

போதிய ஆழம் இருக்கும். ஒரு பள்ளத்திலிருந்து மற்றொன்றுக்கு தண்ணீர் ஓடக்கூடிய தன்மையில் கால்கள் வெட்டப்பட்டிருக்கும். அது தான் 'ஓடுகால்.'

முதலில், மூன்றாவது பள்ளத்தில் இருந்து வாளியில் தண்ணீர் எடுத்து வேட்டி துணிகளை நனைத்துப் பிழிய வேண்டும். இரண்டாவது பள்ளத்தில் குளிக்க வேண்டும். உடம்பைத் தேய்த்துக் குளிக்கலாம். சோப்பு போடுவது என்றால், வாளியில் தண்ணீர் எடுத்து வந்து கரையில் சற்று தள்ளி நின்று தேய்த்துக் கொள்ள வேண்டும். தண்ணீரால் சோப்பு நுரையைக் கழுவிப் போக்கிய பிறகு, பள்ளத்தில் இறங்கி முங்கு போடலாம். இரண்டாவது பள்ளத்தில் திருப்தியாகக் குளித்த பிறகு, முதல் பள்ளத்தில் இறங்கி அவசரமாக முழுக்குப் போட்டுவிட்டு உடனடியாகக் கரையேறிவிட வேண்டும்.

எல்லாம் ஒழுங்காக முறைப்படி நடக்கும்படியும், தண்ணீரை யாரும் அசுத்தமாக்கிவிடாதபடியும், பொதுநலப் பணிபுரியும் இயல்பு பெற்ற பெரியவர்கள் கவனித்துக்கொள்வார்கள். ஓடுகாலில் குளிக்கிறவர்கள் காசு கொடுக்க வேண்டும் என்கிற கட்டாயம் எதுவும் இல்லை. ஆயினும் காசு கொடுக்க மனமுள்ளவர்கள் தருகிற காசை வாங்கிக்கொள்வார்கள். அப்படிக் கொடுக்கிற காசை எவர் கையிலும் தரவேண்டாம். ஓடுகால் அருகிலேயே மணலில் சிறிதாக பள்ளம் பறித்துவைத்திருப்பார்கள். அதில் காலணா, ஒரு அணா என்று காசுகள் கிடக்கும். குளித்து முடித்தவர்கள் போகிற போது அதில் அவரவர் விருப்பம் போல் காசுகள் போட்டுச் செல்லலாம். நாள் முடிவில், ஓடுகாலை பராமரிக்கிறவர்கள் அக் காசுகளை பங்கிட்டு எடுத்துக் கொள்வார்கள்.

ஆற்றுப் படுகையிலேயே மணல்பரப்பில் கிணறுகளும் இருந்தன. வாளியும் கயிறும் கொண்டு வருகிறவர்கள் கிணற்றில் நீர் மொண்டு குளித்து மகிழக் கூடிய வசதியும் இருந்தது.

பரமக்குடி வாழ்க்கை அமைதியும் இனிமையும் நிறைந்ததாகவே இருந்தது.

முதல் மாதம் சம்பளம் கிடைத்ததும் ரொம்ப சந்தோஷம் ஏற்பட்டது. பத்தொன்பது ரூபாய் தான் சம்பளம். என்றாலும், நான் வேலை பார்த்து அடைந்த முதலாவது சம்பளம் அது.

சாப்பாடு ஓட்டலுக்கு ஒன்பது ரூபாய். ஊருக்கு வீட்டுக்கு ஐந்து

ரூபாய் அனுப்பினேன். மீதம் ஐந்து ரூபாய் இருந்தது. அதை என்ன செய்வது என்று விளங்காத நிலையிலேயே அன்று நான் இருந்தேன்.

பல்பொடி, தலைக்குத் தேய்த்துக் கொள்ள எண்ணெய், கடிதம் எழுதத் தபால் கவர் இப்படி முக்கியமானவற்றை வாங்க ஒரு ரூபாய் போதுமானதாக இருந்தது. சாப்பாடு போக அதிகப் படியாக தின்பண்டம், மாலை டிபன் காபி என்று எந்த வழக்கம் அல்லது பழக்கமும் இருந்ததில்லை. பணத்தை என்ன செய்ய?

படிப்பதற்கு கதைப்புத்தகம் வாங்கலாம் என்ற எண்ணம் தோன்றியது. அந்தச் சமயத்தில் தான் கல்கியின் கதைகள் தொகுக்கப் பெற்று, 'கணையாழியின் கனவு' என்ற புத்தகமாக வந்திருந்தது. அதை வாங்கத் தீர்மானித்தேன்.

அந்தப் புத்தகம் ஆனந்த விகடன் விற்பனையாளரிடம் கிடைக்கும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. பரமக்குடியில் விகடன் ஏஜண்ட் யார் என விசாரித்ததில், சப்ரிஜிஸ்ட்ரார் ஆபீசில் கிளார்க் வேலை பார்க்கும் அழகு சொக்குப் பிள்ளை என்பவர்தான் விகடன் விற்பனையாளர் என்று தெரியவந்தது.

அந்த ஆபீசுக்குப் போய் அவரைப் பார்த்து, 'கணையாழியின் கனவு' புத்தகத்தை விலைக்கு வாங்கினேன். வாரம் தோறும் விகடன் இதழ் கொண்டு தருவதற்கும் ஏற்பாடு செய்தேன்.

அதன் பிறகு அவருக்கு விற்பனைக்காக வருகிற புத்தகங்களை வாங்கக்கூடிய வாடிக்கையாளராக அவர் என்னை சேர்த்துக் கொண்டார். 'மைக்கேல் காலின்ஸ்' - அயர்லாந்து சுதந்திரப் போராட்ட வீரர் ஒருவரின் வரலாறு - போன்ற புத்தகங்களை அவரிடமிருந்து பெற்றேன்.

அலுவலக நேரம் காலை ஒன்பது முதல் மாலை ஐந்து மணி முடிய. நான் ஆபீசிலேயே தங்கியிருந்தேன். பக்கத்திலேயே சாப்பாடு ஓட்டல். மாலையில் ஐந்து மணிக்கு அப்புறம் நான் வெகுதூரம் நடக்கும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டேன்.

கிழக்கே ராமநாதபுரம் போகும் ரயில் தண்டவாளம் ஓரமாக நடந்தேன். சிலநாள் முதுகுளத்தூர் ரோடில் நடந்து போய் திரும்பினேன். ஆற்றில் மணல் படுகையில் மேற்கே பல மைல்தூரம் நடந்தேன் சிலதினங்களில்.

முதுகுளத்தூர் ரோடில் தனியாக வெகுதூரம் போவது நல்லதல்ல என்று சிலர் எச்சரித்தார்கள். அந்தப் பக்கமெல்லாம் கொலையும் களவும் சகஜமாக, சர்வசாதாரணமாக நடக்கும். மூன்று ரூபாயைப் பையிலிருந்து பறித்துக் கொள்வதற்காகக் கொலை செய்திருக்கிறார்கள். பையில் ஒன்றும் இல்லாது போனால் கூட, ஏன் காசில்லாமல் வந்தே என்று கூறி ஆளை வெட்டித் தள்ளிவிடுவார்கள். கொலை செய்யத் தயங்காத நபர்கள் நிறைந்த பிரதேசம் அது என்று சொன்னார்கள்.

ஒரு சமயம் முதுகுளத்தூரில் தாசில்தாரை பட்டப்பகலில் வெட்டிக் கொலை செய்தார்கள் என்ற செய்தியும் அப்போது எழுந்து பரவியது. முதுகுளத்தூர் விவசாய ஆபீசில் மேஸ்திரியாகப் பணிபுரிந்த லாரன்ஸ் என்பவர் தற்காப்புக்காக ஒரு துப்பாக்கி வைத்துக் கொள்ள லைசன்ஸ் பெற்றிருந்தார். துப்பாக்கி வைத்திருக்கும் மேஸ்திரி என்ற தனிப் பெருமை அந்த இலாகாவில் அவருக்குக் கிடைத்திருந்தது.

மேல்திசையில் நீண்டுகிடந்த வைகை ஆற்றின் விரிந்து பரந்திருந்த மணல் பரப்பில், தனிமைப் பெருவெளியில் நடந்து போய் திரும்பி வருவது எனக்கு வெகுவாகப் பிடித்திருந்தது. கரைகள் மீது ஒன்றிரண்டு மரங்கள் நின்றன. மணல் வெளியில் ஆள் நடமாட்டமே இராது. சிலசமயம் ஒற்றையாய் நரி நடந்து போகும்; ஓடும். அதனால் ஆபத்து எதுவும் விளையவில்லை. அதுக்குத் தீங்கு எண்ணினால் தானே அது தாக்க முற்படும்? நான் என்பாட்டுக்கு நடப்பேன். நரி சும்மா பார்த்துவிட்டு அதன் வழியே போகும்.

மணல்வெளி யோகாசனம் செய்வதற்கும் வசதியான இடமாக இருந்தது. தனிமையில் இயற்கை வெளியில் ஆசனப் பயிற்சி செய்வது ஆனந்தமாகவும் ஆரோக்கியமானதாகவும் இருந்தது.

ஆபீசுக்கு அடுத்த கட்டிடத்தில், கிருஷ்ணய்யர் ஓட்டலின் மேல் பகுதியில், மாடியில், ராயல் டைப் ரைட்டிங் இன்ஸ்டி டியூட் என்கிற தட்டச்சு பயிற்றுவிக்கும் நிலையம் ஒன்று இருந்தது. ராமநாதபுரம் ஊர்வாசியான நித்தியானந்தம் என்பவர் அதை நிர்வகித்து நடத்தினார். அவர் ‘ஷார்ட்ஹேண்ட்’டும் பயிற்றுவித்தார். காலை எட்டு மணிமுதல் இரவு ஒன்பது மணிமுடிய மாணவர்கள் வந்து பயின்று சென்று கொண்டிருந்தனர்.

நானும் டைப் கற்றுக் கொள்ளச் சேர்ந்தேன். காலை எட்டு மணிமுதல் ஒன்பது வரை பயிற்சி நேரம்.

நித்தியானந்தம் தனியனாக வசித்தார். ஓட்டலில் சாப்பாடு. மேலே இன்ஸ்டிடியூட்டிலேயே படுக்கை எல்லாம். நான் டைப் கற்கச் சேர்ந்து, அவருடன் பழகி நண்பனானதும், என்னையும் அந்த மாடியிலேயே தங்கியிருக்க அனுமதித்தார் அவர்.

சில மாதங்களுக்குப் பிறகு நித்தியானந்தம் டைப் இன்ஸ்டிடியூட்டை வேறு இடத்துக்கு, வசதியான ஒரு பெரிய வீட்டுக்கு மாற்றினார். நானும் அங்கேயே தங்குவதற்காகப் போய்ச் சேர்ந்தேன்.

கீழ்ப்பகுதியில் மூன்று அறைகள் இருந்தன. மாடியிலும் விசாலமாக இடம் கிடந்தது. அதனால் மற்றும் இரண்டு பேர்கள் அங்கு தங்கியிருக்க வந்து சேர்ந்தார்கள். பள்ளி ஆசிரியர்கள்.

டைப் கற்றுக் கொள்வதற்கு என்று மாணவர்களும், பலவிதமான டைப் வேலைகளுக்காக (பத்திரங்கள், மனுக்கள் போன்றவற்றை டைப் செய்து வாங்கிப் போவதற்காக) அநேகரும் வந்து போகிற இடமாக அது அமைந்திருந்தது. சும்மா பேசிப் பொழுது போக்கு வதற்காக, படித்து விட்டு வேலை இல்லாதிருந்த வாலிபர்கள் சிலரும் வந்து அங்கேயே வெகு நேரம் தங்கி, காலக் கொலை செய்து கொண்டிருந்தார்கள். ஆகவே, அந்த இடம் எப்போதும் கலகலப்பாக இருந்தது.

எதிர் சாரியிலிருந்த குடும்பத்தினர், டாக்டர் வக்கீல் வகையரா - அந்த இடத்தை 'பிரமச்சாரிகள் மடம்' (பேச்சலர்ஸ் டென்) என்று குறிப்பிட்டுப் பேசினார்கள் என்றும் தெரியவந்தது.

பலவிதமான மனிதர்களையும் அவர்களது இயல்புகளையும் அறிந்து கொள்வதற்கு அந்த இடம் எனக்கு உதவியது. எனது படிப்பு ஆர்வத்தை அறிந்த சிலர் நல்லநல்ல புத்தகங்களை எனக்குக் கொடுத்து உதவினார்கள். கே. எஸ். வேங்கடரமணியின் ஆங்கில நூல்கள் பலவும் படிக்கக் கிடைத்தன.

கிராம சீர்திருத்தத்திலும் காந்திய வழிமுறைகளிலும் நம்பிக்கை கொண்டிருந்த வக்கீல் கே. எஸ். வேங்கடரமணி ஆங்கிலத்தில் பலவிதமான சிந்தனை நூல்கள் எழுதியிருந்தார். ஆன் தி சேன்ட் ட்யூன்ஸ் (மணல் மேடுகள் மீதிருந்து), பேப்பர் போட்ஸ் (காகிதப் படகுகள்), தி நெக்ஸ்ட் ரங்க் ஆஃப் தி லேடர் (ஏணியின் அடுத்த படி) போன்ற கட்டுரை நூல்கள்; முருகன் தி டில்லர் (முருகன் ஓர் உழவன்)

என்ற நாவல் முதலியன. அவை எல்லாம் இங்கிலாந்தின் பிரசுர நிறுவனம் ஒன்றினால் வெளியிடப்பட்டவை. அக்காலத்தில் பலராலும் விரும்பிப் படிக்கப்பெற்ற நூல்கள் அவை.

ஆலிவர் கோல்டுஸ்மித் எழுதிய 'தி சிட்டிசன் ஆஃப் தி ஒர்ல்ட்' என்ற பெரிய புத்தகத்தை ஒருவர் தந்தார். சீனாவிலிருந்து தத்துவஞானி ஒருவர் தனது நண்பருக்கு எழுதிய கடிதங்கள் என்று கோல்டுஸ்மித் பல்வேறு அனுபவங்கள் குறித்தும் ஆழ்ந்த முறையில், கடித வடிவத்தில், எழுதிய இலக்கிய நூல் அது. சுவாரசியமான அனுபவங்கள், விந்தை மனிதர்கள் பற்றிய வேடிக்கைக் கருத்துக்கள், தத்துவ எண்ணங்கள், ஆழ்ந்த நகைச்சுவை முதலியன நிறைந்த நூல் அது. மற்றும், மறைமலை அடிகள் எழுதிய நூல்களும் படிக்கக் கிடைத்தன.

பக்கத்துத் தெருவில் ஒரு நண்பர் இருக்கிறார். வீட்டிலேயே பள்ளிக்கூடம் வைத்து, சிறு பிள்ளைகளுக்கு கல்வி கற்றுக் கொடுக்கிறார். ஆன்மிக விஷயங்களில் மிகுந்த ஈடுபாடு உடையவர். அவர் நிறையப் புத்தகங்கள் வைத்திருக்கிறார். உங்களோடு பழகுவதில் அவர் மகிழ்ச்சி அடைவார் என்று ஒரு நண்பர் கூறினார். என்னை அவரிடம் அழைத்துச் சென்று அறிமுகம் செய்துவைத்தார்.

சுந்தரம் என்ற பெயர் உடைய அவர் இரு கால்களும் விளங்காதவர். எழுந்து நிற்கவோ, நடக்கவோ இயலாது. தவழ்வது போல் ஒரு மாதிரி நகர்ந்து நகர்ந்தே இடம் விட்டு இடம் மாறிச் செல்வார். அமைதியான இனிய முகத்தோற்றம் பெற்றிருந்தார். அன்பாகப் பேசிப்பழகினார். இராமகிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகானந்தா, ரமண மகரிஷி பற்றி எல்லாம் பேசினார். 'இராமகிருஷ்ண விஜயம்' எனும் மாத இதழின் சந்தாதார்.

சுந்தரம் அவரிடமிருந்த நூல்கள், 'இராமகிருஷ்ணவிஜயம்' தொகுப்புகள், புதிய இதழ்கள் ஆகியவற்றை எனக்கு படிக்கத் தந்தார். தினந்தோறும் இரவு 7 மணி முதல் 8 அல்லது எட்டரை மணி வரை நான் அவருடன் பேசியும், புத்தகம் படித்தும் பொழுது போக்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன்.

டைப் இன்ஸ்டிட்யூட்டில் தங்கியிருந்த பள்ளி ஆசிரியர்களில் ஒருவர் மதுரைக்குப் போய்விட்டார். புதிதாக ராம குப்தா என்ற ஒரு நண்பர் வந்து சேர்ந்தார். மலையாளி. பப்ளிக் ஒர்க்ஸ் டிப்பார்ட்மெண்டில் வேலை பார்த்தார். ராமகிருஷ்ண பரமஹம்சர்,

விவேகானந்தர், சுவாமி ராமதீர்த்தா போன்றவர்களின் உபதேசங்களில் ஈடுபாடு கொண்டிருந்தார். பிரமச்சாரியாகவே வாழ்வது என உறுதி பூண்டிருந்தார்.

அவர் ஒரு யோசனையை முன்வைத்தார். நாம் ஐந்து பேர் இருக்கிறோம். ஐந்து பேரும் ஓட்டலில் தான் சாப்பிடுகிறோம். ஓட்டலில் சாப்பிடுவதை விட, நாமே ஒரு ஆளை ஏற்பாடு செய்து, வீட்டில் சமைத்துச் சாப்பிடலாம். சுசிருசியாக நமக்கு வேண்டியவற்றை செய்து கொள்ள முடியும். செலவும் குறையும். ஓட்டலுக்குக் கொடுக்கிற அளவு பணம் நமக்கு இங்கு ஆகாது என்றார்.

நல்ல யோசனை தான். இந்த வீட்டிலும் சமையல் அறை எல்லாம் வசதியாக இருக்கு. சமையல் வேலைகளை கவனிப்பதற்கு நம்பிக்கையான ஒரு ஆள் வேண்டுமே என்று நித்தியானந்தம் சொன்னார்.

அது ஒரு பிரச்சினை இல்லை. ஊரில் என் தம்பி இருக்கிறான். நன்றாக சமையல் வேலைகள் செய்வான். ஓட்டலில் பணிபுரிந்து அனுபவம் பெற்றவன். அவனை நான் வரவழைக்கிறேன். அவனுக்கு சம்பளம் அதிகம் தரவேண்டியதில்லை என்று ராம குப்தா கூறினார்.

அப்படியே செய்யலாம் என்று முடிவு ஆயிற்று. ராம குப்தாவின் தம்பி ஊரிலிருந்து வந்து சேர்ந்தான். தேவையான பாத்திரங்கள், பொருள்கள் பலவும் வாங்கப்பட்டன.

ஒரு நல்ல நாளில் வீட்டு உணவுத் திட்டம் செயல்படத் துவங்கியது. தண்ணீர் எடுத்து வர, வீடு பெருக்க என்று ஏற்கனவே ஒரு பெண் வேலை செய்து கொண்டிருந்தாள். பாத்திரங்களைக் கழுவி சுத்தம் செய்யும் பொறுப்பும் அவளைச் சேர்ந்ததாயிற்று.

எல்லாம் சுமுகமாக, நன்றாக இயங்கிக் கொண்டிருந்தது. மூன்று மாதங்கள் நல்லபடியாகவே கழிந்தன. அது மேலும் தொடர்ந்திருக்கக் கூடும். ஆனால் தம்பி குப்தாவின் போக்கு கோளாறானதாக மாறியிருந்தது.

அவன் தனது இயல்பான சுறுசுறுப்பை இழந்தான். சோர்ந்து சோர்ந்து படுத்துக் கிடப்பதில் அதிக ஆர்வம் காட்டினான். சமையல் வேலைகள் செய்வதில் உற்சாகமில்லாதவனானான். அவனுக்கு ஏதோ வியாதி ஏற்பட்டுள்ளது என்பது எல்லோருக்கும் புரிந்தது.

அந்தத் தெருவிலேயே மலையாள டாக்டர் ஒருவர் வெற்றிகரமாகத்

தொழில் புரிந்து கொண்டிருந்தார். 'பொம்பிளைசீக்கு ஸ்பெஷலிஸ்ட்' என்று பெயர் பெற்றவர்.

டைப் இன்ஸ்டிடியூட் இருந்த தெருவின் தொடர்ச்சியாக அமைந்திருந்த சின்னத் தெரு, அந்தியிலும் இரவுகளிலும் இன்பத் தொழில் நடத்தும் பெண்கள் வசித்த பகுதியாகும். வீடுதோறும் விதம்விதமான பெண்கள் சிங்காரித்தபடி நின்று, தொழிலுக்கான தூண்டில் வீசிக் காத்திருக்கும் பிரதேசம்.

அந்தத் தெருவுக்கும் டைப் இன்ஸ்டிடியூட் தெருவுக்கும் இடைப்பட்ட ஒரு கட்டிடத்தில் தான் அந்த டாக்டர் தொழில் நடத்திக் கொண்டிருந்தார். அவர் அடிக்கடி இன்ஸ்டிடியூட்டுக்கு வந்து ஜாலியாக அரட்டை அடிப்பது வழக்கம்.

அவர் தம்பி குப்தாவை பார்த்ததும், பையனும் வாங்கிவிட்டான் போலிருக்கே என்று கூறிச் சிரித்தார்.

எதை வாங்கினான் என்று அப்பாவித்தனமாக ராம குப்தா விசாரித்தார்.

இந்த ஏரியாவிலே மலிவாகக் கிடைக்கிற பொம்பிளை சீக்கைத் தான். பையன் இந்த வட்டாரத்துப் பொம்பிளை எவ கிட்டேயோ போயி வசமாக மாட்டிக்கிட்டான் என்று தமாஷாகப் பேசினார் டாக்டர்.

அது தான் உண்மை என்று புரிந்தது. டாக்டர் பரிசோதித்து தேவையான சிகிச்சைகள் செய்தார்.

ஒழுக்க சீலரான அண்ணன் ராமகுப்தாவுக்கு இது பெரும் அதிர்ச்சி அளித்தது. தம்பி இப்படி நடந்து கொள்வான் என்று அவர் எண்ணவில்லை. அவர் கோபம் கொண்டார். உடனடியாக மூட்டை முடிச்சுகளோடு ஊர் போய்ச் சேர் என்று தம்பிக்கு உத்திரவிட்டார். வேண்டியவற்றை அவசரம் அவசரமாகச் செய்து அவனை அனுப்பி வைத்தார்.

அவன் போனதோடு, வீட்டுச் சமையல் ஏற்பாடும் முடிவு அடைந்தது. மூன்று மாத வாழ்வு! அப்புறம் மீண்டும் ஓட்டல் சாப்பாடு தான் வாய்த்தது இவருக்கும்.

ஆபீசிலும் மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டுதானிருந்தன. நான் வந்து சேர்ந்த சமயம் மெசஞ்சராகப் பணிபுரிந்த ராமசாமி நாயுடு,

பெரியகுளம் போய் குடும்பத்தைக் கூட்டி வந்தார். அநேக மாதங்களுக்குப் பிறகு அவர் வேறு இடத்துக்கு மாறுதலாகிப் போய் விட்டார். டிமான்ஸ்ட்ரேட்டர் கணேசய்யரும் இடமாறுதல் பெற்று பரமக்குடியை விட்டுப் போனார். பிறகு கந்தசுவாமி என்ற துடிப்பான இளைஞர் அதிகாரியாக வந்தார். ஆறேழு மாதங்களில் அவரும் கோவில்பட்டிக்கு மாற்றப்பட்டார்.

ஆபீசர் இல்லாத காலங்களே அதிகம் இருந்தன. எனக்கு நிறையவே நேரம் கிடைத்தது. கதைகள் கட்டுரைகள் கவிதைகள் எழுதி பத்திரிகைகளுக்கு அனுப்பிக் கொண்டிருந்தேன். ‘சக்தி’ என்ற பெயர் முடிவைக் கொண்ட இதழ்கள் பல இருந்தன. அந்நாள்களில். நவசக்தி, லோகசக்தி, பாரத சக்தி என்றெல்லாம் பெயர்வைப்பதில் இளைஞர்கள் உற்சாகம் கொண்டிருந்தார்கள்.

நவசக்தி திரு.வி. கலியாண சுந்தர முதலியார் நடத்திய பத்திரிகை. அதில் உதவி ஆசிரியராகப் பணிபுரிந்த சக்திதாசன் சுப்பிரமணியன் என்பவர் லோக சக்தியையும் கவனித்துக் கொண்டார். அதை எம்.கே. திருவேங்கடம் என்கிறவர் நடத்தினார். அவரே பாரதசக்தி என்ற பத்திரிகையையும் நடத்தினார்.

இவை தேசபக்தியை வளர்க்கும் கட்டுரைகள், கவிதைகள் கதைகளை வெளியிட்டன. விழி, எழு, போராடு என்ற தன்மையில் உணர்ச்சியைத் தூண்டும் நடையில் எழுதப்பட்ட விஷயங்கள். நானும் அதே விதமான கட்டுரைகள் கவிதைகள் எழுதினேன். ஒவ்வொரு இதழிலும் அவை தவறாது இடம்பெற்றன.

லோகசக்தி, பாரத சக்தி இதழ்களில் மதுரை ஐ, மாயாண்டி பாரதி விறுவிறுப்பான கட்டுரைகள் எழுதினார். ‘படுகளத்தில் பாரததேவி’ என்ற தொடர் உணர்ச்சி வேகம் கொண்டதாக அமைந்திருந்தது.

இக் காலகட்டத்தில் தான் எனக்கு ஒரு புனைபெயர் தேவை என்ற எண்ணம் எழுந்தது. இதுவரை ரா. சு. கிருஷ்ண சுவாமி என்ற பெயரிலேயே எழுதிக் கொண்டிருந்தேன். நல்லதாக ஒரு பெயர் வேண்டும்; என்ன பெயர் வைக்கலாம் என்று எண்ணி வந்தேன்.

கவி சுப்பிரமணிய பாரதியார் வரலாற்றில், அவர் நண்பரான குவளைக் கண்ணன் பற்றிய குறிப்புகள் உண்டு. குவளையூர் கிருஷ்ணமாச்சாரி என்ற பெயரை பாரதி குவளைக்கண்ணன் என்று ஆக்கி அவரை அவ்விதமே அழைத்தார் என்று ஒரு குறிப்பு இருந்தது.

நானும் ராஜவல்லிபுரம் கிருஷ்ணசுவாமி என்ற பெயரிலிருந்து வல்லிக்கண்ணன் என்ற பெயரை அமைக்கலாம் என்று எண்ணினேன்.

அந்நாள்களில் இந்தி மொழி எதிர்ப்பும் தனித்தமிழ் வளர்ச்சியும் மேலோங்கி வந்தன. வடமொழிப் பெயர்களை தமிழ்ப் பெயர்களாக மாற்றுவது பற்றிய அறிவிப்புகள் வந்து கொண்டிருந்தன. அப்படி எந்த எந்தப் பிறசொல் பெயர்களுக்கு என்ன என்ன தமிழ்ப் பெயர்கள் வைக்கலாம் என்று பட்டியலிட்டு, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் ஒரு சிறு பிரசுரம் வெளியிட்டிருந்தது.

அதிலும், கிருஷ்ணன், கிருஷ்ணசுவாமி, கிருஷ்ணமூர்த்தி என்ற பெயர் உடையவர்கள் கண்ணன் என்று தங்கள் பெயரை மாற்றி அமைக்கலாம் என்ற விளக்கம் காணப்பட்டது.

ஆகவே, ராஜவல்லிபுரத்தில் உள்ள வல்லியையும், கிருஷ்ணனுக்கான கண்ணனையும் சேர்த்து வல்லிக்கண்ணன் என்ற பெயரை நான் தேர்ந்து கொண்டேன். 'பாரதசக்தி'யில் வெளியான விறுவிறுப்புக் கட்டுரை ஒன்றில் தான் முதன்முதலாக இந்தப் புனைபெயர் இடம் பெற்றது.

இந்தி எதிர்ப்பு நாட்டில் வேகமாகப் பரவி வந்தது. பெரியார் ஈ.வே.ராமசாமியும் அவர் கட்சிப் பேச்சாளர்களும் பரமக்குடிக்கும் வந்து சொற்பொழிவுகள் ஆற்றினார்கள். அக்காலத்தில்தான் சுவாமி வேதாசலம் என்ற மறைமலை அடிகளின் தனித்தமிழ் நூல்கள் பரவலாக எங்கும் வாசிக்கப்படலாயின.

நண்பர் நித்தியானந்தம் மறைமலை அடிகள் நூல்கள் பலவற்றையும், இரவலாகவும் விலைகொடுத்து வாங்கியும், ஆர்வமாகப் படிக்கலானார். எனக்கும் அவை படிக்கக் கிடைத்தன. கடிதங்கள் வடிவில் அவர் எழுதியிருந்த நாவலான 'கோகிலாம்பாள் கடிதங்கள்' சிறப்பானதாகத் தோன்றியது எனக்கு.

அந் நாள்களில் நான் இந்தி மொழியும் கற்றேன். 'ஹிந்தி ஸ்வபோதினி' என்று தானாகவே இந்தி கற்க உதவும் நூல் வெகுவாகப் பயன்பட்டது. இந்தி பிரசார சபை வெளியிட்ட பாடப்புத்தகங்கள், சிறுசிறு கதை நூல்கள் பலவும் வாங்கிப் படித்தேன். 'ப்ராத் மிக்' எனும் ஆரம்பப் பரீட்சை முதலாவதாக எழுத வேண்டிய தேர்வு ஆகும். அடுத்தது 'மத்யமா.'

ஆரம்பப் பரீட்சை எழுதாமலே, நேரடியாக 'மத்யமா' தேர்வு

எழுதலாம் என்ற வசதியும் இருந்தது. எனவே நான் நேராக 'மத்யமா' எழுதினேன். தேர்வு பெற்றதற்கான சான்றிதழும் கிடைக்கப் பெற்றேன். அடுத்து 'ராஷ்ட்ர பாஷா' தேர்வு எழுதலாம்.

ஆனால், நான் பரீட்சை எழுதும் நோக்கமின்றி இந்தி நூல்களைப் படிப்பதில் ஆர்வம் கொண்டேன். பிரேம் சந்த் கதைகள் முதலிய புத்தகங்கள் படித்தேன். பேச்சைன் ஷர்மா என்றொரு எழுத்தாளர், 'உக்ர' என்று புனைபெயரில், வேகமும் விறுவிறுப்பும் நிறைந்த நடையில் கட்டுரைகள் எழுதினார். அவை எனக்குப் பிடித்திருந்தன.

'உக்ர'வின் பணத்தின் சக்தி பற்றிய கட்டுரையையும், வேறொன்றையும் தமிழாக்கினேன். பிரேம் சந்த் கதைகள் சிலவற்றையும் மொழி பெயர்த்தேன். 'ஷாந்தி குடீர்' என்றொரு பெரிய நாவலை (ஆசிரியர் பெயர் நினைவில்லை) படித்தேன்.

அது தான் நான் படித்த கடைசி இந்திப் புத்தகம். அதன் பிறகு நான் இந்தி நூல்கள் படிப்பதில் ஆர்வம் கொள்ளவில்லை. தமிழ்ப் புத்தகங்களும் ஆங்கில நூல்களும் மிக அதிகமாகவே படிக்க வேண்டியிருந்தன. அதனால் இந்தி படிப்பதை விட்டு விட்டேன். காலஓட்டத்தில், நான் கற்ற இந்தியும் மறந்தே போய்விட்டது. அதற்காக நான் வருத்தப் படவுமில்லை.

ஆபீசில் முத்துக் கோனார் என்ற இளைஞர் மெசஞ்சராகப் பொறுப்பேற்றார். ஆரம்பம் முதலே சுப்பையா (தேவர்) என்பவர் தான் மேஸ்திரியாக வேலை பார்த்து வந்தார். நான் பரமக்குடியில் இருந்தவரையில் இவ் இருவருமே பணிபுரிந்து வந்தனர்.

கந்தசுவாமி மாறிப் போய் சில மாதங்கள் சென்றதும், கோவிந்த குருப் என்பவர் டிமான்ஸ்ட்ரேட்டராக வந்து சேர்ந்தார். அவர் தோற்றத்தில் முதியவர் போல் தென்பட்டாலும் வயது குறைந்தவர் தான். பரமக்குடிக்கு வந்தபிறகு தான் அவர் விடுப்பில் சொந்த ஊர் போய் திருமணம் புரிந்த கொண்டார். மனைவியையும் உடன் அழைத்து வந்து, அவ்வூரில் வசதியான வீடு பார்த்துக் குடும்பம் நடத்தினார். நல்ல மனிதர்.

பரமக்குடிக்கு வந்து பொறுப்பேற்ற டிமான்ஸ்ட்ரேட்டர்கள் பலரும் என்னிடம் அன்பும் பிரியமுமாகவே நடந்து வந்தனர். அதிகாரிகள் மீது குறை கூறுவதற்கோ, வேலையில் சலிப்பும் வெறுப்பும் கொள்வதற்கோ எவ்விதக் காரணமும் இருந்ததில்லை.

காலம் மகிழ்ச்சிகரமாகவே போய்க்கொண்டிருந்தது. ஊரில் இருந்து அண்ணன் அவ்வப்போது கடிதம் எழுதுவார். நானும் கடிதங்கள் எழுதினேன் மாதம் தோறும் வீட்டுக்குப் பணம் அனுப்பினேன்.

ஆபீஸ் வாசலில் நின்றால், சிறிது தொலைவில் ரயில்வண்டி போவதும் வருவதும் தெரியும். ஊரில் இருந்து என்றைக்காவது யாராவது என்னை பார்க்க வரலாம் என்ற நினைப்பு மனசில் எழும். அப்படி யாரும் வருவது சாத்தியமில்லை, பொருளாதார சிரமங்கள் உண்டு என அறிவு சொல்லும். இருப்பினும் தனிமை வாழ்வில், மனம் ஆசைப்படும், அவ்விதம் நிகழலாம் என்று.

அந்த ஊரில் நான் வசித்த இரண்டு வருடங்களில், ஊரிலிருந்து யாரும் என்னை பார்க்க வரவில்லை. நானும் ஒரு முறை கூட திருநெல்வேலிக்குப் போகவில்லை. வேறு எந்த ஊருக்கும் போகவில்லை என்று தான் சொல்ல வேண்டும்.

ராமேசுவரம் பக்கம் போகிற ரயில்வண்டிகள், என்றாவது ஒருநாள் நானும் இதில் ஏறிப்போய் ராமேசுவரம், தனுஷ்கோடி, பாம்பன் பாலம் எல்லாம் பார்த்து வர வேண்டும் என்ற ஆசையை மனசில் ஏற்படுத்தும். ஆனாலும் ஒரு தடவை கூட அது நிகழ்ந்ததில்லை.

ஒருமுறை ஆபீஸ் விஷயமாக ராமநாதபுரம் போய் வந்தேன். மதுரைக்கு இரண்டு தடவைகள் போய்வந்தேன். ஆபீஸ் விசேஷ நிகழ்ச்சி ஒன்றில் கலந்து கொள்வதற்காக ஒரு முறை; டைப் ரைட்டிங் பரீட்சை எழுதுவதற்காக ஒருமுறை. இவ்வளவுதான் இரண்டு வருட காலத்தில் நிகழ்ந்த எனது வெளியூர் பயணங்கள். மனம் என்னவோ ஊர்கள் சுற்ற வேண்டும் என்று ஆசைப்பட்டுக் கொண்டு தான் இருந்தது.

ஒருசமயம் சென்னையிலிருந்து சக்திதாசன் சுப்பிரமணியன் திடீரென வந்து சேர்ந்தார். லோகசக்தி, பாரத சக்தி பத்திரிகைகள், லோக சக்தி வெளியீடுகள் ஆகியவற்றை விற்ற பணத்தை நீண்டகாலமாக பரமக்குடி ஏஜன்ட் அனுப்பவில்லை. இப்படிப் பல ஊர்களின் விற்பனையாளர்களும் பாக்கி வைத்திருந்தார்கள். ஊர்ஊராகப் போய், சம்பந்தப்பட்ட ஏஜன்டுகளைக் கண்டு பேசி, பணத்தை வசூல் பண்ண வேண்டும் என்ற நோக்கத்துடன் அவர் பயணம் மேற்கொண்டிருந்தார்.

சக்திதாசன் சுப்பிரமணியன் தான் நான் சந்தித்த முதலாவது சென்னை எழுத்தாளர்; பத்திரிகை ஆசிரியர். அவர் துடிப்பான இளைஞராக இருந்தார். தஞ்சாவூர் ஜில்லா சீர்காழியை சேர்ந்தவர் என்று சொன்னார். சென்னை மாநகர் பற்றியும், பத்திரிகை உலகம் பற்றியும், நாகரிகப் பெருநகரின் விநோதங்கள் பற்றியும் சுவாரசியமாகப் பேசினார். சுவையான அனுபவங்களை விவரித்தார். நீங்கள் வளர்ச்சி பெற வேண்டுமானால், சென்னைக்கு வந்து தங்குவது தான் சரியாக இருக்கும் என்றார்.

அரசாங்க அலுவலகம் ஒன்றில் பணிபுரிந்து கொண்டு, தேசபக்தி ஊட்டுகிற, வேகமும் விறுவிறுப்பும் நிறைந்த, உணர்ச்சிமயமான கட்டுரைகள் கவிதைகள் எழுதிக் கொண்டிருப்பது துணிச்சலான செயல் என்றார். இது பற்றி அவரும் திருவேங்கடமும் மற்றவர்களும் அடிக்கடி வியந்து பேசுவது உண்டு என்றும் சொன்னார்.

பரமக்குடி பத்திரிகை ஏஜன்ட் பாக்கிப் பணம் முழுவதையும் சக்திதாசனிடம் கொடுத்துவிடவில்லை. ஏதோ கொஞ்சம் கொடுத்தார். லோகசக்தி வெளியீடுகள் விற்பனையாக வில்லை; புத்தகங்கள் அப்படியே கிடக்கின்றன என்றார். கணக்குப் பார்த்து, புத்தகங்களை என்னிடம் தந்துவிடும்படி சக்திதாசன் ஏஜன்டிடம் தெரிவித்தார்.

சக்திதாசன் இரண்டு நாள்கள் எங்களுடன் தங்கியிருந்தார். பிறகு விடைபெற்றுச் சென்றார். போகிற போதும், நீங்கள் இருக்க வேண்டிய இடம் அரசாங்க ஆபீஸ் அல்ல; சென்னையில் ஒரு பத்திரிகை ஆபீஸ் தான் உங்களுக்கு ஏற்ற இடமாக இருக்கும். காலம் வரும். நானே உங்களை சென்னைக்கு அழைத்துக் கொள்வேன் என்று உறுதியாகச் சொன்னார்.

நான் சென்னை சேரவேண்டும் என்ற எண்ணத்தை என் உள்ளத்தில் முதல்முதலாக ஊன்றி வளரவைத்தவர் சக்திதாசன் சுப்பிரமணியன் தான்.

காலம் நகர்ந்து கொண்டிருந்தது. இந்திய தேசிய விடுதலைப் போராட்டமும் மெதுமெதுவாக இயங்கிக்கொண்டிருந்தது. காங்கிரஸ் சமூக சீர்திருத்த விஷயங்களில் கவனம் செலுத்தியது. தீண்டாமை ஒழிப்பில் அது மும்முரமாக முனைந்து நின்றது. கோயில் நுழைவை (தீண்டாதவர்களின் ஆலயப்பிரவேசம்) சிற்சில ஊர்களில் நிகழ்த்தியது.

தீண்டாமை உணர்வை அகற்றுவதற்காக, சமபந்தி போஜன நடவடிக்கைகளில் கவனம் செலுத்தியது.

பரமக்குடியிலும் காங்கிரஸ் செல்வாக்குப் பெற்றிருந்தது. நெசவுத் தொழிலில் ஈடுபட்ட சௌராஷ்டிரர்கள் அங்கு மிகுதியாக இருந்தார்கள். 'மட்டி பனியன்' என்று ஒருவகை மேலாடை உற்பத்தியில் அந்த ஊர் பெயர்பெற்றிருந்தது. கோவிந்தன் என்கிற மட்டி பனியன் உற்பத்தித் தொழிலதிபர் காங்கிரஸ் பிரமுகராகச் செயலாற்றிக் கொண்டிருந்தார்.

அவரது ஏற்பாட்டின்படி பரமக்குடியில், கடைத்தெருவை ஒட்டிய நீண்ட பெரிய ரோடில் பந்தி பரப்பி, சமபந்தி போஜனம் ஒருமுறை வெற்றிகரமாக நடைபெற்றது. அது பற்றி காங்கிரஸ்காரர்கள் பலரும் பெருமைப்பட்டார்கள்; வெகுநாள் பேசி மகிழ்ந்தார்கள்.

பரமக்குடி மற்றொரு வகையிலும் கவனிப்பு பெற்றிருந்தது. அந்நாள்களில் திரைப்படங்களில் நடித்துப் புகழ் பெற்றிருந்த பி. எஸ். சிவபாக்கியம் என்ற நடிகை பரமக்குடியை சேர்ந்தவர். அங்கு பிரதானமான இடத்தில், வசதியான வீடு ஒன்று கட்டி வசித்து வந்தார்.

நகைச்சுவைப் பாத்திரங்களில் நடித்து 'ஹாஸ்யநடிகை' என்று பெயர் அடைந்திருந்தார் அவர். அக்காலத்தில் படங்களில் நடிகர் நடிகையரே பாட்டுக்கள் பாடி நடிப்பார்கள். 'பின்னணி இசைப்பாடல்' (பிளே-பேக் சிங்கிங்) என்று ஒலிப்பதிவு செய்யும் முறை அப்போது நடைமுறைக்கு வந்திருக்கவில்லை.

பி.எஸ். சிவபாக்கியம் பாடிய பாடல்கள் கவர்ச்சிகரமாக இருந்தன. சில சர்ச்சைக்கும் எதிர்ப்புகளுக்கும் இடமளித்தன. 'நான் மதிச்சியத்தில் குடியிருக்கிறது. மதுரையிலே மோரு விக்கிறது' என்று நீட்டி இழுத்து, உரிய அங்கசேஷ்டைகளுடன் பாடிய ஒரு பாட்டு அவருக்கு மிகுந்த பெயர் வாங்கிக்கொடுத்திருந்தது.

அதேபோல, 'வண்ணான் வந்தானே! - வண்ணாரச் சின்னான் வந்தானே! - பின்னாலே வண்ணாத்தி வந்தாளே!' என்று நீட்டி இழுத்துப் பாடிய பாடல் ஒன்று. 'வழுக்குப் பாறையிலே வண்ணானும் வண்ணாத்தியும்... ஹாங்... வண்ணான் வண்ணாத்தியை... ஹூம்ங்...' என்று ஒலிக்குறிப்புகளோடும் முகச்சுளிப்புகளோடும் அவர் பாடிய முறை பரபரப்பு ஏற்படுத்தியது. உள்ளுறை பொருள் வைத்து அவர்

பாடுவதாக ரசிகர்கள் உணர்ந்து கைதட்டி, விசிலடித்து, ஆரவாரமாக அந்தப் பாடலை ரசித்தார்கள்.

ஊர்தோறும் பெரும் வரவேற்பைப் பெற்ற அந்தப் பாடல் உடை வெளுக்கும் தொழில் புரிவோரின் பலத்த எதிர்ப்பைக் கிளப்பி விட்டது. வண்ணார் சமூகத்தை இழிவுபடுத்துவதாகவும், அசிங்கமான பொருள் கொள்ளும்படியும் அந்தப் பாட்டு பாடப் படுகிறது என்று அவர்கள் கிளர்ச்சி செய்தார்கள். கண்டனங்கள் தெரிவித்தார் கள். ஆனாலும், படம் வெற்றிகரமாக ஓடி, அந்தப் பாடல் பி.எஸ். சிவபாக்கியத்துக்கு மேலும் அதிகமான பெயரை தந்தது என்று தான் சொல்ல வேண்டும்.

அந்நாள்களிலேயே சினிமா மக்களிடையே பெரும்பாதிப்பை ஏற்படுத்தியவாறு தான் வளர்ந்து வந்தது. விரும்பத்தகாத பாதிப்புகளும் கூடத் தான்.

'சிந்தாமணி' என்ற படம் பெரும் வெற்றி பெற்றிருந்தது. ஒவ்வொரு ஊரிலும் மாதக் கணக்கில் ஓடியது. எம்.கே. தியாக ராஜ பாகவதர் பாடி நடித்தது. அவருடன் இணைந்து அசுவத்தம்மா என்ற நடிகை நடித்திருந்தார். வேறு மொழி நடிகை. கன்னடத்துக்காரியாக இருக்கலாம். அவரிடம் ஒரு தனிக்கவர்ச்சி இருந்தது. அவர் கண்கள் பெரும்பலரைக் கிறங்கடித்தன. அக் கண்களின் சுழற்சியிலே சிக்கிப் பித்துற்ற இளைஞர்கள் மிகப் பலராவர்.

இலங்கையிலிருந்து ஒரு இளைஞர் அசுவத்தம்மா பித்துப் பிடித்து, 'அசுவத்தம்மாவை பார்க்க வேண்டும். அவர் கண்களின் காந்தப் பார்வையை நேரடியாகப் பெற வேண்டும்' என்று தமிழ் நாடு வந்து சேர்ந்து, ஏங்கித் திரிந்தார் என்று அக்காலத்தில் சொல்லப்பட்டது. அந்த இளைஞரைப் போலவே, அசுவத்தம்மாவை நேரில் பார்க்க வேண்டும் என்று எத்தனையோ பேர் அலைந்து திரிந்தார்கள்.

நான் பரமக்குடியை விட்டு வெளியேற வேண்டிய காலமும் வந்து சேர்ந்தது. திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள ஸ்ரீவைகுண்டம் ஊரின் விவசாய ஆபீசுக்கு நான் மாற்றப்பட்டேன். தானாக வந்து சேர்ந்த ஊர் மாற்றம் அது.

ஸ்ரீவைகுண்டம் ஆபீசில் குமாஸ்தாவாகப் பணிபுரிந்து கொண் டிருந்த சாம்பசிவம் என்பவர் பரமக்குடிக்கு மாற்றப்பட்டார். ஒரு

தண்டனை மாதிரி, இப்படி தூராதொலை ஊர் ஆபீசுக்கு அவர் மாற்றப்பட்டிருந்தார்.

அவர் ஸ்ரீவைகுண்டம் ஊர்காரர்தான். இளைஞர். மனைவியோடும் கைக்குழந்தையோடும் சொந்த ஊரில் சொந்தவீட்டில் வசதியாக வாழ்ந்து கொண்டிருந்தார். சொந்த ஊரிலேயே அரசாங்க உத்தியோகம் என்ற நிம்மதி அவருக்கும் அவர் குடும்பத்தாருக்கும் இருந்தது. அவர் தம்பி, தம்பி மனைவி, அம்மா எல்லோரும் கூடி வாழ்ந்த பெரிய குடும்பம் அது.

ஸ்ரீவைகுண்டம் ஆபீஸ் மேலதிகாரிக்கு (டிமான்ஸ்ட்ரேட்டர்) அவரை பிடிக்காமல் போயிற்று. அவரது வேலைகளில், போக்கில் எல்லாம் குறைகண்டார். மேலிடத்துக்கு ரிப்போர்ட்டுகள் அனுப்பிக் கொண்டேயிருந்தார். அதன் பயனாக அப்பாவி சாம்பசிவம் பரமக்குடி ஆபீசுக்கு மாற்றப் பெற்றார்.

பரமக்குடிக்கு வந்து சேர்ந்த சாம்பசிவம், ஸ்ரீவைகுண்டத்தில் அவர் வீட்டோடு - குடும்பத்தோடு - வசதியாக வாழ்ந்து கொண்டிருந்ததையும், அதைப் பிடிக்காத அதிகாரி இப்படி வெகுதூரத்தில் உள்ள ஊருக்கு தன்னை மாற்றச் செய்ததையும், இங்கு தனியாக, வசதிகள் குறைந்த இடத்தில் வந்து சிரமப்பட நேர்ந்து விட்டதையும் பற்றிப் புலம்பித் தீர்த்தார். ஸ்ரீவைகுண்டம் அதிகாரியின் போக்குகள் சிறுமைக்குணங்கள் பற்றி எல்லாம் சொன்னார்.

அவருக்குக் கீழே வேலை பார்க்கிறவர்களை - கிளார்க்கு, மேஸ்திரி, மெசஞ்சர் எல்லோரையுமே - அவர் சதா குறைகூறிக்கொண்டு தான் இருப்பார். மேலே ரிப்போர்ட் எழுதி அவர்களுக்கு தண்டனை வாங்கிக் கொடுப்பதில் அவருக்கு ஒரு சந்தோஷம். இரண்டு மேஸ்திரிகளுக்கு வேலைபோகும்படி செய்ததை அவர் பெருமையாகச் சொல்லிக் கொள்வார் என்றும் சாம்பசிவம் கூறினார்.

அந்த டிமான்ஸ்ட்ரேட்டர் பற்றி ஏற்கனவே பரமக்குடி டிமான்ஸ்ட்ரேட்டர் கணேசய்யரும், முதுகுளத்தூர் டிமான்ஸ்ட்ரேட்டரும், அவர் நண்பரும் ஒரு சமயம் பரிகாசமாகப் பேசிக் கொண்டதை நான் கேட்டிருந்தேன். அத்துறை சேர்ந்த பல அதிகாரிகள் பற்றியும் பேசிப் பொழுது போக்கிய அவர்கள், ராமநாதபுரம் ஆபீசில் ஒரு சமயம் பணிபுரிந்த - பின்னர் ஸ்ரீவை குண்டம் ஊருக்குப் போய்விட்ட -

அந்தோணி என்பவர் பற்றியும் பேசி மகிழ்ந்தார்கள். அந்தோணி என்ற பெயர் தனக்குத் தாழ்வு உணர்ச்சி தருவதாக எண்ணிய அவர் திடீரென்று தனது பெயரை அந்தோணிப் பிள்ளை என்று ஆக்கிக் கொண்டதையும், அவ்வாறே கையெழுத்திட்டுக் கடிதங்கள் அனுப்பியதையும் சொல்லிச் சிரித்தார்கள் அவர்கள். அவரது சிறுமைக்குணங்கள் சிலவற்றையும் குறிப்பிட்டுச் சொன்னார்கள்.

அத்தகைய குணச்சிறப்புகள் பெற்றிருந்த அதிகாரியின் கீழ் பணிபுரிவதற்கு நான் போயாக வேண்டிய கட்டாயத்தை காலம் ஏற்படுத்திவிட்டது!

அதிகாரி எப்பேர்ப்பட்டவராக இருந்தால் என்ன! நான் என் கடமைகளை ஒழுங்காகச் செய்ய வேண்டும். அது தான் முக்கியம் என்று எண்ணினேன் நான்.

பரமக்குடியை விட்டுப் புறப்படுவதற்கு முன்னரே, 'லோகசக்தி' ஏஜன்டைப் பார்த்து, லோகசக்தி வெளியீடுகளைப் பெற்றிருந்தேன். நான்கணா, எட்டணா விலையுள்ள சின்னச் சின்னப் புத்தகங்கள் அவை. சுமார் அறுபது இருந்தன.

அவற்றில் சிலவற்றை பரமக்குடி நண்பர்களுக்கு அன்பளிப்பாக வழங்கினேன். அத்தகைய பிரசுரங்களை விற்பனை செய்வது கஷ்டம் தான். அவற்றை 'லோக சக்தி' ஆபீசுக்கே அனுப்பிவைக்கவும் மனம் வரவில்லை. திருநெல்வேலியில் அவற்றை விற்பதற்கு ஏற்பாடு செய்ய முடியுமா என்று பார்க்கலாம் என்று எண்ணினேன். புத்தகங்களின் விலையை கணக்கிட்டு, கழிவு (கமிஷன்) தொகை நீக்கி, வந்த சிறுதொகையை 'லோகசக்தி' ஆபீசுக்கு அனுப்பி வைத்தேன்.

பரமக்குடிக்கு வந்த இரண்டு வருடங்களுக்குப் பிறகு ஒரு நாள் அந்த ஊருக்குக் கும்பிடு போட்டுவிட்டு ரயிலேறினேன். அனுபவமில்லாத ஒரு மாணவன் நிலையிலேயே நான் அந்த ஊருக்கு வந்தேன். பலவிதமான மனிதர்களைத் தெரிந்து கொள்ள வாய்ப்பும், ஏதோ சிறிது அனுபவமும் பெறுவதற்கு அந்த ஊர் எனக்கு உதவியது.

## ⌘ 12 ⌘

ஸ்ரீவைகுண்டம் ஏற்கனவே எனக்கு அறிமுகமான ஊர்தான். எனது ஆறு ஏழாவது வயதில் நாங்கள் பெருங்குளத்தில் வசித்தபோது அநேக தடவைகள் ஸ்ரீவைகுண்டம் வரவும், அந்த ஊரை ஓரளவு தெரிந்து கொள்ளவும் வாய்ப்புகள் கிட்டியிருந்தன. இப்போது அங்கேயே தங்கியிருந்து பணிபுரிய நேரிட்டது.

ஸ்ரீவைகுண்டம் ரயில்வே ஸ்டேஷனுக்கும் ஊருக்கும் ஒரு மைலுக்கும் அதிகமான தூரம் இருந்தது. ரயில்நிலையம் புதுக்குடிச்சத்திரம் என்ற சிற்றூரை அடுத்திருந்தது. அதைக் கடந்ததும் தாமிரவர்ணி ஆற்றுப்பாலம் மீதாக வந்து ஊரை அடைய வேண்டும்.

நான் பெட்டியுடன் ரயில்நிலையத்திலிருந்து வெளிப்பட்டதும், அங்கே நின்ற வண்டிக்காரர்களில் ஒருவர் - நடுவயதுக்காரர் - என்னை அணுகி, 'எங்கே போகணும்?' என்று விசாரித்தார்.

நான் விவசாய ஆபீசுக்கு என்று சொன்னதும், நீங்க எங்கே இருந்து வாறீக என்று கேட்டார். பரமக்குடியிலிருந்து என்று கூறியதும், சாம்பசிவ ஐயாவுக்கு பதிலாக வாற கிளார்க்கு நீங்கதானா? சரி, வண்டியிலே ஏறுங்க என்றார்.

வண்டி பெரியது தான். மாடுகளும் மிடுக்காக இருந்தன. என் பேரு கந்தன். விவசாய ஆபீசுக்கு வழக்கமா நான் தான் வண்டி ஓட்டுறது. ஸ்டேஷனிலிருந்து கொண்டு போக வேண்டிய சரக்குகள், ரயிலுக்கு அனுப்ப வேண்டிய சாமான்கள் இதுகளை நான் தான் கொண்டு போவேன் என்று அவர் தன்னை அறிமுகம் செய்து கொண்டார்.

வண்டியில் போகிறபோதே, சாம்பசிவன் பற்றியும், டிமான்ஸ்ட்ரேட்டர் அந்தோணி பிள்ளைக்கும் அவருக்கும் ஒத்துப்போகாதது பற்றியும் சொன்னார். சாம்பசிவன் வீடு போகிற வழியிலேதான் இருக்கு என்றும் தெரிவித்தார். அவர் வீட்டுக்கு ஏதாவது செய்தி சொல்லி அனுப்பினாரா என்று கேட்டார்.

குழந்தைக்காக ஒரு சட்டை வாங்கிக் கொடுத்திருக்கிறார். ஒரு கடிதமும் கொடுத்தனுப்பியிருக்கிறார். நல்லபடியாக இருப்பதாகவும், இடம் எல்லாம் வசதியாக இருப்பதாகவும் சொல்லும்படியும் கேட்டுக்கொண்டார் என்று தெரிவித்தேன்.

ஆற்றுப் பாலம் கடந்து, ஊர் எல்லையினுள் புகுந்து, கடைத் தெருவில் வண்டி போய் ஒரு இடத்தில் திரும்பியது. அங்கே வண்டியை நிறுத்தி, அதோ அந்த வீடு தான் சாம்பசிவன் பிள்ளை வீடு; அங்கே நிற்பது தான் அவரு தம்பி. நீங்க சட்டையையும் கடுதாசியையும் கொடுங்க; அவர்கிட்டே கொடுத்திடுறேன்; நீங்க வர வேண்டியதில்லை என்று கந்தன் கூறினார்.

நான் அவ்வாறே செய்தேன். அவர் வண்டியை விட்டு இறங்கி, அந்த வீட்டுக்குச் சென்று, படிக்கட்டின் மீதேறி, திண்ணை மீதிருந்தவரிடம் சட்டையையும் கடிதத்தையும் சொடுத்தார். என்னைப் பற்றி அவர் விவரம் சொல்லியிருக்க வேண்டும். தம்பி என் பக்கம் பார்த்தார். வீட்டினுள்ளிருந்து வந்த ஒரு பெண்ணும் ஒரு பெரிய அம்மாளும், வண்டிக்குள்ளிருந்த என்னை கவனித்தார்கள்.

கந்தன் வேகமாக வந்து வண்டியில் ஏறி, மாடுகளை நடக்கச் செய்தார். அந்த ஐயாதான் சாம்பசிவன் பிள்ளையின் தம்பி; உள்ளே இருந்து வந்து எட்டிப் பார்த்தது சாம்பசிவத்தின் மனைவியும் அம்மாவும். அவரு வீட்டோடு வசதியாக இருந்தாரு. குடும்பத்தைப் பிரிஞ்சு தனியா தூராதொலையிலே போயி வசிக்க நேர்ந்திருக்கு. அதுக்காக வீட்டிலே எல்லோரும் வருத்தப்பட்டுக்கிட்டுத் தான் இருக்காங்க என்று கந்தன் தெரிவித்தார்.

விவசாய ஆபீஸ் வந்து சேர்ந்தது. ஆபீஸ் பூட்டிக்கிடந்தது. அப்போது காலை மணி பத்து.

நீங்க வண்டியிலேயே இருங்க. ஆபிசர் வீடு கொஞ்சம் தள்ளி இருக்குது. நான் போயி சாவி வாங்கிட்டு வாறேன். கால் மணி நேரத்திலே வந்துவிடுவேன் என்று சொல்லி, கந்தன் வேகமாக நடந்தார்.

எளிய மனிதர்களின் அன்பும் பிறர்க்கு உதவும் குணமும் என்னை சிந்திக்கச் செய்தன. நல்ல மனிதன் என்று எண்ணிக் கொண்டேன்.

சற்று நேரத்தில் கந்தன் சாவியோடு வந்தார். சிரித்துக் கொண்டே சொன்னார்: ஆபீசருக்கு உங்க பேரிலே வருத்தம். புதுசா வாறவரு நேரே நம்ம வீட்டுக்குத் தானே வரணும்? ஏன் ஆபீசுக்குப் போகணும் என்று குறைபட்டுக் கொண்டார். சரி, சாவியை கொண்டு போ; கொஞ்ச நேரத்திலே நான் வாறேன் என்று சொல்லி அனுப்பினாரு என்று தெரிவித்தார்.

ஆபீஸ் கதவை - கம்பி அளிக் கதவு தான் - திறந்து, பெட்டியை இறக்கி உள்ளே கொண்டு போய் வைத்த கந்தன், அப்ப நான் வாறேன்; ஆபீசர் இப்ப வந்திருவாரு என்றார்.

உரிய வாடகையைப் பெற்றுக் கொண்டு, வண்டியை ஓட்டிச் சென்றார். உடனேயே சாம்பசிவத்தின் தம்பி வந்து நின்றார். வணக்கம் தெரிவித்து, அண்ணாச்சி எப்படி இருக்காக? ஏதாவது சமாச்சாரம் சொல்லி அனுப்பினாகளா என்று விசாரித்தார்.

நான் தகுந்த பதிலை சொன்னேன். சிறிது நேரம் பேசிவிட்டு அவர் போய்ச் சேர்ந்தார்.

பத்தரை மணி அளவுக்கு அந்தோணிப் பிள்ளை வந்தார். பிரயாணம் பற்றி விசாரித்தார். ஸ்டேஷனிலிருந்து நேரே நம்ம வீட்டுக்கே வந்திருக்கலாமில்லே? ஆபீசுக்கு ஏன் வரணும் என்று கேட்டார்.

நான் பதில் எதுவும் சொல்லவில்லை. அவர் இயல்பாக இதர விஷயங்கள் பற்றி விசாரித்தார். நீங்க ஆபீசிலேயே தங்கிக் கொள்ளலாம். இடம் நிறைய இருக்கு. பெரிய வீடாத் தானே இருக்கு! மேஸ்திரி முத்து சாமி பிள்ளையும், வெளியூர் போகாத நாள்களிலே, இங்கே தான் தங்குவாரு என்றும் அவர் சொன்னார்.

ஓட்டலிலே தானே சாப்பிடணும் என்று கேட்டார் அவர்.

ஆமா. தாலுகாபீசிலே வேலை பார்க்கும் உறவினர் ஒருவர் இங்கு இருக்கிறார். ராஜவல்லிபுரத்துக்காரர். தில்லைநாயகம் பிள்ளை என்று பேரு. எனக்கு அண்ணாச்சி முறை வேணும். சில வருடங்களாக அவர் இங்கே இருக்கிறார். அவர் மூலம் ஓட்டலுக்கு ஏற்பாடு செய்து கொள்ளலாம் என்றேன்.

அவர் திருப்தியோடு தலை அசைத்தார். என் வருகையை உரிய முறைப்படி பதிவு செய்தார். ஆபீஸ் முழுவதையும், அங்கிருந்த சாமான்களையும் காட்டினார்.

பல அறைகள் கொண்ட பெரிய வீடு. கடைசி அடுப்பங்கரை அறைக் கதவைத் திறந்தால் சிறு தோட்டம். காலி மனையாகத் தான் இருந்தது. அங்கு ஒரு கிணறும் இருந்தது. வீட்டு மாடியும் விசாலமானதாக இருந்தது. விவசாயச் சாமான்கள், சாக்கு மூட்டைகள் என்று சாமான்களும் அதிகம் காணப்பட்டன.

நான் இன்று பக்கத்து ஊருக்கு கேம்ப் போறேன். நீங்க ரெஸ்ட் எடுங்க. நாளைக்குப் பார்க்கலாம் என்று சொல்லி ஆபீசர் விடை பெற்றுச் சென்றார்.

பன்னிரண்டு மணி வாக்கில் ஆபீசைப் பூட்டிவிட்டு, நான் தாலுகா ஆபீசுக்குப் போனேன். அங்கு பணிபுரியும் அண்ணாச்சி தில்லைநாயகம் பிள்ளையைக் கண்டு பேசினேன். அவர் எப்ப வந்தே, எங்கே இருக்கிறே என்று பிரியமாக விசாரித்தார்.

இங்கே பக்கத்திலேயே கொம்பங்குளம் சுப்பையாப்பிள்ளை சாப்பாட்டுக் கடை இருக்கு. சாப்பாடு எல்லாம் ருசியா, நல்லாயிருக்கும். அங்கேயே நீ சாப்பிட ஏற்பாடு பண்ணிடலாம். இன்னைக்கு நம்ம வீட்டிலே சாப்பிடு என்று உபசரித்தார்.

உரிய நேரத்தில் அவர் என்னை அழைத்துக் கொண்டு புறப்பட்டார். கொம்பங்குளம் பிள்ளையின் 'சைவாள் சாப்பாட்டுக் கிளப்'புக்குக் கூட்டிப்போனார். நான் இந்த ஊருக்கு வந்த புதுசிலே, வீடு பார்த்து குடும்பத்தை அழைத்து வாற வரை, இந்த கிளப்பிலே தான் சாப்பிட்டேன். சுப்பையாப் பிள்ளை நல்ல மனுசன். கடை, சாப்பாட்டு வகைகள் எல்லாம் சுத்தமாக இருக்கும் என்று அண்ணாச்சி விவரித்தபடி வந்தார்.

சுப்பையாப் பிள்ளை முகம் மலர்ந்து வரவேற்றார். எளிய தோற்றம் கொண்டிருந்த சாதாரண மனிதராகவே தென்பட்டார். கடை முதலாளி என்ற தோரணை எதுவும் அவரிடம் இல்லை. அவரே வாடிக்கையாளர்களுக்கு சாதம் பரிமாறினார். வேறு இரண்டு உதவியாளர்களும் இருந்தார்கள்.

இலை போடவா? சாப்பிடுறேளா அண்ணாச்சி? என்று அவர் விசாரித்தார்.

இல்லை இல்லை. இது என் தம்பி. ராஜவல்லிபுரம்தான் ஊரு. இங்கே விவசாய ஆபீசிலே வேலை பார்க்க வந்திருக்கான். மாசச் சாப்பாடு ஏற்பாடு பண்ணனும். அதுக்குத்தான் கூட்டி வந்திருக்கேன் என்று அண்ணாச்சி விளக்கினார்.

அதுக்கென்ன! சாப்பிடட்டும் என்றார் பிள்ளை. மறுநாள் முதல், மாதச் சாப்பாடு இவ்வளவு ரூபாய் என்ற கணக்கில், அங்கேயே சாப்பிடுவது என்று பேசிமுடிக்கப்பட்டது. காலையில் இட்டிலி,

மத்தியானமும் இரவும் சாப்பாடு. மாதம் முடிந்ததும் மொத்தமாகப் பணம் கொடுத்து விடவேண்டும்.

பிள்ளையிடம் விடைபெற்றுக்கொண்டு, அண்ணாச்சி வீடு போய் சேர்ந்தோம். அதுவும் அருகில் தான், அடுத்த தெருவின் முனையில், இருந்தது. அவர் மனைவி தான் நெருங்கிய சொந்தம். என் அப்பா கூடப் பிறந்த சகோதரி (எனக்கு அத்தை)யின் மகள். 'மச்சி' என்ற உறவு. வயது முதிர்ந்தவள். ஆண்களும் பெண்களுமாக ஆறுகுழந்தைகள். ராஜவல்லி புரத்தில் எங்கள் வீட்டுக்கு எதிர்ப்புறத்தில் இருந்தது அவர்கள் வீடு.

முத்தம்மா மச்சி அன்புடன் வரவேற்றாள். பிரியமாக நலம் விசாரித்தாள். மதிய உணவு படைத்தாள்.

நேரமானதும் அண்ணாச்சி ஆபீசுக்குக் கிளம்பினார். நானும் விடைபெற்று ஆபீஸ் சென்றேன்.

இந்த விதமாக இனிது ஆரம்பித்தது ஸ்ரீவைகுண்டம் வாழ்க்கை.

அந்த ஊர் ஒரு பெரிய கிராமம் என்று சொல்லக்கூடிய தன்மையில் தான் இருந்தது. பரபரப்போ ஜனநெருக்கடியோ இல்லாத சாதாரண ஊர். உயர்நிலைப் பள்ளி, தாலுகாபீஸ், கோர்ட்டு, சப்ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ் என்று பலவும் இருந்தன.

கோர்ட்டு இருந்ததால் வக்கீல்கள் அதிகம் இருந்தார்கள். கோர்ட்டு இருந்த தெருவில் வரிசையாக வக்கீல் வீடுகள் காணப்பட்டன. அவற்றுடன், ஒவ்வொரு தெருவிலும் இரண்டு மூன்று வக்கீல் வீடுகள் இருந்தன. அவர்களுக்கு வருமானம் போதிய அளவு கிடைக்கக்கூடிய விதத்தில் தொழில் நடந்ததோ இல்லையோ, அவர்கள் தினந்தோறும் மணிக்கணக்குப்படி கோர்ட்டுக்குப் போய் வந்தார்கள்.

பஸ் நிலையமும் அருகிலேயே இருந்தது. ஆழ்வார் திருநகரி திருச்செந்தூர் போகிற பஸ்கள், தூத்துக்குடி, திருநெல்வேலி, ஏரல் போகிற பஸ்கள் என்று பல்வேறு பஸ்களும் வந்து போகிற இடமாக இருந்தது அந்த நிலையம். ஆயினும் பெரும் கும்பலோ நெருக்கடியோ கூச்சல் குழப்பமோ அங்கு தலை காட்டியதில்லை.

பெரிய கடைத்தெரு. சின்னக்கடைத் தெரு என்று இரண்டு கடைவீதிகள் இருந்தன. வியாபாரம் சுமாராக நடக்கும் பல விதக் கடைகளும் அங்கு இடம் பெற்றிருந்தன. ஐயர் ஓட்டல்களும், சைவப்பிள்ளைமார் கிளப்புகளும் போதுமான எண்ணிக்கையில்

இருந்தன. ‘அளவு சாப்பாடு’ என்பது வந்திராத காலம். விலையும் மலிவாகத் தான் இருந்தது. சாப்பிடுகிறவர்கள் வயிறு கொண்ட மட்டும், மனம் நிறைவுறுகிறபடி, விருப்பம் போல் உண்டு மகிழலாம்.

தாமிரவர்ணி ஆறு அகலமாய் நகர்ந்து கொண்டிருந்தது. ஆற்றின் கடைசி அணை ஸ்ரீவைகுண்டத்தில் அமைந்திருந்தது. இரு பக்கங்களிலும் கால்வாய்கள் அமைக்கப்பெற்று, சுற்றுவட்டார ஊர்களுக்கு விவசாயத்துக்காக சதா தண்ணீர் ஓடியது.

அணைக்கட்டு காரணமாக ஆற்றின் மேல்புறம் தண்ணீர் தேங்கி நின்றதால், படுகையில் சகதி படிந்துகிடக்கும். கரையோரமாகத் தான் பெரிய விஷ்ணு ஆலயம் - நவதிருப்பதிகளில் ஒன்றான கள்ளர்பிரான் திருக்கோயில் - இருந்தது. அதை ஒட்டி, ஜனங்கள் குளிப்பதற்காக படிக்கட்டுகள் அதிகமாகவும் வசதியாகவும் கட்டப்பட்டிருந்தன.

படிகளில் கொழுகொழு என்று சேறுபடிந்திருக்கும். குளிக்க இறங்குகிறவர்களின் பாதங்களோடு அது உறவாடும். அதன் பயனாக மக்களுக்கு சேற்றுப்புண் உண்டாகும். இது சகஜ நிகழ்வாக இருந்தது.

ஆற்றை ஒட்டி கரைகள் உயர்ந்த மேடாக அமைக்கப் பட்டிருந்தன. கரைக்கும் நீரோட்டத்துக்கும் இடைப்பட்ட நிலப்பரப்பு விசாலமாய், ஓங்கி வளர்ந்து நின்ற மருத மரங்கள் கொண்டதாய், பசுமையாய் அழகாகக் காட்சி தந்தது. கரைமீது நடந்து வெகுதூரம் உலா சென்று வர வசதியாக இருந்தது.

ஊரின் ஒவ்வொரு திசையிலும் நான் மாலை நேரத்தில் நடந்து போய் வந்தேன். பசிய வயல்கள், அவற்றை ஒட்டிய சிவன் கோயில், குளக்கரை என்று நெடுகிலும் சுற்றிப்பார்த்தேன்.

அப்படித் திரிந்த ஒரு மாலையில் எதிர்பாராத விதமாக எனது பள்ளித்தோழன் ஒருவனை சந்திக்க நேர்ந்தது. நடராஜன் என்று பெயர். உயர்நிலைப் பள்ளி வகுப்புகளில் என்னோடு படித்தான். புத்திசாலி மாணவன். ஒவ்வொரு பாடத்திலும் நல்ல மதிப்பெண்கள் பெறுவான். ஸ்ரீவைகுண்டம் சப்ரிஜிஸ்ட்ரார் ஆபீசில் கிளார்க் வேலை பார்ப்பதாகச் சொன்னான். என்னைப் பற்றியும் விசாரித்தான்.

ஆபீஸ் பக்கத்திலே தான் இருக்கிறது; வாயேன் என்று என்னை அழைத்துச் சென்றான். சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தோம். பிரிந்து போகையில், அடிக்கடி வா என்று சொல்லி வைத்தான்.

நான் அந்தப் பக்கமாக மாலை உலா போகிற போது அந்த அலுவலகத்தினுள் சென்று அவனைக் கண்டு பேசுவதை வழக்க மாக்கினேன். நான் போகிற போதெல்லாம் நடராஜன், பதிவு செய்யப்பட்ட பத்திரங்களைப் பார்த்துப் பிரதி எழுதும் வேலையிலேயே மும்முரமாக இருந்தான்.

பத்திரங்களை காப்பி பண்றது தான் என் வேலை. நான் 'காப்பியிங் மிஷின்' ஆகிவிட்டேன். நான் படித்த படிப்புக்கும், பெற்ற மார்க்கு களுக்கும் எனது புத்திசாலித்தனத்துக்கும் இந்த வேலைக்கும் சம்பந்தமே கிடையாது என்றான். அவனுக்கு புத்தகங்கள் படிப்பதிலோ வேறு எதிலுமோ ஆர்வமே இல்லாமல் போய்விட்டதை உணர்ந்தேன்.

அவனுக்காக என் மனம் பரிதாப்பட்டது. வேலை இருக்கிறது; சமூக மனிதர்கள் அவனுக்குப் பெண் கொடுக்கத் தயாராக இருப்பார்கள். அவன் கல்யாணம் செய்து கொண்டு, குடும்பஸ்தன் ஆகி, சராசரி பிரஜையாகக் காலம் தள்ளிக் கொண்டிருப்பான். மற்றுமொரு மனித இயந்திரமாக நடமாடுவான் என்று எண்ணினேன்.

என்னோடு படித்த மற்றுமொரு புத்திசாலி மாணவனை சிறிது நாள்களிலேயே கடைவீதியில் சந்திக்க நேரிட்டது. என்னோடு ஐந்தாம் வகுப்பிலிருந்து பத்து (எஸ்.எஸ்.எல்.சி.) முடியப் படித்தவன்.

கணக்குப்படி ஐந்தாவது பாரம் என்பது பத்தாம் வகுப்பு ஆகிறது. ஆறாவது பாரம் பதினொன்றாம் வகுப்பு ஆகும். ஆனாலும் நடை முறையில் அது பத்தாம் வகுப்பு என்றே குறிப்பிடப்பட்டது. குழப்பத்தைத் தவிர்ப்பதற்காக அநேகர் ஐந்தாவது பாரத்தை 'சின்னப் பத்து' என்றும், ஆறாவது பாரத்தை 'பெரிய பத்து' என்றும் குறிப்பிடுவார்கள்.

கொம்பங்குளம் சுப்பையாப் பிள்ளை கடையில் சாப்பிட்டுவிட்டு நான் வெளியே வந்தபோது ஒருநாள், எதிர் வரிசையில் இருந்த குமரகுருபரன் அச்சகத்தின் திண்ணைமீது சிவசுப்பிரமணியன் நின்றான். பள்ளியில் படித்த காலத்தில் அவனை எல்.எஸ். என்றும் (எல்.எஸ். சிவசுப்பிரமணியன் அவன் முழுப்பெயர்), என்னை ஆர்.எஸ். என்றும் (ஆர்.எஸ். கிருஷ்ணசுவாமியின் சுருக்கமாக) இதர மாணவர்கள் கூப்பிடுவது வழக்கம்.

'கிருஷ்ண சுவாமி, இங்கே எங்கே வந்தே?' என்று அவன் கேட்டான். அவன் உயரமாகவும் சதைப் பிடிப்போடும் வளர்ந்து காணப்பட்டான்.

நான் என்னைப் பற்றிக் கூறிவிட்டு நீ என்ன செய்கிறே என்று விசாரித்தேன்.

ஒண்ணும் செய்யலே. குமரகுருபரன் அச்சக முதலாளிதான் என் மாமனார். அவர் மகளை நான் கல்யாணம் செய்திருக்கிறேன் என்றான். பாளையங்கோட்டையில் தான் இருக்கிறேன். இங்கே மாமனார் வீட்டுக்கு அடிக்கடி வருவது உண்டு என்றும் தெரிவித்தான்.

படிக்கிற காலத்தில் ஆர்வமும் அறிவுக் கூர்மையும் கொண்டவனாக இருந்த அவன் இப்போது ரொம்ப சாதாரணமானவனாக, சராசரி நபராக, வாழ்ந்து கொண்டிருந்தான் என்று தெரிந்தது. அவனுக்காகவும் என் மனம் பரிதாபப்பட்டது.

படித்த படிப்புக்கும் வாழ்க்கை நடத்துவதற்கும் எவ்விதமான தொடர்பும் இல்லை. ஏதோ படிக்கிறார்கள்; ஏதாவது வேலை தேடி அலைகிறார்கள். வேலை கிடைத்தால் திருப்தி அடைந்து கல்யாணம், மனைவி, குடும்பம், பிள்ளைகள் என்று 'வாழ்க்கையில் செட்டில் ஆகி' விடுகிறார்கள். பெரும்பாலானவர்களின் வாழ்க்கை முறை இது வாகத்தான் இருக்கிறது என்று எண்ணினேன். அப்புறம் அவர்கள் அறிவை வளர்க்க வேண்டும், சிந்தனைத் திறனை வளர்க்க வேண்டும் என்று அக்கறை கொள்வதேயில்லை. புத்தகங்கள் படிப்பதில் கூட நாட்டம் கொள்வதில்லை.

இந்த வாழ்க்கைமுறை சரியானதில்லை என்று எனக்குப் பட்டது. இக் கருத்தை எதிரொலிப்பது போல, ஆபீசுக்கு வந்த ஒரு அதிகாரி பேசினார். செடிகொடிகளுக்கு பூச்சிகளால் நோய் ஏற்படும்போது, அதைப் போக்குவதற்காக உரிய மருந்து தெளித்து சிகிச்சை செய்யும் அதிகாரி அவர்.

ஸ்ரீவைகுண்டத்தில் உயர்நிலைப் பள்ளியை ஒட்டிய தோட்டத்தில் முந்திரி (திராட்சை)க்கொடி பயிரிடப்பட்டிருந்தது. காய்க்கும் பருவம். ஏதோ பூச்சி படர்ந்து நோய் கண்டிருந்தது. கொடிகளுக்கு பூச்சி மருந்து தெளிக்க வேண்டும் என்று, அவற்றைப் பார்வையிட்ட டிமான்ஸ்ட் ரேட்டர் தெரிவித்தார். அதை கவனிப்பதற்காக 'என்ட்டமாலஜிஸ்ட்' (பூச்சிகள் பற்றி விஞ்ஞானம் கற்றுத் தேர்ந்த சயன்டிஸ்ட்) வரவேண்டும் என்று மேல் ஆபீசுக்கு எழுதினார்.

ஒருநாள் அந்த அதிகாரி வந்து சேர்ந்தார். இளைஞர். கல்லூரி மாணவர் போல் தோற்றம் கொண்டிருந்தார். சுப்பையர் என்று பெயர்.

என்னை அவருக்குப் பிடித்து விட்டது. பகலில் கொடிகளுக்கு மருந்து தெளிக்கும் பணியை கவனித்தார். அதற்கான மேஸ்திரி, மருந்துகள், உரிய தெளிப்பான் கருவி எல்லாம் கொண்டு வந்திருந்தான்.

மாலை ஐந்து மணி ஆனதும், மருந்து தெளிக்கப்பட்ட திராட்சைக் கொடிகளை பார்த்து வரலாம்; நீங்களும் வாங்களேன் என்று அழைத்தார். போனேன்.

அவர் பல விஷயங்கள் பற்றியும் பேசிக்கொண்டு வந்தார். நாம படிக்கிற படிப்புக்கும் கிடைக்கிற வேலைக்கும் சம்பந்தமே கிடையாது. மேலும், இந்த நோக்கத்துக்காகத் தான் கல்வி கற்கணும் என்று யாரும் கல்வி பயில்வதுமில்லை. பெற்றோர்கள் ஏதோ ஆசைப்படுகிறார்கள்; படிக்க வைக்கிறார்கள். நான் காலேஜிலே படித்த போது, என்டமால ஜிஸ்ட் ஆகணும் என்று எண்ணியா படித்தேன்? நான் படித்த படிப்புக்கு வேறே ஏதாவது வேலை கிடைத்திருந்தாலும் சேர்ந்திருப்பேன். ஏதோ காலேஜ் படிப்பு படித்தேன். படித்து முடித்ததும் வேலை தேட வேண்டியிருந்தது. என்டமாலஜிஸ்ட் வேலை கிடைத்தது. அதுக்காக சில காலம் பயிற்சி பெற வேண்டியதாயிற்று என்று சொல்லிக்கொண்டு வந்தார்.

வாழ்க்கை இப்படித்தான் அமைந்து போகிறது. வந்து சேர்வதைக் கொண்டு வாழ்ந்து முன்னேறுவதில் கருத்தாகிவிடுகிறார்கள் பலரும் என்று நான் எண்ணிக்கொண்டேன்.

ஸ்ரீவைகுண்டம் விவசாய ஆபீசில் சுந்தரம் என்ற வாலிபர் மெசஞ்சராக வேலை பார்த்துக் கொண்டிருந்தார். முதல் சந்திப்பின் போது எங்கள் இருவருக்கும் ஆச்சர்ய உணர்வு தான் ஏற்பட்டது.

சுந்தரம் பாளையங்கோட்டை சேவியர்ஸ் ஹைஸ்கூலில் என் அண்ணன் கோமதிநாயகத்துடன் படித்தவர். ஐந்தாவது பாரம் வரை படித்தார். என்னை அவருக்கு நன்றாகத் தெரியும்.

ஐந்தாவது பாரம் படித்துக் கொண்டிருந்தபோது, சுந்தரத்தின் அப்பா திடீரென இறந்து விட்டார். வறுமையான குடும்பச் சூழல். சுந்தரத்தால் மேற் கொண்டு படிக்க முடிய வில்லை. அவருக்கு வேண்டியவர் ஒருவர் விவசாய இலாகாவில் செல்வாக்கு உடையவராக இருந்தார். அவர் முயற்சி செய்து சுந்தரத்துக்கு இந்த வேலை கிடைக்கும்படி செய்தார். இதை சுந்தரம் தெரிவித்தார்.

அவருக்கு அறிமுகமான சின்னப்பையன் இப்போது அவருக்கு மேலான பதவியில், ஒரே ஆபீசில் வேலை பார்க்க வந்துவிட்டது அவருக்கு சங்கடமான உணர்வை ஏற்படுத்தியது. ஆயினும் சமாளித்துக் கொண்டார். சகஜமாகப் பேசிப் பழகினார். இப்போது 'நீ போட்டுப் பேசமுடியாது. 'நீங்கள்' என்று மரியாதைப் பன்மை உபயோகிக்க வேண்டும். அது அவருக்கு முதலில் ஒருவித தயக்கத்தைத் தந்தது. பிறகு சரிப்படுத்திக் கொண்டார்.

நான் மெசஞ்சர், மேஸ்திரி, பெரியவர் சிறியவர் யாரையுமே 'நீங்க - வாங்க' என்ற தன்மையிலேயே விளித்துப் பேசியதால் எனக்கு சங்கட உணர்வு எதுவும் ஏற்படவில்லை.

இவ்விதம் 'நீங்கள்' போட்டுப் பேசியதில் ஒரு 'தர்மசங்கடமான நிகழ்வு' ஒருவருக்கு ஒருசமயம் ஏற்பட்டுவிட்டது. அது சுவாரசியமான விஷயம்.

முன்னால் ஒரு இடத்தில், என் அப்பாவுக்கு மருத்துவ சிகிச்சை செய்த செல்லம் பண்டிதர் பற்றி எழுதும் போது, அவரது உறவினரான சொர்ணம் பண்டிதர் பற்றியும் குறிப்பிட்டிருக்கிறேன். இருவரும் நாவித இனத்தவர். இவர்களை மற்ற எல்லோரும் - சின்னப் பையன்கள் கூட - நீ, வா-போ என்ற தன்மையில் தான் பேசி அழைப்பார்கள் என்றும் குறித்திருக்கிறேன்.

நான் ஸ்ரீவைகுண்டம் விவசாய ஆபீசில் வேலை பார்க்கிறேன் என்று சொர்ணம் பண்டிதர் கேள்விப்பட்டிருந்தார். ஏதோ வேலையாக ஸ்ரீவைகுண்டம் வந்த அவர், நினைவு கூர்ந்து, என்னைப் பார்ப்பதற்காக ஆபீசுக்கு வந்தார். ஐயா கும்பிடுறேன் என்று கைகூப்பி, தோளில் கிடந்த துண்டை இறக்கி கையில் வைத்துக் கொண்டார்.

நான் வாங்க, இப்படி பெஞ்சில் உட்காருங்க என்று உபசரித்தேன்.

அவர் துண்டை தரையில் போட்டு, அதன் மீது உட்கார்ந்தபடி, ஐயாவுக்கு என்னை தெரியுதா? நான் சொர்ணமில்லா என்றார்.

உங்களை எனக்குத் தெரியாதா என்ன! நான் ராஜ வல்லிபுரத்தில் இருந்த போது, நீங்க அநேக தடவை வீட்டுக்கு வந்திருக்கீங்களே என்றேன்.

என் பேச்சு அவருக்கு கஷ்டத்தைத் தந்தது. அவர் முகபாவனைகளிலும் நெளிந்து சிரமப்பட்டதிலும் அது எனக்குப் புரிந்தது.

நான் பண்டுவம் பார்க்கிற சொர்ணம். ஐயா இங்கே வேலையிலே இருக்கிறதை கேள்விப்பட்டேன். அதனாலே பார்த்திட்டுப் போகலாம்னு வந்தேன் என்று தயங்கித் தயங்கிப் பேசினார். தொடர்ந்து நான் மரியாதைப் பன்மையில் விளித்துப் பேசியது அவருக்கு சங்கட உணர்வையே ஏற்படுத்தியது.

அதனால் அவர் உடனடியாக, ஐயா வாறேன். உடம்பை கவனிச்சுக்கிடுங்க என்று சொல்லி, கும்பிடுபோட்டு விட்டு வெளியேறினார்.

காலகாலமாக, தாழ்த்தப்பட்ட இனம், நீ தாழ்ந்தவன் என்று சொல்லி ஒதுக்கிவைத்து, தாழ்த்தித் தாழ்த்தியே பேசி இதர சமூகத்தினர் பழக்கப்படுத்திவிட்டதால், அப்படி ஒடுக்கப்பட்ட இனத்தைச் சேர்ந்த மூத்த தலைமுறையினர் ரத்தத்திலேயே அந்த உணர்வு ஊறிப் போய்விட்டது. அவர்களும் தாழ்ந்து பணிவாக நடப்பதை இயல்பாகக் கொண்டிருந்தார்கள். அந்நிலையில், நீங்கள் - இருங்க என்ற தன்மையில் மரியாதை கொடுத்துப் பேசப்படுவதை அவர்களால் மனதாற அங்கீகரிக்க முடியாத நிலையே இருந்தது. சொர்ணம் பண்டிதருக்கும் தாழ்மை உணர்வு இருந்ததில் வியப்பில்லை.

ஸ்ரீவைகுண்டம் விவசாய ஆபீசுக்கும் விவசாயிகள் எவரும் தேடி வந்து விதைகள், உரங்கள் போன்றவற்றை வாங்கியதில்லை. டிமான்ஸ்ட்ரேட்டர், மேஸ்திரி, மெசஞ்சர் ஆகியோர் தான் கிராமங்களுக்குப் போய் விவசாயிகளை சந்தித்து, தங்கள் கடமையை செய்துகொண்டிருந் தார்கள்.

டிமான்ஸ்ட்ரேட்டர் அந்தோணிப் பிள்ளை ஒன்றிரண்டு நாள்கள் சில கிராமங்களுக்குப் போய் விட்டு, நாலைந்து நாள்கள் கிராமங்களில் தங்கி விவசாயிகளை சந்தித்ததாக டயரி எழுதி மேலதிகாரிக்கு அனுப்பி விடுவார். அதனால் சேர்ந்தாற் போல் அநேக நாள்கள் அவர் ஆபீசுக்கு வரமாட்டார். வருகிற நாள்களிலும், நாள் முழுவதும் ஆபீசில் தங்க மாட்டார். சிலமணி நேரம் இருந்து விட்டுப் போய் விடுவார்.

மேஸ்திரி முத்துசாமி பிள்ளை முடித்தானேந்தல் (முடி வைத்தான் ஏந்தல்)காரர். முதியவர். சர்வீஸ் அதிகமாகியிருந்தது. இன்னும் இரண்டு மூன்று வருடங்களில் பணிஓய்வு பெற (ரிட்டையர் ஆக) வேண்டிய நிலையில் இருந்தவர். சுறுசுறுப்பு இல்லாமல் இயங்கக்கூடியவர். அவர் பலநாள்கள் வெளியூர்களிலேயே முகாமிட்டிருப்பார்.

மெசஞ்சர் சுந்தரம் சிலமாதங்களிலேயே ஸ்ரீவைகுண்டம் ஆபீசை விட்டுப் போய்விட்டார். பூச்சி மருந்து விஞ்ஞானி சுப்பய்யரிடம் சொல்லி, அவருக்கு உதவியாளாகத் தன்னை மாற்றும்படி ஏற்பாடு செய்து கொண்டார். சுப்பய்யருக்கு சுந்தரத்தின் இயல்புகளும் வேலை செய்யும் திறமையும் பிடித்திருந்ததால், அவரே முயன்றுதன் கீழ் பணிபுரியும் மெசஞ்சராக ஆக்கிக் கொண்டார்.

சுந்தரம் இருந்த இடத்தில் சுடலை முத்துத் தேவர் என்று ஒரு சாதாரண நபரை அந்தோணிப் பிள்ளை மெசஞ்சராக நியமித்துக் கொண்டார். தேவருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. கையெழுத்துப் போடக் கூட அறியார்.

தேவரின் மனைவி அந்தோணிப் பிள்ளை வீட்டில் வேலைக் காரியாகப் பணிபுரிந்து கொண்டிருந்தாள். அவள் தன் கணவனுக்கு ஆபீசில் வேலை வாங்கிக் கொடுக்கும்படி டிமான்ஸ்ட்ரேட்டரை வேண்டிக் கொண்டாள். அவருடைய மனைவியையும் சிபாரிசு செய்யும்படி கோரி, காரியத்தை சாதித்துக் கொண்டாள்.

என் பெயரைக் கூட எழுதத் தெரியாதே என்று தேவர் தயங்கினார். அது ஒண்ணும் பெரிசில்லே வேய்; உம்ம பேர என்ன, ஒன்பது எழுத்து - சுடலை முத்து தேவர்; அதை லேசா எழுதிப் பழகிவிடலாம் என்று அந்தோணிப் பிள்ளை சொன்னார். கற்பலகை ஒன்றில் அந்தப் பெயரை எழுதிக் கொடுத்து, இதைப் பார்த்து சதா எழுதும். எழுதி எழுதிப் பழகும். தானா எழுத வந்திடும் என்று ஊக்கப்படுத்தினார்.

தேவரும் அப்படியே செய்தார். கற்பலகையில் எழுதித் தேர்ந்ததும், காகிதத்தில் பென்சில் கொண்டு எழுதிப் பழகும்படி செய்தார் அதிகாரி. அவ்வாறு எழுதி எழுதி, பெயரை மட்டும் எழுதக் கற்றுக் கொண்டார் சுடலை முத்து தேவர்.

அவர் அந்தோணிப் பிள்ளைக்கு மிக விசுவாசமாக நடந்து கொண்டார். அவருடைய வீட்டு வேலைகளையும் விரும்பிச் செய்தார். ஆபீசர் ஆபீசுக்கு வந்தால் அவரோடு தேவரும் கூட வருவார். அவர் போகிற போது தேவரும் உடன் சென்றுவிடுவார்.

ஆகவே ஆபீசில் எப்போதும் தனிமை குடி கொண்டிருந்தது. அது எனக்கு மிக வசதியாக இருந்தது. நான் எழுதுவதிலும் படிப்பதிலும் உற்சாகமாக ஈடுபட்டிருந்தேன்.

1940இல் என் கதை ஒன்று ஆனந்த விகடன் இதழில் வெளிவந்தது. 'புன்னகையும் புது நிலவும்' என்ற அந்தக் கதைக்காக பதினைந்து ரூபாய் சன்மானமும் எனக்கு வந்து சேர்ந்தது. என் எழுத்து மூலம் எனக்குக் கிடைத்த முதல் வருமானம் அது. என் மகிழ்ச்சியையும் உற்சாகத்தையும் அது அதிகப்படுத்தியது.

புதிய புதிய புத்தகங்கள் வாங்குவதற்கு ஸ்ரீவைகுண்டத்திலேயே வசதி இருந்தது. அவ்வூரில் கதர்கடை வைத்திருந்த திருவேங்கடம் என்பவர் 'தினமணி' விற்பனையாளராகவும் இருந்தார். மணிக்கொடி வெளியீடுகளும், நவயுகப் பிரசுராலயப் புத்தகங்களும் விற்பனைக்காக அவருக்கு வந்தன.

'புதுமைப்பித்தன் கதைகள்' என்கிற 29 கதைகள் கொண்ட பெரிய புத்தகம், புதமைப்பித்தனின் 'ஆறு கதைகள்' 'நாசகாரக்கும்பல்', 'பக்த குசேலா' (கரியுக மாடல்) ஆகிய சின்னச் சின்ன வெளியீடுகள்; புதுமைப் பித்தன் மொழிபெயர்த்த 'உலகத்துச் சிறுகதைகள்', சொ. விருத்தாசலம் என்ற பெயரில் அவர் எழுதிய 'பாசிஸ்ட் ஜடாமுனி' (இத்தாலிய சர்வாதிகாரி முசோலினியின் வரலாறு), சொ.வி.யும் ந. ராமரத்னமும் இணைந்து எழுதிய 'கப்சிப் தர்பார்' (ஹிட்லர் வரலாறு) ஆகியவை அப்போது வெளிவந்தன. மற்றும் ஆங்கில, இந்தி மொழி நாவல்களும் மொழிபெயர்ப்பு நூல்களாக வந்திருந்தன.

அவற்றை எல்லாம் நான் வாங்கிப் படித்தேன். ஆனந்த விகடன் ஏஜன்ட் மூலம், வ.வெ.சு. ஐயரின் சிறுகதைத் தொகுப்பான 'குளத்தங்கரை அரசமரம்' புத்தகம் வாங்கமுடிந்தது. அந்த வருடம் தான் தேசிகவி நாயகம் பிள்ளையின் கவிதைகள் 'மலரும் மாலையும்' என்ற தொகுப்பாகப் பிரசுரம் பெற்றன.

கவிமணி கவிதைகளை வெளியிட்ட பதிப்பகமே டி.கே. சிதம்பரநாத முதலியாரின் கட்டுரைகளை 'இதயஒலி' என்ற நூலாகப் பிரசுரித்தது. 'முக்கூடற் பள்ளு' நூலையும் வெளியிட்டது.

அந்தப் பதிப்பகத்துக்கே எழுதி நேரடியாக இம் மூன்று நூல் களையும் வரவழைத்தேன். பத்திரிகைகளும் தபாலில் வந்தன.

சக்திதாசன் சுப்பிரமணியன் 'நவசக்தி' இதழை வாரம்தோறும் எனக்கு அனுப்பிவைத்தார். 'பாரத சக்தி' பத்திரிகையும் வந்தது. 'லோக சக்தி' நிறுத்தப்பட்டு விட்டது.

ஒருநாள் அந்தோணிப் பிள்ளை ஆபீசில் இருந்தபோது தபால் வந்தது. அன்று தபாலில் பத்திரிகைகளும் கடிதங்களும் எனக்கு வந்திருந்தன. உங்களுக்கே நிறையத் தபால்கள் வருதே என்று அவர் ஆச்சர்யப்பட்டார். ஏன் பத்திரிகைகள் எல்லாம் வருது என்று கேட்டார்.

நான் கதை, கட்டுரை எழுதுவது பற்றிச் சொன்னேன். 'பாரத சக்தி'யில் ஒரு கதையும் கட்டுரையும் வந்திருப்பதைக் காட்டினேன்.

அந்த இதழின் ஐந்து பிரதிகள் எனக்கு வந்திருந்தன. ஒரு பிரதி கொடுங்க; படித்துப் பார்க்கிறேன் என்று அவர் கேட்டு வாங்கிக் கொண்டார்.

இரண்டு நாள்களுக்குப் பிறகு அந்தோணிப் பிள்ளை பேச்சோடு பேச்சாகச் சொன்னார்; பத்திரிகைகளிலே எழுதுறது தப்பில்லே. ஆனால் கவர்ண்மென்ட் செர்வன்ட்ஸ் ஆக இருக்கிறவங்க இப்படி எல்லாம் எழுதக் கூடாது. அப்படி எழுதணும்னு சொன்னால், மேலதிகாரிகிட்டே காட்டி பர்மிஷன் வாங்கணும். நீங்க பத்திரிகை களுக்கு எழுதுகிற போது, எழுதுறதை என் மூலமா மேலாபீசுக்கு - அசிஸ்டன்ட் டைரக்டர் ஆஃப் அக்ரிகல்சர் ஆபீசுக்கு - அனுப்பி பர்மிஷன் வாங்கியாகணும். இப்படி ஒவ்வொரு தடவையும் செய்யணும். கவர்ண்மென்ட் சர்வன்ட்ஸ் காண்டக்ட் ரூல்சிலேயே இந்த விதி இருக்கு என்றார்.

நான் ஒன்றும் சொல்லவில்லை. காலம் அதுபாட்டுக்குப் போய்க் கொண்டிருந்தது. நான் எப்போதும் போல் பத்திரிகைகளுக்கு எழுதிக்கொண்டேயிருந்தேன்.

நண்பர் சக்திதாசன் சுப்பிரமணியன் எனக்கு ஊக்கமும் உற்சாகமும் அளிக்கும் விதத்தில் 'நவசக்தி'யில் ஒருவாரம் என்னைப் பற்றி எழுதியிருந்தார். எனது எழுத்தாற்றல், உழைப்பு பற்றி எல்லாம் சொல்லி விட்டு, இவர் இப்போது ஸ்ரீவைகுண்டத்தில் அரசாங்க அலுவலகம் ஒன்றில் குமாஸ்தாவாகப் பணிபுரிகிறார். அது ஒரு வட்டத் துளையில் ஒரு சதுர முளையை (எ ஸ்குவேர் ப்ளக் இன் எ ரவுண்ட் ஹோல்) வைத்திருப்பது போல, பொருத்தமற்றது ஆகும். இவர் சேர்ந்து பணிபுரிய வேண்டிய இடம் ஒரு பத்திரிகை அலுவலகம் தான் என்றும் குறிப்பிட்டிருந்தார்.

அந்த வாரம் ஸ்ரீவைகுண்டம் 'கோட்டை' ராமு பிள்ளை என்பவர் என்னை தேடிவந்தார். அவர் அடிக்கடி சென்னை சென்று வருவது

வழக்கமாம். அண்ணாமலையில் அவர் சென்னைக்குப் போன போது, திருவி.க. அவர்களை பார்ப்பதற்காக நவசக்தி அலுவலகம் சென்றாராம். அங்கே சக்திதாசன் சுப்பிரமணியன் என்னைப் பற்றி விசாரித்தாராம். ரொம்ப உயர்வாகச் சொன்னாராம். இப்போது நவசக்தியில் அவர் எழுதியிருப்பதையும் படித்தாராம். அதனால், உள்ளூரிலேயே இருக்கிறவரை நாம பார்க்காமல் இருப்பது சரியில்லை என்று எண்ணித் தேடி வந்ததாகச் சொன்னார். சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார். போனார்.

போகிற போது அவர் பக்கத்து வீட்டு வக்கீல் சுப்பையா முதலியாரையும் கண்டு பேசிச் சென்றார்.

ராமு பிள்ளை போன சற்று நேரத்தில், சுப்பையா முதலியார் எட்டிப்பார்த்தார். ஆபீசை ஒட்டி இருந்த அடுத்த வீட்டில் தான் அவர் வசித்தார். நான் தினசரி அவரை பார்ப்பது உண்டு. நானாக என்னை அறிமுகம் செய்து கொண்டதில்லை. அவரும் என்னைப் பற்றி அக்கறை கொண்டதுமில்லை.

இப்ப கோட்டை ராமு பிள்ளை வந்தவர் உங்களைப் பற்றி நிறையச் சொன்னார். சென்னை நவசக்தி ஆபீசிலே உங்களை பெருமையாகப் பேசிக்கொண்டதாகச் சொன்னார். நாம இங்கே பக்கத்திலே பக்கத்திலே இருக்கிறோம். இத்தனை காலமாக பேசிப்பழக முயற்சிக்கவே இல்லையே என்று வக்கீல் முதலியார் வருத்தப்பட்டார்.

இங்கே ஆபீசரா இருக்கிறவரு ஒரு மாதிரி. அதுனாலே தான் நான் உங்ககிட்டே விசாரிக்கலே. நீங்க கதை கட்டுரையெல்லாம் எழுதுறீங்க, நவசக்தியிலே உங்களைப் பற்றி சிறப்பா செய்தி வந்திருக்குன்னு கோட்டை ராமுபிள்ளை சொன்னாரு. ராத்திரி நம்ம வீட்டுக்கு வாங்க; பேசிக்கிட்டிருக்கலாம் என்றும் அவர் சொன்னார்.

அன்று இரவு வக்கீல் சுப்பையா முதலியாரை நான் அவர் வீட்டில் சந்தித்தேன். அவர் சதா எழுதிக்கொண்டேயிருப்பார். வழக்குகள் சம்பந்தமாக இருக்கும் என்று நான் எண்ணினேன். அப்படி இல்லை என்று தெரியவந்தது.

பொதுவான பல விஷயங்கள் பற்றியும் எழுதுவதில் எனக்கு ஆர்வம் உண்டு. நிறைய எழுதிவைத்திருக்கிறேன். ஆனால் எங்கேயும் அனுப்பியது கிடையாது என்று அவர் சொன்னார். அப்படியிருந்த பல கட்டுகளையும் காட்டினார்.

சமீபத்திலே தான் சீனா பற்றி ஒன்று எழுதிமுடித்தேன். ஒரு புத்தகமாக வரக்கூடிய அளவுக்கு எழுதியிருக்கிறேன். அதை படித்துப் பாருங்க என்று கூறி, எழுத்துப்பிரதியை என்னிடம் தந்தார்.

இங்கே டிமான்ஸ்ட்ரேட்டரா இருக்கிறவரு நல்ல ஆளு இல்லே. நாம பேசிப் பழகுகிறோம்னு தெரிஞ்சாலே சந்தேகப் படுவாரு. ஏதாவது தொல்லை கொடுப்பாரு. ஆபீஸ் நேரத்திலே நாம பேசிக்கொள்ள வேண்டாம். ராத்திரி இங்கே வசதியாப் பேசிமகிழலாம் என்றும் வக்கீல் முதலியார் தெரிவித்தார்.

அப்படியே செய்யலாம் என்று நானும் இசைவு தெரிவித்தேன்.

'கோட்டை ராமு பிள்ளையை உங்களுக்கு எப்படித் தெரியும்?' என்று கேட்டார் அவர்.

அவரை எனக்குத் தெரியாது; அவராகத் தான் என்னை தேடி வந்தார் என்று நான் விவரம் கூறினேன்.

இங்கு ஸ்ரீவைகுண்டம் கோட்டை பற்றியும் கோட்டைப் பிள்ளைமார் பற்றியும் குறிப்பிட வேண்டியது அவசியமாகிறது.

ஸ்ரீவைகுண்டம் ஊரின் ஒரு புறத்தில், ஆற்றுக்குப் போகிற வழியில், பெரும் பரப்பளவை அடைத்தபடி எழுந்து நின்றது ஒரு கோட்டை. புராதன முறையில், மண்ணால் பெரிதாகக் கட்டப்பட்டிருந்தது அது. அதன் சுவர்கள் அடிப்புறம் அகலமாக அமைந்து உயரம் போகப் போகச் சிறுத்துக் காணப்படும். கோட்டைச் சுவர்கள் புராதனகால தொழில் நுட்பங்களைக் கையாண்டு மிக வலு உள்ளதாகவே கட்டப் பட்டிருந்தது.

அதனுள் ஒரு இனத்துப் பிள்ளைமார் தனித்து ஒதுங்கி வாழ்ந் தார்கள். அவர்கள் கோட்டைப் பிள்ளைமார் என்று குறிப்பிடப் பட்டார்கள். அவர்களில் ஆண்கள் சகலவிதமான சுதந்திரமும் பெற்றிருந்தார்கள். பெண்கள் அடக்கி ஒடுக்கப்பட்டு அடிமை வாழ்வு வாழ்ந்தார்கள் என்று தான் சொல்ல வேண்டும்.

சில நூறு வருடங்களுக்கு முன்பு, வடக்கேயிருந்து புலம் பெயர்ந்து வந்த இனத்தினர் அவர்கள் என்று சொல்லப்பட்டது. முஸ்லிம்கள் தமிழ் நாட்டில் படையெடுத்து வந்த போது, பலரும் பலவிதமாக பாதிக்கப் பட்டார்கள். முக்கியமாக பெண்கள் சிறைப் பிடிக்கப்பட்டார்கள். எந்த இனத்துப் பெண்ணாக இருந்தாலும் அவர்களைப் பிடித்துச் சென்று

பலவந்தமாக அனுபவிக்க ஆசைப்பட்டார்கள் வெறியர்கள். ஆனால் திருமணமான பெண்களை அவர்கள் ஒதுக்கினார்கள்.

இளம் பெண்களை மணம் புரிந்து கொள்ள ஆக்கிரமிப்பாளர்கள் ஆசைப்பட்டார்கள். அப்படி அவர்கள் விரும்பிக் கேட்ட பெண்களை பெற்றோர்களே இரக்கமின்றி எவ்விதத்திலாவது கொன்றுவிட்டு, இரவோடு இரவாக உற்றமும் சுற்றமுமாக அனைவரும் ஊரைவிட்டு வெளியேறி தெற்குப் பிரதேசங்களில் குடியேற முனைந்தார்கள்.

தெற்குப் பகுதியில் குடியேறியதாகக் கூறப்படுகிற ஒவ்வொரு இனத்தாரும் இது போன்ற வாய்மொழி வரலாற்றைக் கூறுவது தமிழ்நாட்டில் சகஜமாக உள்ளது. அதே போல் தான் கோட்டைப் பிள்ளைமார் வரலாறும் பேசுகிறது.

அப்படித் தப்பி வந்த ஒரு இனத்தார் பாதுகாப்பாக வாழ்வதற்காகக் கோட்டை கட்டிக் கொண்டார்கள். பெண்களை கோட்டைக்குள் காவல்கட்டுப்பாட்டுடன் இருக்கும்படி செய்தார்கள். பெண்கள், சிறுமிகள் கூட, வெளியே வரக்கூடாது. கோட்டைக்குள்ளேயே பிறந்து, அங்கேயே வளர்ந்து, அங்கேயே கல்யாணம் கட்டிக் கொண்டு வாழ்க்கை நடத்தி செத்தும் போவார்கள்.

ஆண்கள் தாராளமாகத் திரியலாம். வெளியூர்கள் போய்வரலாம். படித்துத் தேறி வேலைகளில் அமரலாம். கோட்டைப் பிள்ளைமார் களில் ஆண்களில் கல்லூரிப் படிப்பு படித்தவர்கள், வக்கீல்கள், டாக்டர்கள் இருந்தார்கள். கோயம்புத்தூர், திருச்சி, சென்னை என்று போய் வந்தார்கள். ஆனால் பரந்த நோக்கும் விசால மனமும் பெறாதவர் களாக, தங்கள் இனப் பெண்களை அடக்கி வைத்திருந்தார்கள்.

பெண்களில் சிலர் எழுதப் படிக்கக் கற்றிருக்கக்கூடும். அதற்கு கோட்டைக்குள் வெளிஉலகப் பெண்கள் ஆசிரியைகளாகப் போய் வந்திருக்கக் கூடும். ஆயினும் கோட்டைப் பெண்கள் அதிகம் கல்வி கற்றதில்லை.

பரிதாபத்துக்கு உரியவர்கள் அவர்கள். வெளி உலகத்தை, அதன் இனிமைகளை, அழகுகளை, மாறுபட்ட தோற்றங்களை அவர்கள் கண்டதில்லை. கோயில், குளம், தேர், திருவிழா, திருமணம் போன்ற வெளிஉலக விசேஷங்கள் எதையும் அப்பெண்கள் அறிந்ததில்லை. கார், பஸ், ரயில் வண்டித் தொடர் போன்ற வேக ஊர்திகளை அவர்கள் கண்டதில்லை. ஓடும் தண்ணீர், பக்கத்தில் நகர்ந்து சென்ற ஆறு, அதன்

அணைக்கட்டு, அதிலிருந்து பிரிந்து செல்லும் கால்வாய்கள் - ஊகூங், அவ்வாறெல்லாம் வெளிஉலகில் அதிசயங்கள் இருந்தன என்பதே அவர்களுக்குத் தெரியாது.

அவர்கள் கும்பிடுவதற்கு கோட்டைக்குள்ளேயே சிறுகோயில் இருந்தது. அவசர அவசியத்துக்கு ஏதேனும் பொருள்கள் வாங்க வேண்டும் என்றால், அதற்காக ஒன்றிரண்டு சிறுகடைகள் உள்ளேயே இருந்தன.

இவ்விதம் அந்தக் காலத்தில் (1940இல்) அறுபது குடும்பங்கள் கோட்டைக்குள்ளிருந்த வீடுகளில் வசித்தார்கள். ஆண்கள் கண்டிப்பாக நடந்துகொண்டார்கள்.

கோட்டைக்கு மூன்று வாசல்கள் இருந்தன. கிழக்குவாசல், தெற்கு வாசல், வடக்கு வாசல் என்று. அவற்றில் வடக்கு வாசல் எப்பவும் அடைபட்டே கிடந்தது. திறக்க முடியாதபடி அதை அடைத்து விட்டார்கள். அதற்குக் காரணமாக ஒரு கதை நிலவியது ஊரில்.

வடக்குப் புறம் தோப்பும் வயல்களும் இருந்தன. ஒருசமயம், கோட்டைக்குள் வசித்த குமரி ஒருத்தி வெளி உலகத்து வாலிபன் ஒருவனை நேசித்து, அவனோடு உறவாடிக் கொண்டிருந்தாள். வடக்கு வாசல் வழியாக அவள் தோப்புக்கு வருவாள். அங்கே அவளுக்காகக் காத்திருப்பான் அவள் காதலன். இருவரும் சந்தோஷமாக நாள்களைக் கழித்தார்கள்; ரகசியமாக.

இந்த விஷயம் பெரியவர்களுக்குத் தெரிந்துவிட்டது. அவர்களில் சிலர் திட்டம் தீட்டி, பதுங்கி இருந்து, ஒருநாள் இரண்டு பேரையும் 'கையும் மெய்யுமாக'ப் பிடித்துவிட்டார்கள். உடனேயே அந்த இடத்திலேயே அவர்களைத் தீர்த்துக் கட்டினார்கள். வெட்டிச் சாகடித்த இரண்டு உடல்களையும் வடக்குவாசலில் ஆழக் குழி தோண்டிப் புதைத்தார்கள். அன்றிலிருந்து அந்த வாசலையும் அடைத்து, மண்பூசி மறைத்துவிட்டார்கள்.

பிரிட்டிஷ் அரசு, அந்தக் கோட்டைப் பராமரிப்புக்காக, ஆண்டுக்கு இத்தனை ரூபாய் என்று ஒரு சிறு தொகை அளித்து வந்தது. வளங்கள் பெருகி எல்லாம் மலிவாகக் கிடைத்த காலத்தில், அந்தத் தொகை பராமரிப்புக்குப் போதுமானதாக இருந்தது. கால ஓட்டத்தில் அது பற்றவில்லை. அதனால் கோட்டைப் பராபரிப்பும் 'ஏனோதானோ' என்று அசிரத்தை நிலையை அடைந்தது.

அதற்குள் கோட்டைக்குள் வசித்த குடும்பத் தலைவர்கள் சிலருக்குள்ளேயே பங்காளிக் காய்ச்சலும் பகைமை உணர்வும் ஏற்படலாயிற்று. செல்வாக்குப் பெற்று வளர்ந்து வந்த ஒரு தலைவர் பட்டப்பகலிலேயே கொலை செய்யப்பட்டார். 1950களின் பிற்பகுதியில்.

அதனால் அவர்களில் ஒரு பகுதியினர் குடும்பத்தோடு கோட்டையை விட்டு வெளியேறினார்கள். பாளையங்கோட்டை, தூத்துக்குடி என்று பல ஊர்களில் குடியேறி, அங்கங்கே ஏதாவது வேலை தேடிக்கொண்டு தங்கிவிட்டார்கள்.

பிறகுபிறகு மற்றக் குடும்பத்தினரும் வெளியேறி எங்கெங்கோ போய்ச் சேர்ந்தார்கள். 1970களில் கோட்டைக்குள் யாரும் வசிக்கவில்லை என்ற நிலைமை ஏற்பட்டது. கோட்டைச் சுவர்களும் சரியான பராமரிப்பு இல்லாததால் சீர்குலைந்தன. மழையில் கரைந்தும், வெயிலில் காய்ந்து மண் உதிர்ந்தும் காணப்பட்டது. பிறகு என்ன ஆயிற்றோ தெரியாது.

கோட்டைப் பிள்ளைமார் செயலாக இருந்த காலத்தில், 1940களின் ஆரம்பத்தில், கோட்டையை சேர்ந்த பெரியபிள்ளை ஒருவர் வில் வண்டியில், சினிமா நடிகை எஸ். டி. சுப்புலட்சுமியின் வீட்டுக்கு தினம் வந்து போய்க் கொண்டிருந்தார். நடிகையின் அம்மாவுக்கும் அவருக்கும் நெருக்கமான உறவு என்று பேச்சு ஊரில் நடமாடியது. அவர் காலை ஒன்பது பத்து மணிக்கு வந்தால், மாலையில் அல்லது முன்னிரவில் தான் திரும்பிப் போவார்.

சினிமா உலகில் புகழுடன் பிரகாசித்த நடிகை எஸ்.டி. சுப்பு லட்சுமியின் ஊர் ஸ்ரீவைகுண்டம் தான். விவசாய ஆபீஸ் இருந்த தெருவில், எதிர் வரிசையில் கொஞ்சம் தள்ளியிருந்தது நடிகையின் வீடு. பழைய வீட்டை இடித்துவிட்டு, பெரிதாக நவீன பாணியில் ஒரு வீடு கட்டப்பட்டு வந்தது.

கோட்டைப் பிள்ளையின் மேற்பார்வையில் தான் அது வளர்ந்தது. அவரது கண்காணிப்போடு தான் 'புதுமனை புகுவிழா', நான் ஸ்ரீவைகுண்டத்தில் இருந்த வருடம், வெகுசிறப்பாக ஆடம்பரமாக நடைபெற்றது.

சுப்புலட்சுமி ஒரு சிறு கார் வைத்திருந்தார். கோட்டைக்குள் வசித்த பெண்கள் கார் பார்த்ததில்லை என்பதற்காக, அவர் அந்தக் காரை கோட்டையினுள்ளேயே கொண்டு சென்று காட்சிப்படுத்தினார். அது முக்கிய செய்தியாக பேசப்பட்டது அப்போது.

ஒருசமயம், பக்கத்து வீட்டு வக்கீல் சுப்பையாமுதலியார் சொன்னார். அவர் சகல விஷயங்கள் பற்றியும் தாராளமாகக் கருத்துக்கள் வழங்குவது உண்டு. 'கோட்டைப்பிள்ளைமார் வீட்டுப் பெண்கள் அழகாக இருக்க மாட்டார்கள். வெளியே வந்து போகிற ஆண்களின் லெட்சணத்தைப் பார்த்தாலே, தெரியலையா! பெண்களும் லெட்சணமாக இருக்க மாட்டார்கள் என்று. ஆண்களில் எவராவது அழகன் என்று சொல்லக் கூடிய தன்மையிலே இருக்கிறாங்களா? இல்லையே. இவங்களைப் போலத் தானே பொம்பிளைகளும் இருப்பாங்க! இவங்களை விட மோசமாகத் தான் இருப்பாங்க. படிப்பு கிடையாது. வெளிஉலகத் தொடர்பு கிடையாது. பரந்த பார்வை இராது. குறுகிய மனமும் இருண்டபுத்தியுமா, இருக்கிற பெண்கள் எப்படி அழகாக இருக்க முடியும்?' என்று சொன்னார்.

அது மாதிரிப் பெண்களை, அழகு தேவதைகளைப் பூட்டி வைத்துப் பாதுகாப்பது மாதிரி, இருளடைஞ்ச பொந்துகளுக்குள்ளே அடைத்து வைத்து மேலும் அழகற்றவங்களாக ஆக்குவது தேவையில்லாதது. முன்காலத்திலே இருந்தாங்க, போகட்டும்! இந்தத் தலைமுறையிலாவது வாழ்க்கை முறையை மாற்றி இருக்கலாமில்லையா? என்றும் வக்கீல் முதலியார் அபிப்பிராயம் கூறினார்.

ஒரு மாறுதல் வருவதற்கு, கோட்டையில் ஒரு கொலை நடக்க வேண்டியிருந்தது! காலத்தின் லீலை அது.

நான் ஸ்ரீவைகுண்டத்தில் தங்கியிருந்த காலத்தில், வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஒரு பரபரப்பு நிகழ்வும் நடந்தது. அத்தகைய பரபரப்பை உண்டாக்கியவன் காசித்தேவன் என்ற கொள்ளைக்காரன்.

குறுகிய காலத்தில் அந்த வட்டாரத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தி, காவல் துறையினரை அலைக்கழித்து, ஒரு ஹீரோ (வீரநாயகன்) அந்தஸ்தைப் பெற்றிருந்தான் காசித்தேவன். சுற்று வட்டாரத்தில் பல கொள்ளைகளை வெற்றிகரமாக நடத்திப் பெரும் பெயர் சம்பாதித்து விட்டான் அவன்.

போலீசுக்கு 'டிமிக்கி கொடுத்து', அங்கே இருக்கிறான் காசித்தேவன், இந்த ஊரிலே தென்பட்டான் என்றெல்லாம் பேச்சுக்குப் பொருளாகி வந்த அந்தக் கொள்ளைக்காரன் மக்களின் அன்பையும் ஆதரவையும் எளிதில் சம்பாதித்திருந்தான்.

வசதி மிகுந்தவர்களிடம் கொள்ளையடித்தான் காசித்தேவன்.

பொருள் இல்லாத ஏழை எளியவர்களுக்கு தாராளமாக வழங்கினான். அதனால் அவனை சாதாரண மக்கள் போற்றிப் புகழ்ந்தார்கள். காசித்தேவனின் வீரச் செயல்களை பாராட்டி மகிழ்ந்தார்கள்.

காசி பத்தாம் வகுப்பு வரை படித்தவன். படிக்கிற காலத்திலேயே அவனுக்கு வீரச் செயல்கள் புரிந்த சாகசக்காரர்களின் வரலாறுகள் வெகுவாகப் பிடித்திருந்தன. முக்கியமாக, இங்கிலாந்து தேசத்தில் ஒரு வீரநாயகனாக ஒருகாலத்தில் விளங்கிய ராபின் ஹூட் கதை அவனை மிக வசீகரித்தது.

ராபின் ஹூட் கொள்ளைக்காரன் என்று பெயர் பெற்றிருந்தான். அதே சமயம் அவன் ஏழை பங்காளனாக, எளியோருக்கு உதவுகிறவனாகவும் விளங்கினான். செல்வம் மிகுதியாகப் பெற்றிருந்த மேட்டுக்குடியினரிடம் கொள்ளையடித்தான். நாட்டில் வறுமையால் கஷ்டப்பட்ட ஏழைமக்களுக்கு மனமுவந்து கொடுத்தான்.

அதே போல் தானும் வாழ வேண்டும் என்று ஆசைப்பட்டான் காசி. தமிழ் நாட்டில் ஒரு காலத்தில் பெரும் கொள்ளைக் காரனாகத் திரிந்த ஜம்புலிங்கத்தின் கதை நாட்டுமக்களால் பெரிதும் பேசப்பட்டு வந்தது. அவனும் இருக்கிறவர்களிடம் பணம் நகைகள் முதலியவற்றை கொள்ளையிட்டான். இல்லாதவர்களுக்கு அதிகம் உதவினான். அதனால் சாதாரண ஜனங்கள் அவனை நேசித்தார்கள். ஆதரித்தார்கள். போலீசார் கைகளில் பிடிபடாமல் அவன் மறைந்து வாழமுடிந்தது நீண்டகாலம்.

ஜம்புலிங்க நாடாரும் காசித் தேவனின் லட்சிய முன்னோடியாக அமைந்திருந்தார். காசி ஒழுங்காக, நல்ல முறையில், வாழ முடியாது என்று அறிந்தான். ஆகவே திருட்டுத் தொழிலில் ஈடுபட்டான். ஆசாரி ஒருவன் வலிமையான துப்பாக்கி ஒன்று செய்து கொடுத்தார் அவனுக்கு. அந்த நாட்டுத்துப்பாக்கி எப்போதும் அவன் கையிலிருந்தது.

காசி பற்றிய உண்மைகளும் கற்பனைகளும் விரைவில் எங்கும் பரவின. அவனைப் பற்றி பயமும் பீதியும் நெடுக ஏற்பட்டன. அவனோடு, அவன் நம்பிக்கைக்குப் பாத்திரமான சகா ஒருவனும் சேர்ந்தான். இருவரும் அங்கே கொள்ளையடித்தனர், இந்த ஊரில் இன்னார் வீட்டில் திருடினார்கள் என்ற தன்மையில் பேச்சுகள் தினந்தோறும் அடிபட்டன.

மாதக் கணக்கில் போலீசார் முயன்றனர். வலை வீசினர். அகப் படாமல் திரிந்த இரண்டு பேரும் ஒருநாள் பிடிபட்டார்கள். காசித் தேவனையும் அவன் கூட்டாளியையும் கைவிலங்கு மாட்டி போலீசார் வீதிகள் வழியே இட்டுச் சென்றனர். அவர்களைப் பார்ப்பதற்கு பெரும் கூட்டம் கூடியது.

விவசாய ஆபீஸ் இருந்த வீதி வழியே அவர்களைக் காவலர்கள் நடத்திச் சென்றபோது நான் காசித்தேவனை நன்றாகப் பார்க்க முடிந்தது. ஏமாற்றம் தரும் உருவத்தினன் ஆகவே இருந்தான்.

எங்கும் பரவியிருந்த வீரப்பிரதாபச் செய்திகளுக்குச் சிறிதும் பொருத்தமில்லாத சாதாரண நபராகவே காசித்தேவன் காட்சி தந்தான். உயரமான, மெலிந்த உடல். எடுப்பான மீசையோ மிடுக்கான உடலமைப்போ பெற்றிருக்கவில்லை. பெயர் பெற்ற நாட்டுத் துப்பாக்கி அப்போதும் அவன் கையில் இருந்தது. அவனுடைய கூட்டாளியும் விசேஷத் தோற்றம் எதுவும் பெற்றிருக்கவில்லை.

பிடிபட்ட இருவர்கள் பேரிலும் குற்றங்கள் பதிவு செய்யப்பட்டு வழக்கு விசாரணை நடந்தது. ஜனங்கள் காசித்தேவனை சீக்கிரமே மறந்துவிட்டார்கள்.

காலம் அதன் இயல்புப்படி போய்க்கொண்டிருந்தது. தங்கும் இடம் அவ்வப்போது ஒரு பிரச்சினையாகத் தலைதூக்கி தொந்தரவு கொடுத்தது எனக்கு.

நான் ஸ்ரீவைகுண்டம் வந்த நாளிலிருந்து ஆபீசில் தான் தங்கி வந்தேன். சவுகரியமாகத் தான் இருந்தது. சில மாதங்கள் ஆனதும் மேஸ்திரி முத்துசாமி பிள்ளை என்னிடம் சொன்னார். ஆபீசிலேயே தங்குவது சரியில்லை; வேறே ஒரு ரூம் பார்த்துத் தங்குவது தான் நல்லது. ஆபீசர் ஐயா இப்ப ஒண்ணும் சொல்லலே. திடீர்னு அவரு அதை குற்றமாகச் சொல்வாரு என்றார்.

அவரே ஒரு அறை தேடித் தந்தார். அதே வீதியில், பெருமாள் கோயிலுக்கு வடக்கே சிறிது தள்ளி, மடம் மாதிரி ஒரு கட்டிடம் இருந்தது. அதில் ஒரு அறை தனிநபர் தங்குவதற்கு வசதியாக அமைந்திருந்தது. அதை வாடகைக்கு விட்டு வந்தார்கள். அந்த அறை இந்தச் சமயத்தில் காலியாக இருந்தது. அதை எனக்காக மேஸ்திரி பேசி முடித்தார். மாதம் மூன்று ரூபாய் வாடகை.

தங்குவதற்கும், நினைத்த போது வந்து போவதற்கும் சவுகரியமாகத் தான் இருந்தது அந்த இடம்.

மூன்று மாதங்கள் போயிருக்கும். கொம்பங்குளம் பிள்ளை ஓட்டல் அருகே ஒருநாள் சேரகுளம் ஊர்காரர் ஒருவர் என்னைப் பார்த்தார். என் அம்மாவுக்கு உறவுக்காரர். எனக்கு 'மாமா' உறவினர்.

அவர் பிரியமாக என்னைப் பற்றி விசாரித்தார். எங்கே தங்கி யிருக்கிறே என்று கேட்டார். சொன்னேன்.

ஏன் வாடகை கொடுத்து ஒரு இடத்திலே தங்கணும்? இதோ இந்தா பக்கத்திலே இருக்கிற ரூம் என்னுதுதான். சும்மா அடைத்தே தான் கிடக்கு. நீ அதிலே தங்கிக்கொள். வாடகை எதுவும் தரவேண்டாம். ரூமை திறந்து வச்சு, ராத்திரி விளக்கேத்தி வைக்காம எப்பவும் அடைச்சே கிடப்பது நல்லாயில்லை. நீ புழங்கிக்கொள் என்று அன்புடன் கூறினார் அவர். அந்தச் சிறு கட்டிடத்தின் சாவியையும் தந்தார்.

கொம்பங்குளத்துப் பிள்ளை ஓட்டல் இருந்த வரிசையிலேயே நான்கு வீடுகள் தள்ளி இருந்தது அந்தச் சிறு கட்டிடம். ஒரே அறை தான். நான் மறுநாளே அந்த இடத்துக்குக் குடிபெயர்ந்தேன். ஒரு பெட்டியும் படுக்கையும் தான் எனது சாமான்கள். அவற்றை எளிதில் எங்கும் எடுத்துப் போய் விடலாம்.

மூன்று மாதங்கள் சென்றன. ஒருநாள் அந்த மாமா, அன்பு வறண்ட குரலில் பேசினார். எனக்கு இந்த இடம் தேவைப்படுது. நீ தங்குறதுக்கு வேறே இடம் பார்த்துக் கொள்வது நல்லது என்றார்.

அவராகத் தான் முன் வந்து உதவினார். இப்போது அவராகவே அவருடைய உதவியை 'வாபஸ் பெறுகிறார்.' ஏதாவது காரணம் இருக்கும். நான் அதை அறிந்து கொள்ள விரும்பவில்லை. மனித மனம் ஒரே நிலையில் இருக்காது; மாறிக் கொண்டே இருப்பது அதன் இயல்பு என்று எண்ணினேன்.

மீண்டும் மேஸ்திரி முத்து சாமி பிள்ளை உதவினார். ஒரு சின்னத் தெருவில் இருந்த பெரிய வீடு ஒன்றின் முன் பக்கத்து அறை - தெரு ஓரத்து அறை - வாடகைக்குக் கிடைக்கும். போக வரத் தனி வழி, தெருப்பக்கமே இருக்கு. வீட்டுக்காரங்க, அவங்க பக்கத்துக் கதவைச் சாத்தி பூட்டிக்கொள்வாங்க. ரூமிலே தங்குறவங்க இந்தப் பக்கம் உள்தாழ்ப்பாள் போட்டுக் கொள்ளலாம். வீட்டுக்காரங்களுக்கும்

அறையிலே தங்குறவங்களுக்கும் எந்த விதமான தொடர்பும் இராது என்று அவர் விவரித்தார்.

அந்த இடத்தை கொண்டு போய் காட்டினார். இசைவு தெரிவித்தேன். மாதம் மூன்று ரூபாய் வாடகை என்று பேசி முடித்து, அறைக்கான திறவுகோல் என்னிடம் தரப்பட்டது.

அங்கு வசிக்கலானேன். வசதியானது என்று சொல்லலாம். ஆனால் தெருப்பக்கத்துக் கதவை சாத்திவிட்டால், காற்றேவராது. பகலில் அறையில் இருக்கும் போது கதவை நன்கு திறந்து வைக்கலாம். இரவில் தூங்கும் பொழுது, அடைத்து வைக்கத் தானே வேண்டும்? சிரமமாகத் தான் இருந்தது.

இரண்டு மாதங்களில் அந்த நிலைமையிலிருந்து ஒரு விடுதலை கிடைத்தது.

என் அம்மா ஸ்ரீவைகுண்டம் வந்து, வீடு அமர்த்தித் தங்க விரும்பினாள். நீ ஏன் தனியாக இருந்து, ஓட்டலில் சாப்பிட்டு கஷ்டப்படணும்? ஒரு வீடு பார்த்தால், நானும் தம்பியும் அங்கே வந்துவிடுவோம். வீட்டுச் சமையல் சாப்பாடு சவுகரியமாக இருக்கும் என்றாள்.

அதன்படியே வீடு பார்த்தேன். நான் தங்கிய அறையின் வீட்டுச் சொந்தக்காரருக்கு, அந்தப் பெரிய வீட்டை ஒட்டி, மேல்புறம் ஒரு சின்னக் குச்சுவீடு இருந்தது. அதில் வசித்தவர்கள் காலி செய்துவிட்டுப் போனதால், அது காலியாகக் கிடந்தது. ஐந்து ரூபாய் தான் வாடகை. அந்த வீட்டைப் பேசி முடித்து, சாவி வாங்கிக் கொண்டேன்.

ஒரு 'நல்ல நாள்' பார்த்து ஊரிலிருந்து தம்பி ஒரு வண்டியில் சாமான்களைக் கொண்டு வந்து சேர்த்தான். பிறகு ஒருநாள் அம்மா வந்தாள். எனது ஓட்டல் சாப்பாட்டுக்கு முற்றுப் புள்ளி வைக்கப்பட்டது.

வீட்டு வாழ்க்கை இனிமையாகத் தான் இருந்தது.

சில மாதங்களில் ஏதோ ஒரு காரணத்தால் அந்த வீட்டைக் காலி பண்ணிவிட்டு, வேறு வீட்டுக்குப் போக வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

பக்கத்துத் தெருவிலேயே ஒரு வீடு வாடகைக்குக் கிடைத்தது. வீதியை விட்டு சிறிது உள்ளடங்கியிருந்தது அது. நீண்ட ஒரு அறை, முன்

வராண்டா, பின்பக்கம் சமையலறை, அதற்கப்பால் சிறு தோட்டம் என்று இடவசதி பெற்றிருந்தது. மாத வாடகை ஏழு ரூபாய். அவசர சமயத்துக்கு வீடு கிடைத்ததே என்ற மகிழ்ச்சி எனக்கு.

அம்மாவுக்கும் சந்தோஷம் தான். அவள் பிறந்த ஊரான கார்சேரியிலிருந்தும், பக்கத்து ஊரான சேரகுளத்திலிருந்தும் அம்மாவின் உறவின்முறையினர் - பெரும்பாலும் பெண்கள் - அவ்வப் போது வந்து போனார்கள். அம்மாவும் சேரகுளம், கார்சேரி என்று போய் வந்து கொண்டிருந்தாள்.

அம்மா அப்படி வெளியூர் போய்விடுகிற நாள்களில் தம்பி முருகேசன் தான் சமையல் வேலைகளை கவனித்துக் கொண்டான். அவன் சமையலில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தான்.

இரண்டு மூன்று நாள்கள், ஒரு வாரம் என்றால், அடுப்படி வேலைகளை கவனித்து சமையல் செய்து, சுசிருசியாக ஆக்கி வைப்பது அவனுக்கு ஒரு பொழுது போக்கு மாதிரி இருந்தது. சந்தோஷமாக அதை செய்தான்.

ஒருமுறை ஊர்வழி போன அம்மா ஒரு மாதத்துக்கு மேலாகியும் திரும்பவில்லை. பிறந்த ஊர், பிறந்த இடத்து உறவுக்காரர்கள் என்று சொந்தம் கொண்டாடி அங்கேயே தங்கிவிட்டாள். அந்த நீண்ட காலத்தில் சமையல் வேலை செய்வது தம்பிக்கு சங்கடமாக இருந்தது.

அத்துடன் அவனுக்குக் காய்ச்சலும் (சுரம்) வந்து சேர்ந்தது. மூன்று நான்கு நாள்களாக சுரம் தணிய வில்லை. சிரமமாகிவிட்டது.

ஒரு ஆள்மூலம் அம்மாவை உடனே வரும்படி சொல்லி அனுப்ப வேண்டியதாயிற்று. அம்மா வந்து சேர்ந்தாள். வருத்தப்பட்டாள். அப்பா காலத்திலேயும் எனக்கு நிம்மதி கிடையாது; பிள்ளைகள் காலத்திலும் எனக்கு நிம்மதியில்லை என்று அலுத்துக் கொண்டாள்.

மனிதமன இயல்புகள் என்னுள் உறுத்தல் ஏற்படுத்தின.

ஆபீசர் அந்தோணிப் பிள்ளையும் அவரது இயல்புகளை மறை முகமாகவும் வெளிப்படையாகவும் புலப்படுத்திக் கொண்டிருந்தார்.

மேஸ்திரி பேரில் வாரம் தோறும் புகார்கள் எழுதி மேலிடத்துக்கு அனுப்பிக் கொண்டிருந்தார். என்னைப் பற்றியும் அவருடைய ரிப்போர்ட்டில் ஏதாவது குறிப்புகள் இடம் பெற்று வந்திருக்கும்.

மேஸ்திரி முத்துசாமி பிள்ளை விற்பனைக்கு உரிய பொருள்களை - மக்காச் சோளம் விதை போன்றவற்றை - சொந்த உபயோகத்துக்காகப் பதுக்கி ஒதுக்குகிறார். பிரசாரத்துக்காக ஊர்கள் தோறும் போவதாகச் சொல்லி, எங்கும் போகாமல், சொந்த ஊரிலேயே தங்கி, சொந்த விவசய அலுவல்களில் ஈடுபடுகிறார் என்ற ரீதியில் அமைந்திருந்தன அவரது கண்டனங்கள்.

மேஸ்திரியிடமிருந்து விளக்கம் கேட்டுக் கடிதங்கள் வந்தன. அவர் தனக்குத் தெரிந்த சமாதானங்களை எழுதிக் கொடுத்தார். ஆனாலும், அந்தோணிப் பிள்ளையின் குற்றச்சாட்டுகள் வலிமை பெற்றனவாகி, மேஸ்திரிக்கு பணிநீக்க உத்திரவு வந்தது.

பாவம், முதியவர் ஓய்வு பெறுவதற்கு இரண்டு அல்லது மூன்று வருடங்கள் தானிருந்தன. அதற்குள் அவருக்கு 'சீட்டுக் கிழித்து' அவரை வீட்டுக்கு அனுப்பிவைத்தார் மேலதிகாரியான டிமான்ஸ்ட்ரேட்டர். அதில் அந்த ஆபீசருக்கு ஒரு வெற்றிப் பெருமிதம்!

பிறகு, அவருக்குத் தெரிந்த ஒருவன், அவரது சிபாரிசின் பேரில், மேஸ்திரியாக நியமிக்கப்பட்டான்.

எனது செயல்களையும் ஆபீசர் மறைமுகமாகக் கவனித்து வந்தார் என்பது தெரிந்தது. நேரடியாக அவர் என்னிடம் எதுவும் கேட்பதில்லை. என்னைப் பற்றி மேஸ்திரியிடம் குறை கூறியிருக்கிறார். மேஸ்திரி பேச்சோடு பேச்சாக அதை என்னிடம் தெரிவித்தார்.

அந்தோணிப் பிள்ளையின் குணங்களும் செயல்களும் என்னுள் வெறுப்பை வளர்த்து வந்தன. எனது படிப்பும் எழுத்து முயற்சிகளும் குறைவின்றி நடந்து கொண்டிருந்தன.

சென்னையில் திரு.வி.க.வின் 'நவசக்தி' நிறுத்தப்பட்டது. திருவேங்கடம் நடத்திய 'பாரதசக்தி'யும் நின்றுவிட்டது. 'பாரதேவி' நாளிதழ் 'பாரத தேவி' என்ற பெயரில் ஒரு வாரஇதழையும் நடத்திக் கொண்டிருந்தது.

அதன் ஆரம்பகட்டம் வெகுசிறப்பாக இருந்தது. ஆனந்த விகடன் மாதிரி, புத்தக அளவில் அது வெளியிடப்பட்டது. வ.ரா. என்று புகழ்பெற்றிருந்த வ. ராமஸ்வாமி அதன் ஆசிரியராகச் செயலாற்றினார். 'மணிக்கொடி' எழுத்தாளர்களான கு.ப. ராஜகோபாலன், சி.சு. செல்லப்பா ஆகியோர் அதன் ஆசிரியர் குழுவில் இடம் பெற்றிருந்தனர்.

கவனிப்புக்குரிய கட்டுரைகள் சிறுகதைகளுடன் 'பாரததேவி' வாரஇதழ் வெளிவந்தது.

ஆயினும், அது வியாபார வெற்றி பெறவில்லை. வாரத்துக்கு வாரம் நஷ்டம் அதிகமாயிற்று. எனவே, நிர்வாகம் விரைவிலேயே வாரப் பதிப்பை நிறுத்திவிட்டது.

'நவசக்தி' வார இதழ் நின்றுபோகவும், அதில் உதவி ஆசிரியராகப் பணியாற்றி வந்த சக்திதாசன் சுப்பிரமணியன் 'பாரத தேவி' அலுவலகத்தில் உதவி ஆசிரியராகச் சேர்ந்தார்.

அவர் தனது பேச்சு சாமர்த்தியத்தினாலும், நம்பிக்கை ஊட்டும் திட்டங்களினாலும், பாரததேவி நிர்வாகத்தை சம்மதிக்க வைத்து, வாரப் பதிப்பை மீண்டும் கொண்டு வர ஏற்பாடு செய்தார். அவரே அதன் ஆசிரியப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்.

'பாரத தேவி' இதழின் புதிய பதிப்பு அகல வடிவம் பெற்றது. ஜனரஞ்சகமான கதைகள், கட்டுரைகள், துணுக்குகள், சினிமா விமர்சனங்கள் எல்லாம் அதில் இடம் பெற்றன. சக்திதாசன் எனக்குக் கடிதம் எழுதி, வாரம் தோறும் எனது கதையைப் பெற்று தொடர்ந்து வெளியிட்டார்.

எனது உற்சாகம் அதிகரித்தது. அதிகம் எழுதவேண்டும் என்ற உள்உந்துதல் என் மனசில் சதா அரித்துக் கொண்டிருந்தது.

இந்தச் சமயத்தில் தான் ஆபீசர் அந்தோணிப் பிள்ளை என்னைப் பற்றி மேலிடத்துக்கு எழுதிய ஏதோ ஒரு ரிப்போர்ட்டுக்கு விளக்கம் அளிக்கும்படி கேட்டு மேல் ஆபீசிலிருந்து கடிதம் வந்தது.

ஆபீசர், மேஸ்திரி விஷயத்தில் செய்தது போல, இனி மேலும் மேலும் என்னைப் பற்றி ஏதாவது எழுதி, தொல்லை கொடுத்துக் கொண்டு தான் இருப்பார். எனக்கு இந்த வேலையிலேயே நீடிக்க வேண்டும் என்ற விருப்பமும் இல்லை; எழுத்துத் துறையில் வளர்ந்து முன்னேற வேண்டும் என்ற ஆசை அதிகரித்து வருகிறது. அதனால், இந்த வேலையை விட்டு விடலாம் என்று தீர்மானித்தேன்.

பக்கத்து வீட்டு வக்கீல் நண்பரிடமும் நிலைமையை சொன்னேன். மேல் ஆபீசுக்கு அனுப்புவதற்கான ஒரு பதிலை அவர் எழுதித் தந்தார். அதை என் கையெழுத்தில் எழுதி ஆபீசரிடம் கொடுத்தேன். அத்துடன் எனது ராஜிநாமாக் கடிதத்தையும் சேர்த்து அளித்தேன்.

அவர் அதிர்ச்சி அடைந்தார். இதை அவர் எதிர்பார்த்தவரல்லர். ஏன் வேலையை விடறீங்க எனக் கேட்டார்.

நான் அரசாங்க ஆபீஸ் குமாஸ்தா ஆகவே வாழ விரும்பவில்லை. எழுத்துத் துறையில் வளர்ந்து முன்னேறவே விரும்புகிறேன். அதற்கு இந்த வேலை தடையாக இருக்கிறது என்று சொன்னேன்.

வீட்டிலே பெரியவங்ககிட்டே எல்லாம் கலந்து ஆலோசித்தீர்களா என்று அவர் கேட்டார்.

இது என் சொந்த விஷயம்; யாரிடமும் யோசனை கேட்க வேண்டிய அவசியம் எதுவுமில்லை என்று தீர்மானமாகச் சொன்னேன்.

நல்லா யோசித்துச் செய்யுங்க என்று அறிவுறுத்தினார் அவர்.

எனது இறுதியான முடிவு இது தான்; நான் இதை மாற்றிக் கொள்ளப்போவதில்லை என்று திட்டமாக அறிவித்தேன்.

அதன்பிறகு அவர் ஒன்றும் சொல்லவில்லை. எனது ராஜிநாமாக் கடிதத்தை மேல் ஆபீசுக்கு அனுப்பிவைத்தார். அங்கு அது ஏற்றுக் கொள்ளப்பட்டு உத்திரவு வந்த பிறகுதான் பொறுப்பை ஒப்படைத்து விட்டு வெளியேற முடியும்.

மேல் ஆபீசிலிருந்து உரிய கடிதம் வருவதற்கு ஒரு மாதம் ஆயிற்று. அது வரை வழக்கம் போல் நான் அலுவலகம் சென்று எனது பணிகளை செய்து கொண்டிருந்தேன்.

விவசாய ஆபீசுக்கு, பல வருடங்களாக இருந்த வந்த அந்தப் பெரிய வீடு தேவையில்லாதது; வேறு இடம், கடைத்தெருப் பக்கம் பார்க்க வேண்டும் என்று அந்தோணிப் பிள்ளை கருதினார். மேலிடத்துக்கு எழுதி அதற்கான இசைவு பெற்று, தகுதியான வேறு இடம் தேடினார். அவர் குடியிருந்த வீட்டுக்கு அருகிலேயே, ஒரு சிறு கட்டிடம் கிடைத்தது. அங்கு ஆபீசை மாற்றுவதற்கான அலுவல்களில் அவரும், மேஸ்திரியும், மெசஞ்சரும் மும்முரமாக ஈடுபட்டார்கள்.

அந்த இடத்தை நானும் போய் பார்த்தேன். எனக்கு அது பிடிக்கவே யில்லை. நல்ல வேளை! இங்கு வந்து வேலை பார்ப்பதற்கு அவசியம் இல்லாமலே நான் வேலையை விட்டுவிட்டது நல்லதாயிற்று என்று என் மனம் சந்தோஷம் அடைந்தது.

நாங்கள் குடியிருந்த வீட்டை காலி செய்து சாமான்களை எங்கே

அனுப்புவது; ராஜவல்லிபுரம் வீட்டுக்கே கொண்டு போகலாமா என்ற பிரச்சினை எழுந்தது.

ராஜவல்லிபுரம் போய் தங்குவதை அம்மா விரும்பவில்லை. அதனால், திருநெல்வேலியில் 'தி மெடிகல் ஸ்டோர்ஸ்' என்ற மருந்துக் கடையில் வேலை பார்த்துக் கொண்டிருந்த அண்ணன் கோமதி நாயகத்துக்கு எழுதினோம்.

திருநெல்வேலி டவுணில், ஒரு சிறு அறையில் தங்கிக் கொண்டு அண்ணன், ஒரு ஆச்சி நடத்திய சாப்பாட்டு விடுதியில் சாப்பிட்டுக் கொண்டு காலம் கழித்தார்.

குறிப்பிட்ட சிலபேருக்கு மட்டும் சாப்பாடு தயாரித்து வழங்கிக் கொண்டிருந்தாள் அந்த ஆச்சி. காலையில் பலகாரம் - இட்டிலி அல்லது தோசை, மத்தியானமும் இரவும் சாப்பாடு கிடைக்கும். வசதியாகத் தான் இருந்தது.

திருநெல்வேலியிலேயே ஒரு வீடு வாடகைக்கு அமர்த்தி, அங்கேயே எல்லோரும் ஒன்றாக இருக்கலாம் என்று முடிவு செய்யப்பட்டது. அண்ணன் அரசடிப்பாலத் தெருவில் வசதியான ஒரு வீட்டைப் பார்த்து உரிய ஏற்பாடுகளை செய்தார்.

எனக்கு விடுதலை அளிக்கும் உத்திரவு மேல் ஆபீசிலிருந்து வந்து சேர்ந்தது. நான் சுதந்திரன் ஆனேன்.

வீட்டுச் சாமான்கள் எல்லாம் உரியமுறையில் கட்டி மூட்டை களாக்கப்பட்டன. ஒரு வண்டியில் அடங்கிவிடும். வண்டியும் பேசியாயிற்று. சாமான்களை வண்டியில் ஏற்றிக் கொண்டு, தம்பியும் உடன்வர, திருநெல்வேலியில் சேர்க்க வேண்டும். அம்மாவும் நானும் ரயிலில் போவது என்றும் தீர்மானமாயிற்று.

அதற்கு முன்னர் திருச்செந்தூருக்குப் போய், முருகனை சேவிக்க வேண்டும்; இனியாவது நமக்கு நல்ல காலம் வரணும் என்று கும்பிட்டு விட்டு திருநெல்வேலிக்குப் போகலாம் என்று அம்மா கருதினாள். எனது போக்குகள் அம்மாவுக்குப் பிடிக்கவில்லை. இருந்த வேலையை வேண்டாம் என்று உதறியது அவளுக்கு அறவே பிடிக்கவில்லை.

அம்மா விருப்பப்படியே நாங்கள் - அம்மா, நான், தம்பி முருகேசன் - மறுநாள் திருச்செந்தூர் போனோம்.

எனது ஆறாவது வயசில், நாங்கள் பெருங்குளத்தில் வசித்தபோது, போனதற்குப் பிறகு இப்போது தான் - எனது இருபத்து ஓராவது வயசில் - மறுபடியும் திருச்செந்தூர் போனேன்.

பதினைந்து வருடங்களில் அந்த ஊர் பெரிய மாறுதல்களைப் பெற்றிருக்கவில்லை. சாதாரண கிராமமாகத் தான் இருந்தது. கோயில் பக்கம் தான் ஆள்களின் நடமாட்டமும் சிறிது பரபரப்பும் இருந்தது. பிற்காலத்தில் ஏற்பட்ட பெரும் மாற்றங்கள் அப்போது ஏற்பட்டிருக்க வில்லை. பயணிகள் தங்குவதற்கு வசதியான லாட்ஜுகள் மற்றும் குறைந்த வாடகை அறைகளைக் கொண்ட கட்டிடங்கள் முளைத்திருக்கவில்லை. பிரகாரத்தில் காங்கிரீட் தளம் தலைகாட்டவில்லை. மணல் பரப்பு சுத்தமான விசாலப் பெரும் வெளியாகவே கிடந்தது.

சர்வசாதாரண நாள் அது. 'கடைசி வெள்ளிக்கிழமை', கிருத்திகை போன்ற விசேஷ தினமாக இருந்திருப்பின், கூட்டம் சற்று மிகுதியாக இருக்கும். அன்று கூட்டமே இல்லை. சத்திரத்தில் தங்குவதற்கு வசதியான அறை கிடைத்தது.

நாங்கள் அன்று இரவு அங்கேயே தங்கினோம். கோயில் தரிசனத்தை விட அலைபாயும் கடலின் காட்சி என்னை அதிகம் வசீகரித்தது. மறுநாள் அதிகாலையில் வந்து, கடலில் சூரியன் உதயமாகும் அற்புதக் காட்சியைக் காணவேண்டும் என்று தீர்மானித்தேன்.

அதிகாலையில் எழுந்து வந்து கடலில் நீராடினோம். அந்தத் தண்ணீரின் பிசுபிசுப்பைப் போக்குவதற்காக, நாழிக் கிணற்றில் நீர் மொண்டு சௌகரியமாகக் குளித்தோம். கோயிலினுள் சென்று சாமி தரிசனம் செய்தோம். பிறகு வெளியே வந்து கடலைப் பார்த்தபடி காத்திருந்தோம், உதய சூரியனின் அழகுத் தோற்றத்தைக் காண்பதற்காக.

குளிர் காற்று வீசிக் கொண்டிருந்தது. அம்மாவுக்கு உடல் நடுக்கம் ஏற்பட்டது. இருந்தாலும், சூரியன் வருவதை பார்த்து விட்டுப் போகலாம் என்று நாங்கள் சொன்னதால், குளிரை சகித்துக் கொண்டு நின்றாள்.

கீழ்வானத்தில் அற்புதம் நிகழ்ந்து கொண்டிருந்தது. இருள் மாறியது. வெளிச்சம் படரலாயிற்று. செவ்வொளி ரேகை பரப்பியது. அடிவானம் ஒளிமயமாயிற்று. வண்ணமும் வனப்பும் பெற்றது. அதன் பிரதிபலிப்பாய் கடல் நீரும் எழிற்கோலம் கொண்டது. சூரிய வட்டத்தின் பிரகாசமான

விளிம்பு தென்பட்டது. ஒளிவட்டம் தகத்தகாயமாக மேலேறியது. வர்ணனைக்கு உட்படாத அற்புத மலர் மொட்டு ஒன்று நீருக் குள்ளிருந்து மேலேறி வந்ததாகத் தோன்றியது. விரைவிலேயே வானமும் கடலும் பேரொளிப் பரப்பாயின. சூரியன் வேகமாக மேலேறியது.

புதிய உதயம். புத்தொளி பெற்ற மற்றுமொரு நாள். என் உள்ளத்தில் அது உவகைப் பெருக்கை நிரப்பியது. மறக்க முடியாத உதயம் அது.

## ⌘ 13 ⌘

என் வாழ்க்கையிலும் புதிய உதயம் என்றுதான் சொல்ல வேண்டும்.

மூன்று வருடங்களும் ஏழு மாதங்களும் விவசாய ஆபீஸ் குமாஸ்தா வேலையில் கழிந்திருந்தன. பரமக்குடியில் இரண்டு வருடங்களும், மீதிக் காலம் ஸ்ரீவைகுண்டத்திலுமாகப் போயிருந்தன.

அந்த வேலையை நான் முயன்று தேடிப் பெறவில்லை. உறவினர் ஒருவரின் உதவியால் அது என்னை தேடி வந்தது. நான் அதை விட்டு விட்டேன் என்று அறிந்ததும் அந்தப் பெரியவர் வருத்தப்பட்டார். கோபமும் கொண்டார். அவரிடம் யோசனை கேட்காமல் நானாக வேலையைப் போக்கிக் கொண்டது நான் அவருக்கு இழைத்த அவ மதிப்பு என்றும் கருதினார்.

அதற்கு நான் என்ன செய்யமுடியும்? காலம் காட்டிய வழி என்றே என் மனம் கூறியது.

இருக்கிற வேலையை விட்டுப்போட்டு இனிமேல் என்ன பண்ணப் போகிறானாம் என்று என் பெரிய அண்ணாச்சி கல்யாண சுந்தரம் விமர்சித்தார்.

இனி என்ன செய்வது, எப்படி முன்னேறுவது என்ற எண்ணம் எதுவும் எனக்கு எழுந்ததில்லை. நான் எப்படியும் ஒரு நல்ல எழுத்தாள னாக வளர்ந்தே தீர்வேன் என்ற உறுதி என்னுள் படிந்திருந்தது. நிறைய எழுத வேண்டும், நிறைய நிறையப் படிக்க வேண்டும் என்றொரு உறுத்தல் என்னுள் ஓயாது அழுத்திக் கொண்டிருந்தது.

சரி, உன் விருப்பம் போல் படித்து எழுதி முன்னேறு என்று என் அண்ணா கோமதிநாயகம் ஆதரவு தந்தார்.

'நீ எல்லாம் எழுதி முன்னுக்கு வரமுடியாது. நீ வேலையை விட்டது தப்பு' என்று ஓங்கிய குரலில் சொன்னார் ஒரு பெரியவர். ராஜவல்லிபுரம்காரர். எனக்கு உறவுக்காரரும் கூட. 'பார்த்த வேலையில் இருந்து கொண்டே மனதிருப்திக்காக எழுதலாம். ஏதாவது ஒரு வேலையில் இருந்தபடி எழுதுவது தான் சரிப்பட்டு வரும். அரசாங்க ஆபீஸ் வேலை பிடிக்கவில்லை என்றால், சின்னதாக ஒரு கடைவைத்துக் கொண்டு பிழைக்க வழி தேடு. அதோடு உன் விருப்பம் போல் எழுது, படி, எழுத்தையும் படிப்பையுமே முழுநேர வேலையாகக் கொள்வேன் என்பது புத்திசாலித்தனமில்லை. ஏதாவது பத்திரிகை ஆபீசில் சேர்ந்து முன்னேறிவிடலாம் என்று நினைத்தால், அது வெறும் கனவு தான். நடைமுறையில் சரிப்பட்டு வராத விஷயம் அது. நம்மைப் போன்றவங்களாலே சொந்தமாகப் பத்திரிகை நடத்தி உயரவும் முடியாது. அதுக்கு நிறையப் பணம் வேணும். வேறு திறமைகளும் வேணும்' என்று நீண்ட நேரம் பேசினார் அவர்.

அப்படி எனக்கு உபதேசிப்பதற்கு அந்தப் பெரியவருக்கு உரிமையும் தகுதியும் இருந்தன. அவருக்குப் பல வருடப் பத்திரிகைத் துறை அனுபவம் இருந்தது. அவர் இலங்கை போய் கொழும்பு 'வீரகேசரி' பத்திரிகையில் உழைத்து முதிர்ந்திருந்தார். அங்கு அநேக வருடங்கள் பணி புரிந்து விட்டு வெறும் ஆளாக ஊர் திரும்பி வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்தார்.

எனக்கு நல்லது எண்ணி அவர் சொன்ன சொற்கள் எனக்கு ஏற்புடையனவாக இருக்கவில்லை. எவருடைய நல்லுரையையும் கேட்டுச் செயல்புரியக் கூடிய நிலையில் நான் இருந்தேனில்லை. என் மனக்குரலுக்கே நான் செவிசாய்த்தேன்.

உழைத்து, என்னை தகுதிப்படுத்திக் கொண்டு எழுத்துலகில் முன்னேற வேண்டும். இதுவே என் குறிக்கோளாக இருந்தது.

வளர்வேன், முன்னேறுவேன் என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது. ஆகவே மற்றவர்கள் பேச்சை நான் பெரிது படுத்தவில்லை.

எழு, விழி, உணர், ஒளிர்! இலட்சியத்தை அடைகிற வரை சோர்ந்து

*நிற்காதே! - சுவாமி விவேகானந்தரின் உத்வேகம் ஊட்டுகிற இச்சொற்கள் என்னுள் எப்போதும் கன்றுகொண்டிருந்தன.*

*உறுதியான இந்த மனநிலையுடன், எனது வாழ்வின் புதிய அத்தியாயம் 1941 ஜுன் மாதம் திருநெல்வேலியில் துவங்கியது.*

⌘

வல்லிக்கண்ணன் என்ற எளிய மனிதரின் சுயசரிதை இது. இந்நூலில் அவர் சரிதையினூடாக தென் தமிழகக் கிராமங்கள், ஊர்கள், சிறுநகரங்கள் ஆகியவற்றின் மாற்றங்களும் அவற்றில் வாழ்ந்த மனிதர்கள் வாழ்வில் நிகழ்ந்த மாற்றங்களும் அற்புதமாகப் பதிவாகியிருக்கின்றன. ஒரு காலகட்டத்தின் கதையாக இது உருவாகியிருக்கிறது. சுயசரிதை வரலாற்றில் ஒரு மிகச்சிறந்த புத்தகம் இது. இரண்டாம் பாகத்தை எழுதும் பணியில் வல்லிக்கண்ணன் தற்சமயம் ஈடுபட்டிருக்கிறார்.

